

# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

## தொலைநிலைக் கல்வி



# எம்.ஏ.

## பொதுத்துறை ஆட்சியியல் & அரசியல் அறிவியல்

### இரண்டாம் ஆண்டு

தாள் - VII & தாள் - V

# மனித உரிமைகள்

DEC அங்கீகாரம் பெற்றது

www.mkudde.org

# S 167 / S 272



# மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)

தொலைநிலைக் கல்வி



# எம்.ஏ.

## பொதுத்துறை ஆட்சியியல் & அரசியல் அறிவியல்

## இரண்டாம் ஆண்டு

தாள் - VII & தாள் - V

# மனித உரிமைகள்

DEC அங்கீகாரம் பெற்றது

www.mkudde.org

# S 167 / S 272

**எம்.ஏ இரண்டாம் ஆண்டு**

**பொதுத்துறை ஆட்சியியல்**
**அரசியல் அறிவியல்**

அன்புள்ள மாணவர்களுக்கு.

பொதுத் துறை ஆட்சியியலிலும் அரசியல் அறிவியலிலும் புதிதாக மனித உரிமைகள் என்ற தாள் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. இத்தாளில் மக்களுக்கு வேண்டிய உரிமைகளின் அவசியம், அவற்றின் விழிப்புணர்வு மற்றும் அவற்றை எவ்வாறு காக்க வேண்டுமென்பது குறித்து எளிமையாக விளக்கப்பட்டுள்ளது. மக்களாட்சி மாண்புற வேண்டுமானால் மக்கள் தங்கள் உரிமைகளைக் கொண்டிருக்க வேண்டும். இத்தாள் 10 பாடங்களைக் கொண்டுள்ளது. மாணவர்கள் தொடர் வகுப்புகளில் கலந்து கொண்டு பயன் பெறுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**பொதுத்துறை ஆட்சியியல் துறை**
**அரசியல் அறிவியல் துறை**

## M.A. Pubile Administration ( Non - Semester)

(To come into effect for students joining the course from the academic year 2005 - 2006)

### Paper VII - Human Rights
### Syllabus

**Unit I**

Meaning, Nature and Definition of Human Rights - Historical Development - Characteristics of Human Rights - Theories of Human Rights - Rationale of Human Rights.

**Unit II**

International organizations and Human Rights: U.N.O. Universal Declaration of Human Rights - Amnesty International - European Commission on Human Rights - Asia Watch.

**Unit III**

Indian Constitution and Human Rights - Fundamental Rights and Duties - Directive priniciples of State policy - Civil and Political Rights.

**Unit IV**

Issues in Human Rights - Capital punishment - Bonded Labour and wages - Female infanticide - Right to Dissent - SC and ST.

**Unit V**

Women's Rights - Children's Rights - Refugee's Rights - Human Rights Machinery in India - National Human Rights Commission - State Human Rights Commission.

**Reference Books:**

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

# SYLLABUS FOR PAPER M.A. POLITICAL SCIENCE
# NON - SEMESTER

## HUMAN RIGHTS

**Unit I**

Meaning, NRature and Definition of Human Rights - Historical Development - Characteristics of Human Rights - Theories of Rights - Retionale of Human Rights.

**Unit II**

International organizations and Human Rights: U.N.O Universal Declaration of Human Rights - Amnesty International - European Commission on Human Rights - Asia Watch.

**Unit III**

Indian Constitution and Human Rights - Fundamental Rights and Duties - Directive priniciples of State policy - Civil and Political Rights.

**Unit IV**

Issues in Human Rights - Capital punishment - Bonded Labour and wages - Female infanticide - Right to Dissent - SC and ST.

**Unit V**

Women's Rights - Children's Rights - Refugee's Rights - Human - Rights Machinery in India - National Human Rights Commission - State Human Rights Commission.

**Reference Books:**


1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.
2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.
3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.
4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.
5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.
6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

# பாடங்கள்

1. மனித உரிமைகள் மற்றும் வளர்ச்சி
2. மனித உரிமைகளின் பண்புகள் மற்றும் கோட்பாடுகள்
3. மனித உரிமைகளின் அடிப்படை நியதி, ஐ.நா அவை மனித உரிமை முறைமை மற்றும் பன்னாட்டு பொது உரிமைக் கழகம் .
4. பன்னாட்டு பொது உரிமைக் கழகம், ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் - ஆசியக் காவலன்.
5. அடிப்படை உரிமைகள், மற்றும் அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்
6. மரண தண்டனை மற்றும் கொத்தடிமை.
7. பெண் சிசுவதை மற்றும் மறுப்பு உரிமை
8. தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் உரிமைகள் மற்றும் பெண் உரிமைகள்
9. சிறுவர்களும் மனித உரிமைகளும்
10. தேசிய மனித உரிமை ஆணையம் மற்றும் மாநில மனித உரிமை ஆணையம்

# அலகு - 1

## மனித உரிமைகள் மற்றும் வளர்ச்சி

**அறிமுகம்:**

இயற்கைச் சட்டமென்பதிலிருந்து (Natural law) மனித உரிமைகள் உருவானதென்பதை நாம் அறிவோம். இயற்கை சட்டமும் சமூகத்தில் மனித உரிமைகளும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டது. சமூகத்தில் மனித உரிமைகள் என்பது இயற்கைச் சட்டத்தினால்தான் ஏற்பட்டது. ஏனெனில் மனித உரிமைகளை சமூகம் ஏற்று அங்கீகரிக்கவேண்டும். மனித உரிமைகள் மனிதனிடமிருந்து (inalienable) பிரிக்க முடியாத ஒன்று. மனிதன் முழுமையாக உணர்ந்து அனுபவிக்கவல்லது மனிதன் உரிமைகளாகும்.

மனித உரிமைகள், பொதுத்துறை ஆட்சியியல் மற்றும் அரசியல் அறிவியல் பாடங்களில் மிகவும் முக்கியமான இடத்தைப் பிடித்துள்ளது. மனித உரிமைகள் மக்களாட்சியை நடத்தவல்ல அடிப்படையான ஒன்றாகும். பன்னாட்டு அளவிலும் மனித உரிமைகள் மிகவும் சிறப்பான ஒன்றாக கருதப்படுகின்றன. எனவே உள்நாட்டு அளவிலும் பன்னாட்டு அளவிலும் ஒவ்வொரு மனிதனுக்கும் அவசியமானது மனித உரிமைகள். இவற்றை நாம் பராமரித்து பாதுகாக்க வேண்டும்.

**நோக்கங்கள் :**

1. மனித உரிமைகளின் இயல்பை கற்றல்
2. மனித உரிமைகளுக்கு விளக்கம் அறிதல்
3. மனித உரிமைகளின் வளர்ச்சியை ஆராய்தல்

**வடிவ அமைப்பு :**

**உட்கூறுகள்**

1.1 மனித உரிமைகள் இயல்பு

1.2 உரிமை விளக்கம்

1.3 மனித உரிமைகள்

1.4 மனித உரிமை கோட்பாடுகள்

## 1.1 மனித உரிமைகளின் இயல்பு

மனித உரிமைகள் என்று சொல்லும் பொழுதே அவற்றின் இயல்பையும், தன்மையையும் தெரிந்து கொள்ளும் வகையில் வெளிப்படையாக விளக்கும் வகையில் அமைந்துள்ளன. மனிதர்களுக்கு மட்டும் பொருந்தும் வகையில் மனிதனின் உரிமைகளாக இவை அமைந்துள்ளன. எல்லா மனிதர்களுக்கும் பொருந்தும்வகையில் அமையப்பெற்றுள்ளன. குடிமகனாக இருந்தாலும்சரி, குடும்ப உறுப்பினராயினும்சரி தொழிலாளர்கள் மற்றும் பிற தனியார் அமைப்புக்களின் உறுப்பினர்களாக இருந்தாலும்சரி, அனைவருக்கும் பொருந்தும் வகையில் அமையபெற்றுள்ளது மனித உரிமைகள். 1948ஆம் ஆண்டு மனித உரிமைப் பிரகடனத்தில் இவை உலகளவிலான உரிமைகள் (Universal) என்று பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. இவை எல்லா மனிதர்களுக்கும் பொருந்தும் வகையில் சமத்துவமாக அமைப்பெற்றுள்ளன. இவ்வுரிமைகளை அழிக்கவோ, (renounced) மறுக்கவோ பிரிக்கவோ முடியாது. மனிதனோடு ஒட்டியே சேர்ந்து இருக்கக்கூடியது மனித உரிமைகள் ஆகும்.

## 1.2 உரிமை விளக்கம் :

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1.உரிமை என்றால் என்ன?

உரிமை என்றால் என்ன என்பதைக் காண்போம். ஆங்கில அகராதியின்படி உரிமை என்பது இரண்டு முக்கியமான கருத்துக்களை வெளியிடக்கூடியதென விளக்குகின்றது. அவற்றில் ஒன்று அறநெறி, மற்றொன்று அரசியல் தன்மை ஆகும். உரிமை என்பது அறநெறி. அதாவது

எது சரியானது. எதனைச் செய்யலாம் என்பதைக் குறிப்பிடுவது தேவைப்படுபவர்களுக்கு உதவி செய்தல், பொய் சொல்லுவதற்கு எதிரானது. அதாவது அறநெறிக்கு எதிரானது. இதுபோல் திருட்டு. ஏமாற்று ஆகியன சரியான செயல்கள் அல்ல. எனவே சரியானதைச் செய்வது உரிமை. அதாவது (Right) சரியானது ஆகும். எனவே சரியானவற்றை ஒவ்வொருவரும் செய்யவேண்டுமென்பது உரிமை. இவற்றை மீறுவது மனித உரிமைகளை மீறுவது. இவ்வுரிமைகள் சமூகத்தால், அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்படுவதால் மனித உரிமை மீறல் எவை உரிமைக்கு எதிரானவை எவை என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

உரிமை என்பதன் மூலம் சரியான செயல்களைச் செய்வதால் மக்களுக்கும் அந்த செயல்களைச் செய்தவர்களுக்கும் இடையே தொடர்புகள் உருவாகின்றன. இவற்றின் மூலம் அந்தச் செயல்களை செய்தவர்கள் அச்செயல்களின் மூலம் நன்மை பெறுகின்றனர். ஆகவே உரிமைகள் மூலமாக தனித்துவ ஒழுங்கு முறைகள், நடைமுறைகள் மற்றும் சமூக நிறுவனங்கள் ஆகயவற்றோடு தொடர்புகள் உருவாகின்றன. உரிமை என்பதை வைத்து சரியான செயல், செய்கைகள் ஒரு சிறந்த இடத்தை சமூகத்தில் பெறுகின்றது.

உரிமை மூலம் சிறந்த இடத்தைப் பிடித்தாலும், பிற செயல்களைக்காட்டிலும் இது முடிவன முன்னுரிமை பெற்றது என்று கூற முடியாது. இவர்கள் இவ்வாறு மற்றவர்கள் செயல்பட வேண்டுமென ஆதிக்கமோ, அறிவுரையோ கூற இயலாது. இருப்பினும் இவர்கள் செய்த செயல்களால் இவர்களது அதிகாரம் மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாக இருக்கும். இது மற்றவர்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் வாய்ந்ததாகக்கூட கருதப்படலாம்.

### 1.3 மனித உரிமைகள் :

மனித உரிமைகள் என்பது ஒரு சிறப்புத்தன்மை கொண்ட உரிமைகளாகும். அடிப்படையில் இவை அறநெறிக்கு முக்கியத்தும் கொடுக்கக்கூடியது. இவற்றைப் பன்னாட்டு சட்டங்களும் அங்கீகரித்துள்ளன. பல நாடுகள் தங்களின் அரசியலமைப்பு சட்டங்கள் மற்றும் சட்ட நடவடிக்கைகளில் இவற்றைச் சேர்த்துள்ளன. பாரபட்சமின்றி நடத்துதல் சங்கம்

அமைக்கும் உரிமை போன்றவற்றைக் காக்க பல நாடுகள் முயற்சி செய்துள்ளன. அரசியலமைப்புக்களின் உத்திரவாதமும் வழங்கியுள்ளன.

மனித உரிமைகளுக்கு தேசிய சட்டங்களும், நடைமுறைகளும உததிரவாதம வழங்கினால்தான், மனித உரிமைகளைக் காக்க முடியும். உதாரணமாக உணவுப் பாதுகாப்பு, பாரபட்சமாகப் பாவித்தல், சங்கம் அமைக்கும் உரிமை ஆகியன உத்திரவாதம் வழங்கப்பட்டால்தான் அவை உரிமைகளாக மக்கள் கோர முடியும். உதாரணமாக அமெரிக்க ஐக்கிய நாட்டில் இவை சட்டபூர்வமாக அரசியலமைப்பாலும், சட்டத்தாலும் வழங்கப்பட்டுள்ளது. இதுமாதிரியாக பாலின வேறுபாடும் நீக்கப்பட்டுள்ளது. இவை மறுக்கப்படும்போது மனித உரிமை மீறல் வெளிப்படும். எனவே இவை மக்களின் சிவில் உரிமைகள் என அரசியலமைப்பாலும், சட்டத்தாலும் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளன.

மனித உரிமைகளை மக்கள் உணர்ந்து, ஏற்று, அவற்றில் கண்ணும் கருத்துமாக இருந்தால்தான் மனித உரிமைகளைக் காக்கமுடியும். அரசாங்கத்திற்கு எதிராகச் செல்ல நிர்ப்பந்தப்பட்டால் அரசாங்கத்திற்கு எதிராகவும் சென்று உரிமைகளைக் காக்க வேண்டும். அவ்வாறு செல்லும் சமயங்கள்தான் சட்டபூர்வமான பாதுகாப்பு மனித உரிமைகளுக்கு கிடைக்கின்றது. அரசாங்கம் மனித உரிமைகளின் சாராம்சங்களை பாதிக்கப்படாத வகையில் மக்கள் உரிமைகளைக் காக்கும் நிலையில் சட்டங்களை இயற்ற முயற்சிக்க வேண்டும்.

மனித உரிமைகள் அடிப்படை உரிமைகளாகும். சமூகத்தில் ஒரு சிறந்த முறையில் வாழ வழிவகை செய்வது மனித உரிமைகள். மனிதர்களை சுதந்திரமாகவும் , வசதியாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்க வைப்பது மனித உரிமைகள். சமூகத்தில் நல்வாழ்வு வாழ வகை செய்யும் கட்டுப்பாடுதான் உரிமைகளாகும். சுதந்திரத்தைப் பெறுவதற்கு மனிதர்களுக்கு உதவி செய்வது உரிமைகளாகும். மனித உரிமைகளுக்கு அரசு உத்திரவாதம் வழங்க வேண்டும். அப்போதுதான் உரிமைகளைப் பயன்படுத்த முடியும். மனித உரிமைகள் என்பது கட்டுப்பாடுகளில்லாத தன்னிச்சையாக எதுவும் செய்யலாம் என்பது அல்ல. உரிமைகளுக்கு உத்திரவாதம் வழங்கி அவற்றிற்குக் கட்டுபாடுகளை வரையறுக்க அரசுக்கு உரிமையுண்டு. கட்டுப்பாடுகளில்லாத உரிமைகள் உரிமைகள் அல்ல.

## 1.4 மனித உரிமைக் கோட்பாடுகள் :

மனித உரிமைகளைக் கோட்பாடுகளாக்க முயற்சி செய்வோமாயின் மூன்று விதமான கோட்பாடுகள் உருவாகின்றன. சிவில் உரிமைகள், சிவில் சுதந்திரம் மற்றும் மனித உரிமைகள் இவை ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவைகள்தான். இவற்றில் சிவில் சுதந்திரம் என்பது அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பை வரையறுக்கக்கூடியது. உதாரணமாக, எழுத்துரிமை, பேச்சுரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, மத உரிமை, மனசாட்சி உரிமை என பல உரிமைகளை அரசாங்கம் வழங்கியுள்ளன. இவை அனைத்தும் சிவில் சுதந்திரமாகும்.

சிவில் உரிமைகள் என்பது அமெரிக்க ஐக்கிய நாட்டில் நீக்ரோ மற்றும் பிற வகையான இனக்குழுவினர்கள், சிறுபான்மையினர்களை அரசியல் சமூகத்தில் சமத்துவம் கோரிப் போராடிப் பெற்ற உரிமைகள், சிவில் உரிமைகள். முற்காலத்தில் சிவில் சுதந்திரம் மற்றும் சிவில் உரிமைகள் ஆகியன பொதுவாகவே கருதப்பட்டு, இரண்டையும் ஒரே மாதிரிக் கண்ணோட்டத்தில் பயன்படுத்தினர். மனித உரிமைகள் என்பது பரந்த அளவில் சிவில் சுதந்திரம் மற்றும் சிவில் உரிமைகள் ஆகிய இரண்டையும் உள்ளடக்கியதாகும். இவற்றோடு வேலை உத்திரவாதம். வீட்டு வசதி மற்றும் மருத்துவப் பணிகள் ஆகியவையும் மனித உரிமைகளோடு சேர்ந்து விட்டன.

அடுத்து மனித உரிமைகளின் வளர்ச்சி குறித்துக் காண்போம்.

## 1.5 மனித உரிமைகளின் வளர்ச்சி:

இயற்கை உரிமைகள், மனித உரிமைகள் ஆகியவற்றை 18ம் நூற்றாண்டிலேயே தத்துவ ஞானிகள் தங்களது எழுத்துக்களில் தொகுத்துள்ளனர். அமெரிக்கப் புரட்சியின் சாசனங்கள். சுதந்திரப் பிரகடனம் 1789ம் ஆண்டின் உரிமைகள் சாசனம் ஆகியன உரிமைகள் என்ன என்பதை வரையறுத்துள்ளன. எல்லா மனிதர்களுக்கும் உரிமை உண்டு என்பதையும், உரிமைகளோடு அரசாங்கத்திற்கு எத்தகைய தொடர்பு என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளன. ஐக்கிய நாடுகளின் மனித உரிமை மகாசாசனம் 1948 மிகவும் முக்கியமான ஒரு சாசனமாகும். இது உலக அளவில் மனித உரிமைகள் என்னென்ன என்பதை விரிவாகக் கூறியுள்ளது.

## 1.6 21ம் நூற்றாண்டு முந்திய நிலை:

முன்னேற்றத்தை அறிவதற்கான தன் னிறைவு சோதனை வினா ? 2.மனித உரிமை பற்றிய 21ம் நூற்றாண்டுக்கு முந்திய நிலை கூறுக

மனித உரிமைகள் என்பது தொடர்ந்து அதிகரித்து வரக் கூடியதாகவே அமைந்துள்ளது. 18ம் நூற்றாண்டுத் தத்துவ ஞானிகள் தொகுத்துள்ள உரிமைகளைக் காட்டிலும் அதிகமான உரிமைகளின் பட்டியரை அமெரிக்க சிவில் உரிமைக் கழகம் தனது ஐம்பதாவது ஆண்டு அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது. இதில் சம கல்வி வாய்ப்பு, சம வேலை வாய்ப்பு வீட்டு வசதி, நல்வாழ்வுப் பணிகள், சட்டப் பணிகள், அரசியல் பங்கேற்பு, சங்கம் அமைத்தல், எதிர்ப்பது, போராடுவது, பத்திரிக்கைகளுக்கு எழுதிப் பிரசுரித்தல், சொத்துரிமை பொதுமக்கள் சாதனங்களை அணுகுதல், மத உரிமை, பயண உரிமை என நீண்ட பட்டியளை தந்துள்ளது. இவை மட்டுமல்ல, மக்களாட்சி நடைபெறும் வளர்ந்த தொழில்நுட்ப நாடுகளில் மக்களின் மனித உரிமைகள் மிகவும் அதிகமாகத் தொடர்ந்து அதிகரித்த வண்ணம் உ்ளளன.

ஆரோக்கியமான சுற்றுப்புறச் சூழல், தனி நபர் வாழ்வுரிமை (Privacy) ஆகியன மனித உரிமைகளில் விடப்பட்ட உரிமைகளாகும். இவற்றை பாதுகாக்க அமெரிக்க ஐக்கிய நாட்டிலும், கனடா நாட்டிலும் அவற்றின் நீதிமன்றங்களும், சட்ட மன்றங்களும் நடவடிக்கைகள் மேற்கொண்டுள்ளன. சில உரிமைகளுக்கு சட்டங்களும், அரசியலமைப்புக்களும் உத்திரவாதம் வழங்கினாலும், செயல்படுத்துவதில் சிரமமாக உள்ளன. உலக அளவில் மனித உரிமைகளின் முக்கியத்துவம் இப்போதுதர்ன ஏற்பட்டு வருகின்றது. 1948ம் ஆண்டு ஐ.நா மனித உரிமைகள் மகாசாசனம் பிரகடனத்தைப் பல நாடுகள் ஏற்று அங்கீகரித்து செயல்படுத்தினாலும், சில உரிமைகள் மீது பொதுவான இணக்கம் ஏற்படாதவாறு உள்ளதால் அவற்றைச் செயல்படுத்த முடியவில்லை. மனித உரிமைகளை மீறாதவாறு காத்தல், மீறியவர்கள்மீது தண்டனை வழங்கல் ஆகியவற்றை மேற்கொள்ள சட்டங்கள் ஒழுங்கு விதிகள் மற்றும் நிறுவனங்கள் தேவை. எனவே மனித உரிமைகள் சட்டமுறையை வளர்க்க வேண்டும். இதன் மூலம் மனித உரிமைகளைக் காக்கலாம். மீறியவர்களைத் தண்டிக்கலாம்.

உலகளவில் யூதர்கள் (Jews) பிரச்சனை, முதல் மற்றும் இரண்டாம் உலகப்போர். மேலைநாடு, கீழைநாடு மோதல், பனிப்போர் ஆகியன மனித உரிமை வளர்ச்சிக்கு பெரிதும் உதவியுள்ளன. மனித உரிமைக் கோட்பாட்டை விரிவாக்கம்

செய்துள்ளன. பன்னாட்டு சட்டங்கள் மூலமே மனித உரிமைகள் மலர்ந்துள்ளன என்று வைத்துக்கொண்டாலும், அடிப்படையில் அரசுக்கும் மக்களுக்கும் இடையே ஏற்பட்ட போராட்டத்தின் விளைவாகவே அடிப்படை சுதந்திரம் மக்களுக்குக் கிடைத்துள்ளன என்பது மிகையல்ல. இங்கிலாந்தில் 1688ம் ஆண்டு அமைதிப் போராட்டம் அல்லது மாண்புறு புரட்சி (Glorious Revolution) 1776ம் ஆண்டின் அமெரிக்கா சுதந்திர பிரகடனம் 1789ம் ஆண்டின் பிரெஞ்சுப் புரட்சி ஆகியன மக்களின் அடிப்படை சுதந்திரத்தை வரையறுத்த மக்களாட்சி அரசாங்கங்களை ஏற்படுத்தியுள்ளன. மக்களின் உரிமைகளைக் காக்கவே உருவாக்கப்பட்டுள்ளன என்பது நிலைநிறுத்தப்பட்டுள்ளது. 1917ம் ஆண்டில் உருவான ரஷ்யப் புரட்சி மற்றும் சீனாவில் ஏற்பட்ட உள்நாட்டுப்போர் ஆகியன மேலைநாட்டு முதலாளித்துவ பொருளாதாரத்திற்கு எதிராக மக்கள் நல்வாழ்வுப் பணிக்கோட்பாடு உருவாக ஏதுவாயிற்று. மக்கள் நல்வாழ்வுப் பணிக் கோட்பாட்டின் மூலம் மனித உரிமைகள் குறிப்பாக சிவில் சுதந்திரம் மற்றும் சமூக பொருளாதார மேம்பாட்டைக் கொண்டு வர அரசாங்கங்கள் ஆக்கபூர்வ முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று வெளிப்படையாகக் கூறியது. இது மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் இடையே உள்ள உறவினை வலியுறுத்தியது. 18 நூற்றாண்டின் ஆரம்பம் மனித உரிமை வளர்ச்சியின் ஆரம்பம் எனலாம்.

ஹிட்லரின் நாசிக் கட்சி, ஜெர்மானிய அரசாங்கம், முசோலினியின் பாசிசக் கட்சி, இத்தாலிய அரசாங்கம் ஆகியன இரண்டும் உலகப் போர்க் காலத்தில் மிகவும் மோசமான அரசாங்கங்களாக இருந்தன ஆகியவை மனித உரிமைகளின் வளர்ச்சிக்கு அடிப்படையாகக் கருதப்படுகின்றது. ஏனெனில் மனித உரிமைகளுக்கு அதிகமான அளவில் இவற்றால் பாதிப்பு ஏற்பட்டது. ஐக்கிய நாடுகளை சபை உருவான பின்னர் 1945ம் ஆண்டிலிருந்து சிவில் உரிமைகளை மிஞ்சிய அளவில் மனித உரிமைகள் மேலோங்கியுள்ளன. மக்களின் சிவில் உரிமைகளைக் காக்க 1948ம் ஆண்டு ஐ.நா. சபை மக்கள் உரிமை மகாசாசனத்தை அங்கீகரித்து 100க்கு மேற்பட்ட நாடுகள் தங்களது அரசியலமைப்பின் மூலமாக சிவில் உரிமைகளுக்கு உத்திரவாதம் வழங்கியுள்ளன. பன்னாட்டு நீதிமன்றம், நாடுகளின் அரசியலமைப்பு, தேசிய நீதிமன்றங்களின் தீர்ப்புக்கள், மனித உரிமை ஆணையங்களின் நடவடிக்கைகள் ஆகியன மனித உரிமைகளின் முக்கியத்துவத்தை வெளிப்படையாக பறைசாற்டியுள்ளன.

**1.7 21ம் நூற்றாண்டில் மனித உரிமை:**

மனித உரிமைகளைக் காப்பது மற்றும் மேம்படுத்துவது தொடர்பான விஷயங்கள் 21ம் நூற்றாண்டில் முக்கியச் செய்திகளாக ஏற்கப்பட்டன. மனித துன்புறுத்தல், அகதிகளின் துயரங்கள், விமானத்தைக் கடத்துதல், பயனிகளின் துன்பங்கள், பயங்கரவாதிகளின் அத்துமீறிய கொடுங்கோன்மைகள் சாவு போன்ற பிரச்சனைகள் அனைத்தும் மனித உரிமை சம்பந்தப்பட்டவைகளாகும். உலகத்தில் எந்த மூலையிலேயோ நடைபெற்ற மனித உரிமை மீறலை அந்த அரசாங்கம் பன்னாட்டு நிறுவனங்கள் ஆகியன அக்கறை எடுத்து மனித உரிமை மீறலுக்கு தகுந்த நடவடிக்கை மேற்கொள்ள வலியுறுத்துகின்றன. இதனால் மனித உரிமைக்கு முக்கியத்துவம் இருப்பதுடன் அவற்றைக் கட்டிக்காக்க வேண்டுமென்ற நிலையும் சேர்ந்தே மேலோங்குகின்றது.

இந்தியா மனித உரிமைகளை மதிப்பதிலும், அவற்றைச் செயல்படுத்துவதிலும் எப்போதும் அதிக கவனம் செலுத்திவருகின்றது. தென்ஆப்பிரிக்காவில் இருந்து இனவேறுபாட்டுப் பிரச்சினையை 1940ம் ஆண்டு ஐ.நா. சபைக்கு கொண்டு வந்தது இந்தியாவாகும். எனவே மனிதர்ளை மனிதர்களாகப் பாவிக்க வேண்டுமே தவிர, மனிதர்களுக்குள் பாகுபாடு காணக்கூடாது என்பது இந்தியாவில் எண்ணம் இந்திய அரசியலமைப்பில் கூட வேறுபாடு காட்டக்கூடாது என்பதை வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்தியக் குடியுரிமை பெறாத இந்தியாவில் வாழும் பிற மக்களுக்கு மதச் சுதந்திரம், தனி நபர் சுதந்திரம், சமத்துவம் ஆகியன வழங்கப்பட்டுள்ளது. இந்திய குடியுரிமை பெற்றோர்களுக்கு அலுவலக உரிமைகள் அரசியலமைப்பின் பிரிவு 19ல் வரையறுக்கப்பட்டுள்ளது. இவை மீறப்பட்டால் குடிமக்கள் தங்கள் உரிமைகளை நிலைநாட்ட உயர் நீதிமன்றம், தலைமை நீதிமன்றம் ஆகியவற்றை அணுக உரிமை வழங்கப்பட்டுள்ளன. இது தவிர சட்டபூர்வமாக தேசிய மனித உரிமை ஆணையம் அமைக்கப்பட்டு, இது மக்களின் உரிமைகளின் காவலனாக மனித உரிமை மீறல்கள் குறித்த புகார்களை (Complaints) விசாரித்து, மனித உரிமைகளைப் பாதுகாத்து வருகின்றது. காவலர்கள் அத்துமீறிய நடவடிக்கைகள், சிறையில் கைதிகள் சாவு, தனியார் அமைப்புக்களால் மக்கள் பாதிக்கப்படுதல், சாவு போன்றவற்றையும், இன, மத அடிப்படையில் ஏற்படும் பாகுபாட்டு நடவடிக்கைகள், பசி பட்டினி போன்ற அனைத்தையும் விசாரிக்கும் அதிகாரத்தை தேசிய மனித உரிமை ஆணையம்

கொண்டுள்ளது. மனித உரிமைகள் என்பது மக்களின் உயிர், உரிமை சமத்துவம் மற்றும் அந்தஸ்து ஆகிய அனைத்தையும் காக்கும் வகையில் அரசியலமைப்பும், பன்னாட்டு ஒப்பந்தங்களும், நீதிமன்ற தீர்ப்புகளுமாகிய அனைத்தும் மக்கள் உரிமைகளைக் காக்க மேற்கொள்ளும் நடவடிக்கைகளாகும்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா?
3.இந்தியாவில் தர்மத்திற்கும் சமூகத்திற்கும் உள்ள உறவை விளக்குக

## 1.8 இந்தியா:

இந்தியாவில் தர்மம் என்ற சொல் மக்களையும், சமூகத்தையும் காக்கக் கூடியதாகும். சமூகத்தைக் காப்பது, வரண ஆசிரம தர்மம் ஆகும். தனி நபர்களைக் காப்பது சுய தர்மம் ஆகும். தர்மம் என்பது தன் ஆட்சி, தர்மம் என்பது தான் சமூகம். தர்மம் என்பது வார்த்தையைச் சுற்றித்தான் அனைத்து செயல்களும் நடைபெறும். எனவே சமூகத்தில் ஒழுங்கை ஏற்படுத்தி, நிலைப்படுத்தி மக்களின் மேம்பாட்டிற்கு வழிவகுக்கக் கூடியது. தர்மம் அறியாமை, பயம், நோய் மற்றும் பிற கெடுதல்களையெல்லாம் நீக்கி மக்களிடையே சகோதரத்துவம், அமைதி மற்றும் நல்லெண்ணம் ஆகியவற்றை ஏற்படுத்துவது தர்மம். சமூக பொருளாதார, அரசியல் வாழ்வு அனைத்தும் சமூக ஒழுங்கின் மூலமே ஏற்படும் இதனைச் செய்வது தர்மம் ஆகும்.

தர்மம் கோட்பாட்டின்படி, மனித உரிமைகள் விலை மதிக்க முடியாதவை. நிரந்தரமானவை ஆகும். இந்தியா நாகரீகம் தோன்றிய காலத்திலிருந்தே இவற்றை அங்கீகரித்து செயல்படுத்தி வருகின்றது. மக்களின் வளர்ச்சிக்கும், அமைதியான வாழ்விற்கும் வழிவகை செய்வது மனித உரிமைகள் என்பதை இந்தியா உணர்ந்து இவற்றை வலியுறுத்தி வருகின்றது. இந்தக் கருத்துக்கள் இந்திய அரசியலமைப்பிலும் மனித உரிமைகள் மகாசாசனப் பிரகடனங்களாக சேர்க்கப்பட்டுள்ளன.

அரசியல், பொருளாதாரம் மற்றும் சமூக நடவடிக்கைகளிலும் தர்மம் அதிக அளவில் இணைத்ததெனாம். ஏனெனில் அரசாங்கத்தின் நோக்கமே தர்மத்தை செம்மையாக நிர்வகிப்பதாகும். இதன் மூலம் தனிநபர்களின் பொருளாதார, ஆன்மீக வளர்ச்சி ஏற்படுமெனக் கருதப்பட்டது. அரசன் அதாவது நாட்டின் தலைவன் ஒருவன் மூலமே

மக்களின் ஆன்மீக, அறநெறி வளரவும், பொருளாதார மேம்பாட்டைச் செய்ய முடியும் என்பது உணரப்பட்டது. ஏனெனில் தர்மத்தைக் காப்பவன் அரசன் என மதிக்கப்பட்டான்.

முறையான, சரியான நடத்தையினால் மக்களுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறதென்பதோடு, இந்த நடத்தை மூலம் தர்மத்தை அடைய வழிவகுக்குமென்று சரியான நடத்தைக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஆசை, விருப்பம், பேராசை என்று மக்கள் மத்தியில் உணர்வால் பெறும் சந்தோஷம் அதிகரித்தது. எனவே மக்களின் நன்மைக்காக மூன்று வழிப் பாதையைக் கூறினர். தர்மம், அதர்மம், காமம் ஆகிய மூன்றும் மக்களின் நல்வாழ்வை மேம்படுத்தக்கூடியதென வரையறுத்ததால் இதுதான் இன்றைய இந்தியச் சிந்தனையாக இந்திய மக்களோடு இணைந்து உள்ளது. தனிநபர்களின் மகிழ்ச்சியும், அரசின் நலனும் காக்கும் வகையில் இரண்டும் சமமாகப் பாவிக்கும் நிலை உருவானது. தர்மம் அர்த்தத்தை விட உயர்வானதால், தர்மத்தின் மூலம் மக்கள் மகிழ்ச்சியாக வாழ வைப்பதுதான் தர்மத்தின் நோக்கமாகும்.

இந்திய அரசியலமைப்பை உருவாக்கும் பொறுப்பு அரசியலமைப்பு அவையின் வரைவுக் குழுவிடம் விடப்பட்டது. அக்குழு 1948ம் ஆண்டின் ஐக்கிய நாடுகள் சபை வரையறுத்த உலக மனித உரிமைகள் மகாசாசனப் பிரகடனத்தை அடிப்படையாக வைத்து குடிமக்களுக்கு அடிப்படை உரிமைகள் என்ற மனித உரிமைகளை அரசியலமைப்பில் சேர்த்தது. சட்டத்தின் முன் அனைவரும் சமம். பாரபட்சமின்றி அனைவரும் சுதந்திர உரிமை, பேச்சு, எழுத்து உரிமை, அமைதியாகக் கூடும் உரிமை, அபாயகரமான பணிகளில் சிறுவர்கள் வேலை செய்வதைத் தடுத்தல் போன்ற பல்வேறு உரிமைகள் அடிப்படை உரிமைகளில் சேரலாயிற்று.

அடிப்படை உரிமைகள் என்பதில் சிவில், அரசியல் உரிமைகளோடு அவற்றைக் காக்க நீதிமன்றம் தலையிடும் உரிமையும் வழங்கப்பட்டது. ஏழை, எளிய மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும் என்ற நோக்கில் வழிகாட்டு நெறிக் கொள்கைகள் அரசின் வழிகாட்டல்களாக அமைந்தன. மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தவும், நல்வாழ்வடையவும், வழிவகை செய்வதற்காக வழிகாட்டு நெறிக் கொள்கைகள் அமைந்தன. இவையனைத்தும் மனித உரிமைகள், இவற்றை

எவ்வாறு காக்க வேண்டுமென்ற வகையில் அரசியலமைப்பின் பிரிவுகளில் பாதுகாப்புக்கள் இடம்பெற்றன.

மக்களின் அடிப்படை உரிமைகளைக் காக்கவும், பராமரிக்கும் வகையில் பல்வேறு சட்டங்களை மத்திய, மாநில அரசாங்கங்கள் நிறைவேற்றின. குற்றவியல் செயல்முறைத் தொகுப்பு,இந்திய குற்றத் தண்டனைத் தொகுப்பு, சாட்சியச் சட்டம் ஆகியன மனித உரிமைகளைக் காப்பதற்காக இயற்றப்பட்ட சட்டங்கள் என்றால் மிகையல்ல. இவைதவிர, சமூகத்தின் நலிவுற்ற மக்களின் நல்வாழ்விற்காக பல தேசிய நிறுவனங்களையும் மத்திய அரசு நியமித்து உள்ளது. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் தேசிய ஆணையம் பெண்கள் மற்றும் சிறுபான்மையினர் தேசிய ஆணையம், ஆகியன சிலவாகும். இந்த ஆணையங்கள் இப்பிரிவு மக்களின் சமூக, பொருளாதார நிலையைக் கண்டறிந்து அரசாங்கக் கொள்கைகள் போன்றவற்றை ஆராய்ந்து இவர்களது முன்னேற்றத்திற்குத் தேவையான நடவடிக்கைகள் எடுக்க அரசாங்கத்திற்கு பரிந்துரை செய்யும், தேசிய காவல் ஆணையம், சட்ட ஆணையம் ஆகியன நாட்டின் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கத் தேவையான பரிந்துரை வழங்கியதோடு மக்களின் சுதந்திரம் மற்றும் உரிமைகளைப் பாதுகாக்கப் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன.

## 1.9 தொகுப்புரை :

இந்திய அரசாங்கம் மக்களின் உரிமைகளைத் தொடர்ந்து கண்காணித்து பரிசீலித்து பாதுகாத்து வருகின்றது. மனித உரிமை மீறல் எத்தரப்பின்பால் எழுந்தாலும் அவற்றைகளையும் வகையில் சட்டங்களை நேரத்திற்கு நேரம் இயற்றி வருகின்றது. தாழ்த்தப்பட்டோர் கொடுமைகளுக்கு எதிரான சட்டம் 1989, கற்பழிப்பு, வரதட்சணைச் கொடுமைகள் நீக்கச் சட்டம், இளஞ்சிறார் குற்றவியல் நீதிச் சட்டம் என பல சட்டங்களை இயற்றி வருகின்றது. நீதித்துறை மக்களின் உரிமைகளைக் காப்பதில் மிதமிஞ்சிய பங்கினை செய்து வருகின்றது. பொதுமக்கள் வழக்கிடல் (Public Interest Litigation) என்று ஒரு புதிய பரிணாமம், நீதித்துறையின் தீவிரம் (Judicial Activism) போன்றவற்றின் மூலம் மக்களின் குறைகள், உரிமைகள் ஆகியன பாதுகாக்கப்படுகின்றன. பாராறுமன்றமும், மாநிலங்களின் சட்டமன்றங்களும் மக்களின் உரிமைகள் மீதான விழிப்புணர்வை ஏற்படுத்துவதுடன் அவற்றைக் காக்க சட்டங்கள் இயற்றுகின்றன. இவை தவிர, இன்றைய நாளில் பத்திரிக்கைகள் மற்றும் பொதுமக்கள் சாதனங்களின் பங்கும் அளவிட முடியாத ஒன்றாக உள்ளது.

புலானாய்வுக் கட்டுரைகள் மற்றும் இரகசிய காமிராக்கள் மூலம் மக்களின் உரிமை மீறல்களை வெளிப்படுத்தி, மக்கள் உரிமைகளைக் காக்க உதவுகின்றன. எனவே மனித உரிமைக்கு அனைத்து தரப்பிலும் ஆதரவு கிடைத்துள்ளது ஒரு பெரிய வளர்ச்சியாகும்.

### 1.10 முக்கிய வார்த்தைகள் :

மக்களாட்சி, உலகளவிலான உரிமைகள்,அறநெறி, அரசியலமைப்பு சட்டங்கள் மனித உரிமைகள், வாழ்வு உரிமைகள்,மாண்புறு புரட்சி,மகாசாசனம், பிரகடனம் நீதித்துறை, இயற்கைச்சட்டம்.

### 1.11 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 1.2 ல் அறிக
வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 1.6 ல் அறிக
வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 1.8 ல் அறிக

### 1.11 பரிந்துரை நூல்கள்:

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.
2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.
3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.
4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.
5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.
6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

### 1.12 மாதிரி வினாக்கள் :

1. உரிமை என்றால் என்ன ?
2. மனித உரிமைகளின் இயல்புகளை கூறுக?
3. மனித உரிமைகளின் வளர்ச்சியை விவரி?
4. இந்தியாவில் மனித உரிமைகளின் வளர்ச்சியை கூறுக?
5. மனித உரிமைகளின் முக்கியத்துவத்தை கூறுக?
6. மனித உரிமைகளின் வகைகளை விளக்குக?

# அலகு - 2

## மனித உரிமைகளின் பண்புகள் மற்றும் கோட்பாடுகள்

### அறிமுகம்

உலகம் முழுவதிலும் மனித உரிமைகள் குறித்து பொதுவான சில பண்புகள் உள்ளன. இந்தப் பண்புகள் ஒரே மாதிரியாக எப்போதும் இருக்குமெனச் சொல்ல முடியாது. இவை மக்களின் எண்ணங்களுக்குகேற்ப எண்ணங்களின் மாற்றங்களுக்கேற்ப இப்பண்புகளும் மாறக்கூடியதாகும். மனித எண்ணங்களுக்குகேற்ப மனித உரிமைகள் இருக்க வேண்டும். சட்டத்தின் மூலமாக மனிதனின் தேவைகள் அங்கீகரிக்கப்பட்டால் அத்தேவைகளை வரையறுத்து செயல்படுத்த வேண்டியது அவசியமாகும். மனித உரிமைகள் என்பது கட்டுப்பாடுகள் இல்லாத முழுமையானதல்ல (not absolute). சமூகத்தின் நலன் கருதி பெரும்பாலான மக்களுக்கேற்ப சில கட்டுப்பாடுகளை விதிக்கலாம். உதாரணமாக இந்திய அரசியலமைப்பின் அடிப்படை உரிமைகள் வரையறுக்கப்பட்டுள்ளன. அவற்றைப் பல வழிகளில் கட்டுப்படுத்த வழிவகை செய்யப்பட்டுள்ளது. மத விஷயத்தில் கூட, சமூக நலன் கருதி அரசு சில கட்டுப்பாடுகளை விதிக்கலாம். சொத்துரிமையும் கட்டுப்பாடுகள் இல்லாத முழுமையான உரிமை அல்ல. பொதுநோக்கிற்காக சொத்துரிமை எடுத்துக்கொள்ளலாம். நீதிமன்றங்கள் மூலம் (அல்லது) நீதிமன்றங்களின் மூலம் கூட எவ்வளவு நஷ்டஈடு வழங்கப்பட்டுள்ளது. போதுமான அளவிற்கு நஷ்டஈடு கட்டுப்படுத்தப்பட்டுள்ளது.

### நோக்கங்கள் :

1. மனித உரிமைகளின் பண்புகளை அறிதல்
2. மனித உரிமைகளின் வகைகளை கற்றல்
3. மனித உரிமைகளின் கோட்பாடுகளை கூர்ந்து ஆராய்தல்

### வடிவமைப்பு :

உட்கூறுகள்

2.1 மனித உரிமைகளின் பண்புகள்

2.2 உரிமைகளின் வகைகள்

## 2.1 மனித உரிமைகளின் பண்புகள்

மனிதனின் முழுமையான வளர்ச்சியை எய்தும் வகையில் அனைத்து வசதிகளையும் செய்து கொடுக்கவே அரசு உருவானது எனலாம். எனவே மனிதன் தனது முழு வளர்ச்சியடைய அரசு உதவும். அதே நேரத்தில் அரசுக்கு எதிராக மனிதனின் உரிமைகள் அமையாதவாறும் பார்த்துக்கொள்ளும். மனிதர்கள் உரிமைகள் கொண்டவர்கள், அவர்களது உரிமையை அரசு பார்த்துக் கொள்ளும். சட்டத்தின் விதிமுறைகளை அரசாங்கம் மீறும்போதும், மனித உரிமைகளை அரசாங்கம் மீறும்போதும் மனித உரிமைகள் பாதிக்கப்படும். எனவே அரசாங்கம் விதிமுறைகளை மீறாதவாறு அதன் மேல் கட்டுப்பாடுகள் வேண்டும். அதே நேரத்தில் தனி நபர் உரிமைகளைப் பாதிக்காதவாறு பார்த்துக் கொள்ளும். அரசாங்க அதிகாரி அத்துமீறி எதேச்சதிகாரமாக செயல்பட்டால் அதனைக் கண்டித்து நீதிமன்றங்களுக்கு செல்ல மக்களுக்கு முழு உரிமை உண்டு. இதே மாதிரி ஆட்சித்துறை நடவடிக்கைகள், சட்ட மன்றம் இயற்றும் சட்டங்கள் ஆகியன மக்கள் உரிமைகளைப் பாதித்தால் அவற்றைக் கண்டித்து, மேற்படி செயல்கள் சட்டத்திற்கு அப்பாற்பட்டவை எனவும், அவற்றைச் செல்லாது என்று கூறும் அதிகாரம் நீதிமன்றத்திற்கு உண்டு. இதுமாதிரியாக இன்றைய நாளில் அரசாங்கத்திற்கு எதிராக நீதிமன்றங்களுக்கு சென்று மக்கள் தங்களது உரிமைகளை நிலைநாட்டி வருகின்றனர். ஊதிய நிலுவைத் தொகைகளை அரசாங்கம் கொடுக்காமல் இருந்தால்கூட, தலைமை நீதிமன்றம் அவர்களுக்கு வழங்க உத்திரவிட்டு மக்களின் உரிமைகளுக்கு உத்திரவாதம் தருகின்றது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. தனி நபர் உரிமையை அரசு எவ்வாறு பாதுகாக்கிறது.

உரிமைகளின் நடவடிக்கைகள் பணிகளோடு தொடர்பு உடையன. ஒரு தனிநபர் கொண்டிருக்கும் உரிமைகளின் எண்ணிக்கை அவர் சமூகத்திற்கு ஆற்றவிருக்கும் கடமைகளின் எண்ணிக்கைக்குச் சமமாக இருக்க வேண்டும். மாநில ஆளுநர் பல உரிமைகள் கொண்டவராக இருப்பார். ஏனெனில் அவர் நாட்டிற்கு ஆற்றும் கடமைகள் பல உள்ளன. எனவே, உரிமைகள் செயல்களுக்கு ஒப்ப அமைய வேண்டும். ஒரு அலுவலக உதவியாளர் செய்யும் பணி குறைவாவே இருக்கும் அவரது உரிமைகள் அதற்கேற்பக் குறைவாவே இருக்கும். அதிகமான உரிமைகள் அப்பதவிக்கு வழங்கப்பட்டிருக்காது.

தனி நபர்களின் எந்தெந்த உரிமைகளை அரசு கட்டுப்படுத்தலாம் என்ற கேள்வி எழலாம். இதற்கு போசன்குட் என்பார் சீராக விளக்கம் அளித்துள்ளார். ”மனித அறநெறி உலகத்திற்கு பாதுகாவலனாக இருப்பது அரசு. அரசு அறநெறி உலகத்தின் செயல்களுக்கு ஒரு காரணியாக அரசு இருக்காது. முழுப் பொறுப்பும் எடுக்கக் கூடியது அரசாகும்”. இக்கருத்து இன்று எதிர்ப்புக்குள்ளாகியுள்ளது. அரசு என்பது மக்கள் வாழ்வில் ஒரு காரணியாக மட்டுமே எடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர அரசு முழுமையாக உரிமைகளுக்கு பொறுப்பை ஏற்கக் கூடாது. ஏனெனில் அரசு சட்டங்கள் இயற்றலாம். அவற்றின் மூலம் தனி நபர்களின் நடவடிக்கைகள் ஒழுங்குபடுத்தலாம். ஆனால் இவை மனிதன் செய்யக்கூடிய வெளிப்பட்ட நடவடிக்கைகளுக்குத்தான் பொருந்தும். மனிதனின் உள்ளார்ந்த எண்ணங்கள், சிந்தனைகள் ஆகியவற்றைக் கட்டுப்படுத்த முடியாது என்பதை உணரலாம். எனவே அரசின் நடவடிக்கை வரையறுக்கப்பட்டுள்ளதாகும்.

உரிமைகள் கடமைகளைக் கொண்டிருக்கிறது. உரிமைகளும், கடமைகளும் இணைந்தே செல்லக்கூடியவை. ஒன்றில்லமால் மற்றொன்று இயங்க முடியாது. நான் உரிமை கொண்டவனாக இருந்தால் என்னுடைய உரிமை பயன்படுத்தப்படுகின்றபோது மற்றவர்களுக்கும் பயன்படக் கூடிய செயலைச் செய்யும் வகையில்தான் இருக்க வேண்டும். தனியே உரிமையை மட்டும் அனுபவிக்க வழியில்லை. உரிமை என்பதை மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய அங்கீகரிக்கப்படுகின்றது. எனவே ஒருவருடைய உரிமை மற்றவர்களுக்கு பயனளிக்கவல்ல கடமையாக மாறுகின்றது. ஒருவர் அதிகபடியான உரிமைகள் பெற்றவரெனில், மக்களுக்கு அதிகப்படியான

கடமைகள் செய்யவல்லராகின்றார். ஆகவே, ஒருவர் அரசுக்கு எதிராகவும், சமூகம், தனிநபர் ஆகியவற்றிற்கு எதிராகவும், உரிமை கொண்டவரெனில் அவர் அரசு சமூகம், தனிநபர் ஆகியவற்றிற்கு தனது கடமையைச் செய்யக் கூடியவராகின்றார்.

தனி நபருக்கு வழங்கப்படுகின்ற உரிமைகள் முறையாகப் பயன்படுத்தப்பட வேண்டும். ஏனெனில் உரிமை என்பது ஒருவர் தனது விருப்பத்திற்கு நினைத்ததைச் செய்யக் கூடியதன்று. உரிமைகள் அறநெறி நோக்கத்திற்காகப் பயன்படுத்தவல்லவை. எனவே தனிநபர் பயன்பெறும் உரிமைகள் மற்றவர்களைப் பாதிக்கவல்லதாகவும் அமையலாம். சமூகத்தைப் பாதிக்கவல்லதாக உரிமைகள் அமைந்தால் அவை உரிமைகள் பட்டியலிலிருந்து எடுக்கப்பட்டுவிடும். உரிமைகள் முறையாக சமூகத்திற்கு நன்மைதரத்தக்கனவாக இருக்க வேண்டும். பேச்சுரிமை என்பது ஒருவருக்கு வழங்கப்பட்டால் அவர் மற்றவர்களது பேச்சுரிமையில் குறுக்கீடு செய்யக் கூடாது. எனவே மற்றவர்களைப் பாதிக்காத வகையில் உரிமைகளை தனி நபர்கள் பயன்படுத்த வேண்டும். பேச்சுரிமை என்று இருப்பதை வைத்து வன்முறையைத் தூண்டக்கூடிய வகையில் அவ்வுரிமையைப் பயன்படுத்தக்கூடாது. வன்முறையைத் தூண்டும் பேச்சு, சமூகம் முழுமையும் பாதிக்கவல்லது. எனவே அபபேச்சு கட்டுப்படுத்தப்படும். இதனால் அவரது பேச்சுரிமை பாதிக்கப்படும். ஆகவே உரிமை என்பது சமூகம் முழுமைக்கும் அறநெறியை நிலைநாட்டும் வகையில் பயன்படுத்தப்பட வேண்டும்.

## 2.2 உரிமைகளின் வகைகள்:

### இயற்கை உரிமைகள்:

உரிமைகள் அவற்றின் தன்மையை வைத்து வ்கைப்படுத்தல் செய்யப்படுகின்றன. பொதுவாக உரிமைகள் மூன்று வகைகளாக வகைப்படுத்தலாம். இயற்கை உரிமைகள், அறநெறி உரிமைகள், சட்ட உரிமைகள் ஆகியன இம்மூன்றும் ஆகும். சட்ட உரிமைகளை மறுபடியும் மூன்றாகப் பிரிக்கலாம். அவை சிவில் உரிமைகள், அரசியல் உரிமைகள் மற்றும் பொருளாதார உரிமைகள் ஆகியனவாகும். இயற்கை உரிமைகள் என்பதைத் தெளிவாக வரையறை செய்வது கடினம். ஏனெனில் அறிஞர்கள் அனைவரும் இயற்கை உரிமைகள் குறித்து பொதுவான இணக்கக் கருத்திற்கு வரவில்லை. தவிர, ஒவ்வொரு காலகட்டத்திற்கேற்பவும் இயற்கை உரிமைகளுக்கு

வித்தியாசமான பொருள், கருத்து ஆகியன வழங்கி வருகின்றனர். பழங்காலத்தில் இயற்கை உரிமைகள் என்பது பகுத்தறிவு மற்றும் இறைவழிச் சட்டத்தின் அடிப்படையில் உள்ள அடிப்படை உரிமைகள் இயற்கை உரிமைகளாகக் கருதப்பட்டன. உரோமானியர்களின் சட்டம் இயற்கை உரிமைகளின் அடிப்படையில் இயற்றப்பட்டது. ஹாப்ஸ், லாக் போன்ற அறிஞர்கள் இயற்கை நிலையில் வாழ்ந்த மனிதன் அனுபவித்து வந்த உரிமைகள் இயற்கை உரிமைகள் என வரையறுக்கின்றனர். கீரின் என்னும் அறிஞர் இன்றைய நாளில் இயற்கை உரிமை என்பதை ஒருவகையில் ஏற்றுக் கொள்ள வேண்டும். உரிமைகள் என்பவை இயற்கையானவை. இவை மனிதனின் அறநெறியை வளர்க்க அவசியமானவை. எனவே சமூகத்தின் அறநெறியை வளர்க்கக்கூடியது இயற்கை உரிமைகள். மனிதர்களின் இலட்சியங்களை அடையும் வகையில் இவை திகழ வேண்டும். அரசு இந்த இலட்சியங்களை அடைவதற்குப் பாடுபட வேண்டும் என்கிறார். எனவே, இயற்கை உரிமைகள் மனிதனின் அறநெறியை வளர்க்கும் வகையில் அதற்கு அரசு உறுதுணையாக இருக்க வேண்டும் என கீரின் கூறியுள்ளார்.

### அறநெறி உரிமைகள்:

அறநெறி உரிமைகள் என்பது மக்கள் அறநெறி என அங்கீகரிக்கப்பட்ட செயல்களைச் செய்வது என எளிதாகக் கூறலாம். அறநெறிச் செயல்கள் மரபு, பழக்கவழக்கங்கள், மக்களின் பொது விருப்பங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் செய்யப்பட்டு வரக கூடியனவாகும். இச்செயல்களைச் செய்வதற்கு அரசின் அங்கீகாரம் இருக்க வேண்டும் என்பதில்லை. ஆகவேதான், இச்செயல்கள் செய்வதை அரசு கட்டுப்படுத்த இயலாது. இச்செயல்களைச் செய்யாது மீறுபவர்கள் மீதும் அரசு சட்டபூர்வமான எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது. ஆனால் மக்கள் அறநெறி உரிமைகளில் ஆழமான நம்பிக்கை வைத்திருப்பதால் மக்கள் எவரும் எளிதாக அறநெறிச் செயல்களை மீற முடியாது. கணவன் மனைவியிடம் அன்பாக இருக்க வேண்டும் என்பது அறநெறி உரிமை. அதற்காக மனைவி கணவன் தன்னிடம் அன்பாக நடக்கவில்லை என நீதிமன்றம் சென்று கட்டாயப்படுத்தி அன்பாக நடக்க வைக்க முடியாது. ஆயினும் கணவன் அன்பாக மனைவியிடம் இல்லையெனில் பொதுமக்கள் அந்தக் கணவனை மனிதானக மதிக்காத வகையில் தங்களது மனப்பாங்குகளை வளர்த்துக் கொள்வார்கள். எனவே, மக்களின் எண்ணங்களுக்கேற்ப கணவன் மனைவியிடம் அன்பாக நடந்து கொள்ள வேண்டும்.

**முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.**
**2. அறநெறி உரிமைகளின் முக்கியத்துவத்தை கூறுக.**

## சட்ட உரிமைகள்:

சட்ட உரிமை என்பது ஒரு சிறப்புரிமை செயல் அல்லது ஒரு பாதுகாப்பு என டாக்டர் லீகாக் என்பார் கூறியுள்ளார். இவ்வுரிமை மற்றும் பாதுகாப்பானது ஒரு தனி மனிதனுக்கு வழங்கப்பட்டுள்ளது. இதனை வழங்கிப் பராமரித்து வரக் கூடியதாகும் என்கிறார். எனவே சிறப்பு உரிமை அல்லது பாதுகாப்பு ஒவ்வொருவருக்கும் கிடைத்துள்ள தனி உரிமைதான் சட்ட உரிமை இந்த உரிமைகளை அரசு அங்கீகாரம் செய்கின்றது. காவல் மற்றும் நீதிமன்றம் ஆகியவற்றின் மூலமாக இவை செயல்படுத்தப்படுகின்றன. சட்ட உரிமைகள் நாட்டின் சட்டங்களாக தொகுத்து அமைக்கப்படுகின்றன.

## சிவில் - அரசியல் வேறுபாடு:

சிவில் உரிமைகள் மற்றும் அரசியல் உரிமைகள் ஆகியவற்றிற்கிடையே 20ம் நூற்றாண்டின் பாதிவரையிலும் வேறுபாடுகள் குறைவாகவே இருந்தன. பெரிய அளவில் சிவில் - அரசியல் வேறுபாடு காணப்படவில்லை. அரசாங்கப் பணிகளில் சேர்வது, வாக்களிப்பது, நீதிமன்றங்களில் சாட்சியம் அளிப்பது ஆகியன மற்றும் அரசியல் உரிமைகளாக வாக்குரிமை வயது வந்த அனைத்துக் குடிமக்களுக்கும் வழங்கப்பட்டன. இவை தவிர, சொத்து வைத்துக் கொள்வது, ஒப்பந்தங்கள் செய்வது, செயல்படுத்துவது, கடவுளை வணங்கும் மத உரிமை ஆகியனவும், பேச்சுரிமை மற்றும் பத்திரிக்கைச் சுதந்திரம் ஆகிய அனைத்தும் சிவில் உரிமைகளாக மதிக்கப்பட்டன.

| |
|---|
| முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.<br>3.சிவில் அரசியல் உரிமைகளுக்கு உள்ள வேறுபாடினை எடுத்துரைக்க. |

சிவில் மற்றும் அரசியல் உரிமைகளை கோட்பாட்டளவிலும், அறநெறியளவிலும் தனித்தனியாக வேறுபடுத்திக் காட்டுவதென்பது இயலாத ஒன்றாகும். ஏனெனில் இவற்றின் மூலமாக மக்களை பல்வேறு வகைகளாகப் பிரித்துள்ளனர். இது உடன்பாடான கருத்தல்ல. உதாரணமாக பெண்கள் குடிமக்களாக அங்கீகரிக்கப்பட்டு சில குறிப்பிட்ட உரிமைகள்தான் வழங்கப்பட்டுள்ளதே தவிர, ஆண்களுக்கு வழங்கப்படுள்ள அத்துணை உரிமைகளும் பெண்களுக்கு வழங்கப்படவில்லை. எனவே, பொதுமக்களை ஆண்கள், பெண்கள் என இருவயையாகத் பிரிவுகளாகப் பிரித்து நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன. இம்முறை நீக்கப்பட்டால் அரசியல் - சிவில் உரிமைகள் என இரண்டாக இருக்க முடியாது. இதுமாதிரி சமூகத்தில் ஒரு பிரிவினர்

ஏராளமான உரிமைகள் அனுபவிக்கின்றனர். சிலர் குறைவான உரிமைகளுக்கு மட்டும் பெற்றுள்ளனர். இந்த மாதிரியான வேறுபாடு சுதந்திர மக்களாட்சிக்கு எதிரானது. எனவே, சிவில் - அரசியல் உரிமைகளென்பது வேறுபாடு அகற்றப்பட்டு அனைவருக்கும் சம அடிப்படை உரிமைகளைப் போதுமான அளவில் வழங்க வேண்டும் என ராவல் (Rowl) கூறுகின்றார்.

இருப்பினும் சிவில் - அரசியல் உரிமைகள் என்பதைப் பிரிக்க முயற்சிப்போம். முன்னர் கூறியதுபோல் குடிமக்களை வகைப்பாடு செய்யாது சில கோட்பாடுகளின் அடிப்படையில் பிரிக்க முயற்சிப்போம். சிவில் உரிமைகள் என்பது சுதந்திரமாக சமத்துவமாக வாழ மக்களுக்கு தேவைப்படும் அடிப்படை உரிமைகள் சிவில் உரிமைகளாகும். அதனை பராமரிக்கச் செய்யும் உரிமைகள் அரசியல் உரிமைகள்.

சிவில் உரிமைகள்:

சிவில் உரிமைகளின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் வித்திட்டது தாராளக் கொள்கைகளின் தாக்கம் எனலாம். தாராளம் அல்லது சுதந்திரம் என்பதை ஆக்ஸ்போர்டு அகராதி வரையறுத்துள்ளதாவது, கட்டுப்பாடுகள் இல்லாத சுதந்திரம், சுதந்திரமான பேச்சு மற்றும் செயல், குறுகிய மனப்பான்மையின்மை, திறந்த மனதுடன் பரந்த எண்ணம், புதிய கருத்துக்கள், சீர்திருத்தம் போன்ற அரசியல் கருத்துக்கள், மாற்றங்கள், சீர்திருத்தங்கள் ஆகியன மக்களாட்சிக்கேற்ப அமைத்துக் கொள்ளுதல் போன்றவையாகும். பிரதிநிதித்துவ மக்களாட்சிக்கு சுதந்திரம் என்பது மிகவும் முக்கியமான ஒன்றாகும். அடிப்படை சுதந்திரம் என்ற கருத்துதான் எல்லா மக்களாட்சி நாடுகளுக்கும் பொருத்தமான ஒன்றாகும்.

சமூகத்திலுள்ள குழுக்களுக்கும், தனி நபர்களுக்கும், சுதந்திரத்தை உத்திரவாதமளிக்கக் கூடிய வகையில் விரிவான அடிப்படை உரிமைகள் கொண்டதாக சில அரசியலமைப்புக்கள் மனித உரிமைகளை வரையறுத்துள்ளன. அரசியலமைப்புக்களில் அரசியல் சமூக சுதந்திரங்களை மட்டும் வலியுறுத்துவனவாக, விரிவான மனித உரிமைகள் எவையெவை தேவையென்பதில் ஒருமித்த கருத்து ஏற்படவில்லை. ஒவ்வொரு தனி மனிதனுக்கும் கீழ்க்கண்ட உரிமைகள் மிகவும் முக்கியமானதாக கருதப்படுகின்றன. அவை,

1. பேச்சுரிமை, கருத்துக்களை சுதந்திரமாக வெளியிடும் உரிமை, காரணமின்றி கைது செய்யாமல் இருக்கும் உரிமை, காவலில் வைக்கும் உரிமை. இவை சட்டபூர்வமாகத் தவறு செய்தாரென நீதிமன்றம் தீர்ப்பளித்தால் ஒழிய, கைது செய்யவோ, காவலில் வைக்கவோ கூடாது.

2. சொத்துரிமை

3. சம வாய்ப்பு, பாகுபாடின்றி சுதந்திரமாக அனைவருக்கும் சமவாய்ப்பளித்தல்

4. சுந்திரமாக சங்கம் அமைக்கும் உரிமை, கூட்டம் கூட்டும் உரிமை

5. கருத்துச் சுதந்திரம், மனசாட்சி, மத உரிமை, ஒப்பந்தம் செய்யும் உரிமை

6. விரும்பிய தொழில், வியாபாரம், வேலை ஆகியனவற்றைத் தேர்ந்தெடுத்தல், செய்தல்.

7. நாட்டின் எப்பகுதிக்கும் சென்று வர, அவசியமாயின் வெளிநாடுகளுக்கும் செல்லுதல் போன்ற உரிமை.

மொத்தத்தில் உரிமைகளை கடமைகளோடு இணைந்து இருக்க வேண்டும் உரிமைகள் சமூகம் முழுமையின் நன்மைக்காக இருக்க வேண்டும். உரிமைகளுக்குரிய உத்திரவாதத்தை அரசு கொடுக்க வேண்டும். அரசுக்கெதிராகவோ, மக்களுக்கு எதிராவோக உரிமைகள் பயன்படுத்தப்பட்டால் அவற்றை அரசு தடுக்க வேண்டும்.

## 2.3 மனித உரிமைகள் கோட்பாடு

உரிமைகள் பற்றிய கோட்பாடு படிப்படியாக பல்லாண்டு காலமாக வளர்ந்து வந்துள்ளது. பொதுவாக உரிமைகள் பற்றிய முக்கியக் கோட்பாடுகள் சிலவாகும். அவை இயற்கை உரிமைகள் கோட்பாடு, சட்ட உரிமைகள் கோட்பாடு, வரலாற்று உரிமைகள் கோட்பாடு, சமூக நல்வாழ்வு உரிமைகள் கோட்பாடு, இலட்சிய உரிமைகள் கோட்பாடு ஆகியன சில கோட்பாடுகளாகும். இவ்வுரிமைக் கோட்பாடுகள் பற்றிக் காண்போம்.

## 2.4 இயற்கை உரிமைக் கோட்பாடு:

இயற்கை உரிமைக் கோட்பாடு 17 மற்றும் 18ம் நூற்றாண்டுகளில் மிகவும் பிரபலமான உரிமைக் கோட்பாடாகும். மனித உரிமைகள் என்பது இயல்பாகக்

கிடைக்கக் கூடிய உரிமைகளாகும். ஒவ்வொருவரும் உய்த்து உணரக் கூடியவை உரிமைகளாகும். இவ்வுரிமைகளை அரசு வழங்கவில்லை. மாறாக மனிதனின் இயல்பாகவே உருவாக்கப்பட்டதுதான் இவ்வுரிமைகளாகும். அரசு தோற்றம் பற்றிக் கூறும் தாராளக் கோட்பாடு மற்றும் சமூக ஒப்பந்தக் கோட்பாடு ஆகிய கோட்பாடுகளின் அடிப்படையில் உருவாக்கப்பட்டதுதான் இயற்கை உரிமைகளாகும். உரிமைகள் என்பது அரசு உருவாகுவதற்கு முன்னரே ஏற்பட்டது எனலாம். சமூகம் ஏற்படுவதற்கு முன்னரே மனிதன் சில இயல்பான உரிமைகளைப் பயன்படுத்தி வந்தான். இயற்கை நிலையிலேயே மனிதன் இவ்வுரிமைகள் அனுபவித்து வந்தால் அரசு உருவான பின்னர் அவ்வுரிமைகளை அரசு மரியாதை கொடுத்து பாதுகாக்க வேண்டுமென எண்ணினான். இதுதர்ம இயற்கை உரிமை எனலாம். இக்கோட்பாட்டை ஜான்லாக் மிகவும் ஆதரித்தவராவார். இவரது சமூக ஒப்பந்தக் கோட்பாட்டின்படி, வரையறுக்கப்பட்ட அதிகாரம் கொண்ட அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும் என்கிறார். அரசியல் அதிகாரம் என்பதை ஆட்சியாளர்கள் வைத்து இருக்கும் நம்பிக்கை பெற்ற அதிகாரம் ஆகும். அவற்றை அரசாங்கம் பொறுப்புடன் செயல்படுத்த வேண்டும் என்கிறார். அரசியல் அதிகாரம் என்பதை ஆட்சியாளர்கள் வைத்து இருக்கும் நம்பிக்கை பெற்ற அதிகாரம் ஆகும். அவற்றை அரசாங்கம் பொறுப்புடன் செயல்படுத்த வேண்டும். அரசாங்கம் பலரின் நம்பிக்கையை இழக்கும் வகையில் இயற்கை உரிமைகளை அரசு மீறினால், புரட்சி ஏற்பட்டு, அந்த அரசாங்கம் மாற்றப்படும். இயற்கை உரிமைகளைக் காக்கும் மக்களின் நம்பிக்கையுடன் அரசாங்கம் மாற்றப்படும். இயற்கை உரிமைகளைக் காக்கும் மக்களின் நம்பிக்கையுடன் அரசாங்கம் இயங்க வேண்டும். மனிதன் பிறக்கும்போதே சுதந்திரமாக சில இயற்கை உரிமைகளோடுதான் பிறக்கிறான். எனவே அவன் அந்த உரிமைகளைப் பயன்படுத்த வல்லவன். அதனை யாரும் தடுத்து நிறுத்த முடியாது. உயிர் வாழும் உரிமை, சுதந்திரமாகச் செயல்படும் உரிமை. உரிமை. சொத்துரிமை ஆகியன முக்கியமான இயற்கை உரிமைகளாகும். மனிதன் தான் உயிர்வாழவும், சுதந்திரமாக இருக்கவும் ஆசைப்படக் கூடியவன். எனவே, அவ்வுரிமைகளை அவன் பயன்படுத்த வேண்டும். லாக் இயற்கை உரிமைகளில் மிகவும் முக்கியமான உரிமையாக சொத்து உரிமையைக் கூறுகின்றார்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. இயற்கை உரிமை கோட்பாட்டினை ஆய்க.

தாமஸ் பெயின் (1737 -1509) என்ற அறிஞர் ஒவ்வொரு தலைமுறையினரும் சுதந்திரமாக சிந்தனை செய்து அவற்றைச் செயல்படுத்த உரிமை கொண்டவர்களாவர் என்கிறார். சுதந்திர உரிமை, சொத்துரிமை, கொடுமையிலிருந்து விடுதலை பெறுவதற்கு எதிர்ப்பு செய்யும் உரிமை ஆகியன இயற்கை உரிமைகளாகக் கிடைத்த உரிமைகளாகும். இவற்றை தனி நபர்கள் ஏற்கனவே அனுபவித்து வந்த உரிமைகளாகும். மனித உரிமைகள் என்பது அரசாங்கச் சட்டத்தினால் கிடைக்கக் கூடியன அல்லவென்றும், மனிதனின் அறநெறியின் காரணமாக உருவான உரிமைகள் என்றும் கீரின் கூறுகின்றார். எனவே, தனிநபர்கள் எது அவசியம், தார்மீகமானது என்று உணர்ந்து ஏற்றுக் கொள்கின்றனரோ, அதுதான் உரிமை ஆகும். அதனை அரசு உருவாக்க வேண்டுமென்பது அல்ல. எனவே, இந்த உரிமையானது சட்ட உரிமையல்ல. ஒவ்வொரு மனிதனும் பெற்று அனுபவிக்கும் இலட்சிய உரிமையாகும். இயற்கை உரிமையினால்தான் ஏற்பட்டதே அமெரிக்க, பிரஞ்சுப் புரட்சிகள், இயற்கை உரிமைகள் அந்நாட்டு மக்களுக்கும் கிடைக்காமல் போனதால், வெடித்தது புரட்சி. அமெரிக்க சுதந்திரப் பிரகடனத்தில் (1776) தெரிவிக்கப்பட்டுள்ளதாவது, எல்லா மனிதர்களும் சமத்துவம் கொண்டவர்கள். ஆண்டவன் அருளாள் பிரிக்க முடியாத உரிமைகளைக் கொண்டவர்கள். அவ்வுரிமைகளைப் வாழும் உரிமை, சுதந்திரம் போன்ற மகிழ்வளிக்கக் கூடிய உரிமைகளாகும். இவ்வுரிமைகளைப் பாதுகாக்க மக்களின் ஒப்புதலோடு அரசாங்கம் உருவாகின்றது. இந்த அரசாங்கம் மக்களின் இவ்வுரிமைகளுக்கு எதிராகவோ, அழிக்கவோ முயற்சிக்கும்போது அந்த அரசாங்கத்ததை மாற்றவும், நீக்கவும் புதிய அரசாங்கத்தைக் கொண்டு வரவும் மக்களுக்கு உரிமை உள்ளது. எனவே, மக்களின் பாதுகாப்பு, மகிழ்ச்சி ஆகியவற்றிற்கு எதிராகச் செல்லாதவாறு அரசாங்கம் உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் எனக் கூறுகின்றது.

இயற்கை உரிமைக் கோட்பாட்டாளர்கள் அரசு தோன்றுவதற்கு முன்னரே மக்கள் உரிமைகளை அனுபவித்து வந்துள்ளனர் எனக் கூறுகின்றனர். ஆனால், உரிமைகளைச் சட்டத்தின் மூலமும், நீதிமன்றம் மற்றும் அரசியலமைப்பு உத்திரவாதத்தின் மூலமும் தான் காக்க முடியும் என்பது பலரது வாதம் பாதுகாப்பு இல்லாது உரிமைகள் இயங்காது. எனவே உரிமைகளைப் பாதுகாத்து அவற்றைச் செயல்படுத்த அரசாங்கம் அவசியம். ஆனாலும் உரிமைகளும் கடமைகளும் இணைந்து செல்லக் கூடிய தொடர்பினைக் கொண்டதென்பதையும் இயற்கை உரிமைக் கோட்பாட்டாளர்கள் ஏற்றுக் கொள்ள மறுக்கின்றனர். கடமைகளின்றி

உரிமைகள் இருக்க முடியாது என்பது முடிந்த உண்மை. இதனை இயற்கை உரிமைக் கோட்பாட்டாளர்கள் ஏற்க வேண்டும்.

## 2.5 சட்ட உரிமைக் கோட்பாடு:

சட்ட உரிமைக் கோட்பாட்டின்படி, எல்லா உரிமைகளும் அரசைச் சார்ந்துதான் செயல்பட முடியும் என்கின்றனர் அறிஞர்கள். உரிமைகள் என்று நாம் சொல்லக்கூடியவற்றிற்கு அரசு அங்கீகாரம் வழங்க வேண்டும். அரசு ஏற்று, அங்கீகாரம் அளிக்கவில்லையேல் எந்த உரிமையும் செயல்பட முடியாது. உரிமைகள் என்பது முழு உரிமைகளாக இருக்க முடியாது. இயற்கையிலேயே மனிதனுக்கு பிறப்பால் உரிமை என்பது கிடைத்துவிடவில்லை. ஒவ்வொரு நாட்டின் சட்டம், காலம், சூழல் ஆகியவற்றை வைத்துத்தான் உரிமைகள் என்பது உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றிற்கு அரசாங்கம் உத்திரவாதம் அளிக் கினறது. இவற்றிற்கு அரசாங்கம் உத்திரவாதம் அளிக்கவில்லையேல், உரிமை என்பதற்குப் பொருளே கிடையாது. எனவே, அரசு தோன்றுவதற்கு முன்னரே உரிமைகளை மனிதன் அனுபவித்தான் என்ற கருத்து சரியல்ல. அரசு உருவான பின்னர்தான் உரிமைகள் என்பதும் அரசால் உருவாக்கப்பட்டது என்பதுவும் இக்கோட்பாட்டை ஆதரிப்பவர்களது வாதமாகும். எனவே அரசின் மூலம் தான் உரிமைகள் உருவாக முடியும். உத்திரவாதமாகச் செயல்பட முடியும்.

சட்ட உரிமைக் கோட்பாட்டை முதன் முதலில் ஆதரித்தவர் "ஹப்ஸ் ஆவார். இவர் உரிமைகளுக்கும் அரசிற்கும் உள்ள தொடர்பினை விளக்கி, அரசு இல்லாமல் உரிமை இருக்க முடியாது என்பதை நிலைநிறுத்தினார். இக்கோட்பாட்டை பெந்தாம், ஆஸ்டின், ரிச்சி போன்றோர் ஆதரித்தனர். பெந்தாம் இக்கோட்பாட்டை மிகவும் ஆதரித்து பேசுகின்றார். உரிமைகள் குறித்து அரசு மூன்று பணிகளைச் செய்யக் கூடிய அதிகாரம் பெற்றள்ளதென்கின்றார். பெந்தாம் முதலாவதாக, உரிமைகள் என்பது எவை என்பதை நிர்ணயிப்பது அரசின் முதல் பணி, பின்னர் உரிமைகள் எந்தெந்த விஷயங்களில் இருக்க வேண்டும் என்ற அதன் நோக்கைக் கூறுவது அரசின் இரண்டாம் பணி. மூன்றாவதாக, உரிமைகளைச் செயல்படாமல் தடுக்கும் முட்டுக்கட்டைகள் அனைத்தும் நீக்குவது மூன்றாவது பணி. எனவே, இம்மூன்று பணிகளை அரசு செய்தால்தான் மக்கள் உரிமைகளை அனுபவிக்க முடியும் என்கிறார். அதனால், உரிமைகள் அரசினால்தான்

உருவாக்கப்பட்டதென்ற கருத்தை இவர் கூறவில்லை. உரிமைகள் என்பது அரசு அங்கீகாரம் அளித்து, அவற்றிற்கும் பாதுகாப்பு கொடுத்தால்தான் உரிமைகள் இருக்க முடியும் என்றும், அவ்வாறு அரசு செய்யவில்லையேல் உரிமைகள் என்பது இருக்க முடியாது என்ற கருத்தைத் தெளிவாகக் கூறுகின்றார்.

ஸ்பென்சர் என்ற அறிஞர் பெந்தாமின் கருத்தை ஆதரிக்கின்றார். அரசு என்பது உரிமைகளைப் பாதுகாக்க ஏற்பட்டது என்பதில் கருத்து வேறுபாடில்லை என்று பலரும் ஏற்றுக் கொண்டுள்ளனர். சட்டம் மூலம் உரிமைகள் உருவாக்கப்படவில்லை. அதனால் உரிமைகளை அங்கீகரித்து பாதுகாப்பது அரசு என வில்டி (Wilde) என்பார் கூறுகின்றார். உரிமைகள் என்பது மக்களிடம் உள்ளது. அவை நடைமுறையில் செயல்படத்தக்கதா? இல்லையா? என்பது பிரச்சனை அல்ல. அவை நடைமுறையில் செயல்படத்தக்கதா? இல்லையா? என்பதை அரசு செயல்படுத்துவதுதான் உரிமைகள். அரசு அவ்வுரிமைகளைச் செயல்படத்தக்கதாகச் செய்யவில்லையேல் உரிமை என்பது இல்லை. எனவே, அரசால் அங்கீகாரமும் உத்திரவாகமும் கொடுத்து செயல்பட வைத்தால் உரிமை என்பது இருக்கும். இல்லையேல், உரிமை இருக்காது. அது இயற்கையில் மனிதன் அனுபவித்து வந்தாலும் சரி, அனுபவிக்காவிட்டாலும் சரி எனக் கூறுகின்றார். சட்ட உரிமைக் கோட்பாட்டின் குறை என்று சொல்வோமேயானால், எல்லா உரிமைகளும் அறநெறியை அடிப்படையாகக் கொண்டவை. இதனைக் கட்டாயமாக அங்கீகரிக்க வேண்டும் எனக் கட்டாயப்படுத்த முடியாது. எனவே மக்களின் மனநிலைக்கேற்ப, அறநெறியைக் காக்கும் வகையில் சட்டம் இயற்றினால் அவற்றைச் செயல்படுத்துவது என்பது மிகவும் கடினமானது. ஆகவே, உரிமைகள் சட்டபூர்வமாக செயல்படுத்தப்படாமலும் உள்ளார்ந்த மக்கள் ஏற்பு என்பது மிகவும் அவசியம். அனைவரும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்கள். ஆனால் சட்டம் அனைத்துச் செயல்களையும் கட்டுப்படுத்துவது இயலாத ஒன்று.

### 2.6 வரலாற்று பூர்வ மனித உரிமைக் கோட்பாடு:

வரலாற்று பூர்வமாக மரபுகள், வழக்காறுகள் ஆகியவற்றின் அடிப்படைகளில் பரிணாமம் பெற்றதுதான் உரிமை என்று இக்கோட்பாடு வரையறுக்கின்றது. கால மாற்றம் மற்றும் சூழ்நிலைக்கேற்ப உரிமைகள் மாற்றத்திற்கு கால இலக்காகக் கூடியனவாகும் என்கின்றனர். மரபுகள் மற்றும்

வழக்காறு ஆகியவற்றின் கூறுகளே உரிமைகள் என இக்கோட்பாட்டாளர்கள் கூறுகின்றனர். பழங்கால அரசியல் சிந்தனையிலிருந்து குறிப்பாக 18ம் நூற்றாண்டில் உருவானது இக்கோட்பாடாகும். இக்கோட்பாட்டாளர்கள் பரிணாம வளர்ச்சியை மட்டும் ஏற்கின்றனரே தவிர, புரட்சிகர மாற்றங்களை ஆதரிக்கவில்லை.

எட்மண்ட் பர்க் (1729-1797) என்பார் இக்கோட்பாட்டை தீவிரமாக ஆதரிப்பவர்களில் ஒருவர் ஆவார். வரையறுக்கப்பட்ட உரிமைகளையும் மரபார்ந்த ஒழுங்கு முறைகளை வைத்து உருவாக்கப்பட்ட நிறுவனமே அரசியல் நிறுவனம் எனக் கூறுகின்றார். இந்நிறுவனம் மக்கள் தொடர்ச்சியாக அனுபவித்து வந்த நடைமுறைகளைக் கொண்டதுதான் என்கிறார். ஏன்னெனில் மக்கள் பின்பற்றி வந்த மரபுகள், வழக்காறுகள் ஆகியவற்றை அரசாங்கம் அங்கீகாரம் அளித்து, அவற்றைத் தொடர்ந்து செய்து வர உறுதிப்பாடு செய்யும் அதிகாரம் கொண்டது. சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவத்தைத் தவறான வழியில் கொண்டு சென்றது. பிரெஞ்சுப் புரட்சி என அப்புரட்சியைச் சாடுகின்றார். அதே நேரத்தில் இங்கிலாந்தில் ஏற்பட்ட 1688ஆம் ஆண்டு மாண்புற புரட்சியை பாராட்டி பேசுகின்றார். ஏனெனில் இப்புரட்சி ஆங்கிலேயர்கள் பல்லாண்டு காலமாக கடைப்பிடித்து வந்த மரபுகளைக் காக்க ஏற்பட்ட, போராட்டம் என ஆதரிக்கின்றார். இக்கோட்பாட்டை ஆதரிப்பவர்களில் மிகவும் முக்கியமானவர்கள் சாவிக்னி (1779-1861) ஹென்ரி மெயின் (1822-1888) போன்றோர்களாவர். இவர்கள் சட்ட நிபுணர்கள். இயற்கைச் சட்டத்தை எதிர்த்து குரல் கொடுக்கக் கூடியவர்கள். அதே நேரத்தில் பெந்தாம் , ஆஸ்டின் போன்ற ஆக்கப்பூர்வ சட்டப் பிரிவினர்களும் ஆதரிக்கின்றனர்.

உரிமைகள் என்பது வரலாற்றுப் பரிணாமத்தால் உருவானதென்பதுதான் இக்கோட்பாட்டின் சாராம்சம். தற்கால அரசியல் உரிமைகளை அரசு அங்கீகரித்து சட்டத்தின் மூலம் ஆதரவு தருகின்றது. பழைய காலத்தில் உரிமைகள் மரபு மற்றும் நடைமுறைப் பழக்கங்களை மையமாகக் கொண்டிருந்தது. பொது நன்மையை மனதில் கொண்டு மக்கள் சில பழக்க வழக்கங்கள், வழக்காறுகள், நடைமுறைகள் ஆகியவற்றின் மூலம் சில வரையறுக்கப்பட்ட செயல்களைச் செய்தனர். இது எல்லா தனி நபர்களுக்கும் பொருந்துவதாக அமைந்ததால் இவை உரிமைகளின்

அடிப்படைகளாக அமைந்து விட்டன. சில உரிமைகள் மற்றும் காலத்தால் வரலாற்று பூர்வமாக பரிணாமத்தால் உருவானது. சில உரிமைகள் சட்டத்தின் மூலம் உருவாக்கப்பபட்டன. இவற்றிற்கு வரலாற்று பூர்வ அடிப்படை கிடையாது. எல்லா வரலாற்று நிகழ்வுகளும் உரிமைகளாக மாறுவதில்லை. சில உரிமைகளாக இருக்கும். சில உரிமைகளாக இருக்காது. கிரேக்க நாட்டில் அடிமைகளை வைத்துக் கொள்வது அன்றைய நாளில் உரிமையாக இருந்தது. ஆனால் அது இன்று உரிமை கிடையாது. அடிமை முறைமை வைத்திருப்பதை நாகரீகம் கொண்ட எந்த நாடும் ஏற்றுக் கொள்ளாது. இதுபோல் இந்தியாவில் உடன்கட்டை ஏறுதல், தேவதாசி முறைமை, தீண்டாமை ஆகிய பழக்கங்கள் இருந்தன. அவை சமூகத்தின் கொர செயல்களாக, அநீதியை சமூகத்தில் ஏற்படுத்தியுள்ளன. இவற்றை மக்கள் மிகவும் கண்டிக்கின்றனர். எனவே, அரசு இவற்றையெல்லாம் தடை செய்வது அவசியமாகின்றது. ஏனெனில் உரிமைகள் நீதிக்கு வழிவகுக்கு வேண்டும் அல்லது சர்வாதிகாரத்திற்கும், அநீதிக்கும் வழிவகுக்கக் கூடாது. மொத்தத்தில் வரலாற்று பூர்வமாகத்தான் உரிமைகள் பரிணமிக்கப்படுகின்றதெனினும், வரலாறே முழு உரிமைகளுக்கும் பொறுப்பாக இருப்பதில்லை. எனவே, உரிமைகள் பற்றிப் பேசும்போது வரலாறும் அதனோடு தொடர்புடைய பிற பிரிவுகளையும், சீராக ஆய்வு செய்து உரிமைகளை வரையறுக்க வேண்டும்.

## 2.7 இலட்சிய பூர்வ உரிமை கோட்பாடு:

தனி நபர்களின் ஆளுமைப் பண்புகளை மேம்படுத்தத் தேவையான சூழ்நிலைகளை உருவாக்கித் தருவதுதான் அரசு என இலட்சிய பூர்வ உரிமை கோட்பாட்டாளர்கள் கருதுகின்றனர். ஏனெனில் அரசின் மூலம் தான் வெளிமட்ட சூழ்நிலைகளை அமைத்துத் தர முடியும் என எண்ணுகின்றனர். மனிதனின் அறநெறி வளர்ச்சிக்கு வித்திடக் கூடியதென இக்கோட்பாட்டை அறநெறியோடு இணைத்துக் கூறுகின்றனர். இக்கோட்பாட்டாளர்கள். ஏனெனில் அறநெறியோடு அணுகும்போதுதான் தனிநலம், பொதுநலம் என இரண்டையும் பார்த்து தனி நபரும் சமூகமும் பொதுவான அளவில் வளர்ச்சி பெற வேண்டுமென்பது இக்கோட்பாட்டின் முக்கியத்துவம். அரசு உருவாக்கித் தருகின்ற சூழ்நிலைகள் மக்கள் சமூகத்தில் அனுபவித்து வரும் உரிமைகள் என்கின்றனர். எனவே உரிமைகள் சமூகக் கண்ணோட்டத்துடன் பயன்படுத்தவல்லவையாகத் திகழ வேண்டும்.

தற்கால இலட்சியவாதிகளான காண்ட் (Kant) கிரின் (Green) போன்ற அறிஞர்கள் தனிநபர் வளர்ச்சி, ஆளுமை மேம்பாடு மட்டும் கூறாது. பொது நன்மைக்கு எவை தேவையோ அவைதான் முக்கியம் என்கின்றனர். அறநெறி மற்றும் தார்மீக வளர்ச்சிக்கு வழிவகை செய்யக் கூடிய சூழலை அமைப்பது அரசு என்று அறிவோம். மனித மனச் சிந்தனையே சுதந்திரம். சுதந்திரம் உரிமைகளோடு தொடர்புடையது. உரிமைகளைக் காக்க அரசு தேவைப்படுகின்றதென கிரின் என்பார் கூறுகின்றார். அரசின் நோக்கங்களை அடைய ஏதுவான சூழ்நிலைகளே உரிமைகள் என போசன்குட் (BosanQuet) என்பார் விளக்குகின்றார். உரிமைகள் இல்லாது மனிதன் சிறந்த மனிதனாக இருக்க முடியாது என வில்டி, குரோவுஸ் (Krovuse) போன்றோர் கூறுகின்றனர்.

இக்கோட்பாட்டில் சில குறைபாடுகளை சிலர் தெரிவிக்கின்றனர். இது பொதுவான அளவில் நோக்கங்களைத் தெளிவுபடுத்தாத அளவில் உள்ளதெனக் குறைபடுகின்றனர். அதிகமான மக்களுக்கு அதிகமான அளவில் பயன்தரத்தக்க அல்லது மகிழ்வளிக்கக் கூடியதென கோட்பாட்டாளர்கள் கூறுவது போல்தான் உள்ளதே தவிர, அளவிட்டு துல்லியமாகக் கூறும் அளவில் இல்லை. எனவே, அறநெறி தார்மீக வளர்ச்சிக்கு அரசு உருவாக்கித் தரும் சூழ்நிலை என்பதை அளவிட்டு உரைக்கக் கூடிய தெளிவான கோட்படாக இது அமையவில்லை.

### 2.8 சமூக நல்வாழ்வு உரிமைக் கோட்பாடு:

உரிமைகள் என்பதை உருவாக்கியதே சமூகம். இவற்றின் நோக்கம் சமூக நல்வாழ்வைப் பேண வேண்டும் என்பதுதான். இதுதான் இக்கோட்பாட்டின் மையக் கருத்து சமூக நல்வாழ்விற்கு உட்பட்டதுதான் தனி நபர்களின் உரிமைகள். சமூக நல்வாழ்விற்கு எதிராக செயல்பட எந்தத் தனிநபருக்கும் உரிமை கிடையாது. சமூக விரோதிகளுக்கு உரிமைகள் கொடுப்பது என்பது எண்ணவே முடியாதது. சமூக நலனிற்காக தனி நபர்களின் உரிமைகளுக்கு கட்டுப்பாடுகள் கொண்டு வரலாம் என்பது சமூக நல்வாழ்வு உரிமைக் கோட்பாடு. தனி நபர்களுக்கு உரிமைகள் வழங்குவதன் வாயிலாக, அவர்கள் பொது நன்மைக்கு உதவுவார்கள் என்ற எண்ணத்தில் தனி நபர்களுக்கு உரிமை வழங்கப்படுகின்றது. எந்தத் தனி நபரும் சமூகப் பணிகள் செய்யலாம் இருப்பார்களேயெனில், அவர்கள் எந்த உரிமையும் கோருவதற்கு

அறுகதை கிடையாது. எனவே சமூகப் பண்புடன் உரிமைகள் தனி நபர்களுக்கு வழங்கப்படுகின்றது. சமூக நீதியை அடையவும், சமூக நல்வாழ்வு மதிப்புகளை அடையவும், மக்களுக்கு உரிமை வழங்கப்படுகின்றது. இக்கோட்பாட்டை ஆதரித்தவர்களில் முக்கியமானவர் ஹெறரால்டு லாஸ்கி என்பாராகும். இவர் தவிர, ரோஸ்கோ பௌண்ட் மற்றும் சாபே (Roscoe Pound), (Chafee) போன்றோர்கள் ஆவர்.

## 2.9 தொகுப்புரை :

சமூக நல்வாழ்வு உரிமைக் கோட்பாட்டிலும் சில குறைகள் உள்ளன. உயர்ந்த அளவு சமூக நல்வாழ்வு என்பதை வரையறுப்பது கடினம். எனவே, நடைமுறையில் உயர்ந்த அளவு சமூக நல்வாழ்வு என்பது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான அளவில் இருக்கும். இதனைச் சரிவர வரையறுக்க முடியாது. அரசாங்கம் சமூக நல்வாழ்வு என்ற பெயரில் அத்துமீறி, தனிநபர்களின் உரிமைகளைப் பாதிக்கவல்ல சட்டங்களைக் கொண்டு வரலாம். இதனால் பொதுமக்கள் பாதிப்பிற்குள்ளாவர். இன்றும்கூட அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் வகையில் பல சட்டங்களை பாராளுமன்றமும், மாநிலச் சட்டமன்றங்களும் எடுத்து வருகின்றன.

## 2.10 முக்கிய வார்த்தைகள் :

சொத்து உரிமை, நீதிமன்றம், ஊதிய நிலுவை, அறநெறி உரிமைகள், தனிநபர், ரோமனியர்கள், சிவில் உரிமைகள்

## 2.11 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 2.1 ல் அறிக
வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 2.2 ல் அறிக
வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 2.2 ல் அறிக
வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 2.4 ல் அறிக

## 2.12 மாதிரி வினாக்கள் :

1. மனித உரிமைகளின் பண்புகளை விளக்குக.
2. மனித உரிமைகளின் வகைகளை விளக்குக.
3. மனித உரிமைகள் பற்றிய பல்வேறு கோட்பாடுகளை வரையறு.

4. மனித உரிமைகளின் அடிப்படை நியதியை விவாதிக்க.

## 2.13 பரிந்துரை நூல்கள்


1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

## அலகு - 3

## மனித உரிமைகளின் அடிப்படை நியதி, ஐ.நா அவை மனித உரிமை முறைமை மற்றும் பன்னாட்டு பொது உரிமைக் கழகம்

அறிமுகம் :

உரிமைகள் வழங்கப்பட்டுள்ள நாடுகளில் அடிப்படை சுதந்திரங்கள் அனுமதிக்கப்பட்டுள்ளன. மக்கள் நலம், தேசிய பாதுகாப்பு, சட்ட ஒழுங்கு பாதுகாப்பு, பொது நலப்பாதுகாப்பு, அறநெறிப் பராமரிப்பு, மற்றவர்களுடைய சுதந்திரங்களுக்கு மதிப்பளிப்பது மற்றும் அங்கீகரிப்பது ஆகியவை மக்களாட்சி சமூகத்தில் பொது நலன்களை பேணுவதற்காக இந்த உரிமைகளில் தடைகள் விதிக்கப்பட்டுள்ளன. அமெரிக்க ஐக்கிய நாடுகிளல் தலைமை நீதிமன்றம் அரசியலமைப்புச் சட்டங்களின் உரிமைகளுக்கு மதிப்பளித்திருக்கிறது. எந்த உரிமைகளும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் முழுமையாக வழங்கப்படவில்லை. சில கட்டுப்பாடுகளுடன் தான் வழங்கப்பட்டுள்ளன. உதாரணமாக அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பேச்சுரிமை எதிர்ப்பு கிளர்ச்சியையோ, அவதூறையோ, வெறுப்பூட்டும் வகையிலோ இருக்கக்கூடாது. சட்டத்திற்கு முன் சமத்துவ உரிமை மக்களைக் கட்டுப்படுத்தும் சட்ட அதிகாரத்தை சட்டமன்றம் மறுக்க இயலாது. அதே சமயம் அந்த வகைப்பாடு கடுமையானதாக இருக்கக் கூடாது. சட்டமன்றம் கடன் கொடுப்பவர்களின் செயல்களை ஒழுங்குபடுத்துவதற்கு சட்டமியற்ற முடியாது. அவ்வாறு வகைப்படுத்தினால் சட்டத்தின் முன சமத்துவக் கோட்பாட்டிற்கு முரண்பாடாக அமையும். எனவே வகைப்படுத்துதல் ஏற்றுக் கொள்ள கூடிய வகையில் இருக்க வேண்டும்.

**நோக்கங்கள் :**

1. அடிப்படை உரிமைகளும் சமூக தகவுகளுக்கும் உள்ள உறவுகளை அறிதல்.
2. மனித உரிமைகளின் வளர்ச்சிக்கு ஐ.நா சபையின் பங்கை அறிதல்.
3. மனித உரிமைகளை பாதுகாப்பதில் பன்னாட்டுச் சட்டத்தின் பங்கை கற்றல்

வடிவமைப்பு

உட்கூறுகள்



## 3.1 உரிமைகளின் மோதல் :

மனித உரிமைகள் முழுமையானவை அல்ல என்பதற்காகவும் அவைகள் சில கட்டுப்பாடுகளோடு பயன்படுத்தப்பட வேண்டும் என்பதற்காகவும் சட்டமன்றம் மற்றும் ஆட்சித்துறை அவ்வுரிமைகளை அபகரித்துக் கொள்ள முடியாது. மனித உரிமைகளை விதிக்கக்கூடிய தடைகள் ஏற்புடையதாக இருக்க வேண்டும். பெரும்பான்மையினர் விருப்பத்திற்கேற்ப மனித உரிமைகள் அமையக் கூடாது. மனித உரிமைகளுக்கும் மற்ற உரிமைகளுக்கும் உள்ள வித்தியாசம் மனித உரிமைகளுக்கும் மற்ற உரிமைகளுக்கும் உள்ள

வித்தியாசம் மனித உரிமைகளை சிறுபான்மையினரும், பெரும்பான்மையினரின் விருப்பத்திற்கேற்ப எதிராக அமல்படுத்த முடியும். ஆகவே, மனித உரிமைகள் சாதாரணமாக பாராளுமன்ற சட்டத்திற்கு உட்பட்டு இருக்க வேண்டுமெனில் மற்ற சட்டப்பூர்வமான உரிமைகள் போன்ற மனித உரிமைகளுக்கும் சட்ட அந்தஸ்து வழங்கப்பட வேண்டும். ஆகவே மனித உரிமைகளுக்கு விதிக்கப்பட்டுள்ள தடை ஒரு முக்கிய அம்சம் வாய்ந்தது ஆகும். இத்தடை பாராளுமன்ற உறுப்பினர்கள் மற்றும் அதிகார வர்க்கத்தினர் ஆகியோர்களின் புலன் உணர்வு சார்ந்த கொள்கை அடிப்படையில் அமையக் கூடாது.

ஊர்வலம் செல்லும் உரிமை மற்றும் மறியல் செய்யும் உரிமை மக்களாட்சிக்கு எதிரான உரிமைகளாக கருதப்படுகின்றன. மக்களாட்சிக்கு எதிரான உரிமைகள் முழுமையானதாக இருக்க முடியாது. பேச்சுரிமை, கருத்துக்களை கூறும் உரிமை, சங்கம் அமைத்துக் கொள்ளும் உரிமை, சில கட்டுப்பாடுகளுடன் அனுமதிக்கப்படுகிறது. சங்கம் அமைத்துக் கொள்ளக் கூடிய உரிமை மற்றவர்களை பாதிக்காத வகையில் பயன்படுத்தப்பட வேண்டும். எல்லா தரப்பு மக்களின் உரிமைகளும் பாதுகாக்கக் கூடிய வகையில் மனித உரிமைகள் பயன்படுத்தப்பட வேண்டும். உரிமைகளின் மோதல் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நீதிமன்றங்களிலும், மக்களிடையேயும் பிரபலமானவை. உதாரணமாக சுதந்திரமாக கருத்துக்களை கூறும் உரிமை. ஒரு குற்றவாளி தண்டிக்கப்படுவதற்கு முன்பாக புதிய கதைகளை உருவாக்கி தவறு கண்டுபிடிக்க முயலக் கூடாது. உரிமைகள் மோதல் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் பல்கலைக் கழகங்களில் நுழைவதற்கு கறுப்பின மக்களுக்கு ஒதுக்கீடு வழங்கியதை கூறலாம். கறுப்பின மக்களுக்கு ஒதுக்கீடு வழங்கியதின் அடிப்படை நியதி அவர்களை மற்ற அமெரிக்க மக்களிடமிருந்து வேறுபடுத்துவோரை தவிர்ப்பதற்காகும்.

### 3.2 நீதிபதிகள், சமுதாயத் தகவுகள் மற்றும் அடிப்படை உரிமைகள் :

அடிப்படை உரிமைகள் நீதிபதிகளுக்கு அதிக அதிகாரத்தை வழங்கும் என்ற கருத்து நிலவுகிறது. நீதிபதிகள் அடிப்படை உரிமைகளுக்கு விளக்கம் அளிக்கும் பொழுது மிகக் கவனத்தோடு நடந்து கொள்ள வேண்டும். இல்லையெனில் அவர்கள் பொது மக்களின் விமர்சனத்திற்கு ஆளாவர். பொதுமக்களின் முரண்பாடான விமர்சனம் நீதிசெயலையோ அல்லது நீதியற்ற

செயலையோ இயற்கையாகவே பின்பற்ற வேண்டியதன் அடிப்படையில் அமையும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அடிப்படை உரிமைகள் நிறைவேற்றப்படுவதில் பொதுமக்களின் விமர்சனத்திற்கு உள்ளாகி நீதிமன்றங்கள் அடிப்படை உரிமைகளின் மீது பல்வேறு தீர்ப்புகளை அளித்திருக்கின்றன. இவ்விதமாக நீதிபதிகள் அடிப்படை உரிமைகளுக்கு விளக்கம் அளிக்கும் பொழுது சமூக தகவுகளையும், எண்ணங்களையும் கருத்தில் கொள்ள நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தலைமை நீதிமன்றம் பிரவுன் மற்றும் கல்வி வாரிய வழக்கில் பள்ளிகளை இன அடிப்படையில் பாகுபடுத்துவது தவறு என்று மக்களின் மாறுபட்ட சமூக எண்ணங்களைக் கருத்தில் கொண்டு தீர்ப்பு வழங்கியது. அதற்கு முன்பு இன அடிப்படையில் பள்ளிகளில் பாகுபாடு இருக்க வேண்டும் என்பது சரியானதே என்ற சமூக எண்ணம் நிலவி வந்தது.

### 3.3 சமூகத் தகவுகள்:

அடிப்படை உரிமைகளைப் பற்றி விவாதிக்கும் பொழுது சமூகத்தில் ஏற்படக் கூடிய சமூகத் தகவுகளையும், எண்ணங்களையும் மனதில் கொள்ள வேண்டும் என்பதை மேற்கூறிய தலைமை நீதிமன்றத்தின் தீர்ப்பு உதாராணமாக அமைந்துள்ளது. சமூகத் தகவுகளுக்கும் சட்டத்திற்கும் இடையே உறவு இருக்கிறது. சட்டங்கள் மக்களுடைய பொதுவான தகவுகளை களைந்து விட முடியாது.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 1. சமூக தகவுகளின் முக்கியத்துவத்தை கூறுக.

அடிப்படை உரிமைகள் சமூகப் பகிர்வு தகவுகளின் வடிவமைப்பிற்குள் அமைய வேண்டும். இந்தத் தகவுகள் பொது மக்களாலும் செய்தித் தொடர்பு மூலமாகவும் விவாதிக்கபட்டு பகுப்பாய்வு முறையில் அமைய வேண்டும் அவ்வாறு அமையாத தகவுகள் அடங்கிய வடிவமைப்பு ஏமாற்றத்தையும், வன்முறையையும் தூண்ட வழிவகுக்கும். ஆகவே அடிப்படை உரிமைகளைப் பற்றிய கல்வி சார்ந்த பகுதி, தீர்ப்புக்களை வழங்கக் கூடிய பகுதிகளை விட முக்கியமாகக் கருதப்படுகின்றது.

அடிப்படை உரிமைகள் சுதந்திரமாக உருவானது. இவை நீதிமன்றங்கள் மூலமாக நிர்வகிக்கப்பட வேண்டும். அதிகாரிகளோ நீதிமன்றம் சாராத தீர்ப்பாயங்களோ அடிப்படை உரிமைகளை நிர்வகிக்கக் கூடாது. அவ்வாறு நீதிமன்றம் சாராத தீர்ப்பாயங்கள் அடிப்படை உரிமைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை முடிவெடுக்கும் பொழுது பிரச்சினைகள் ஏற்பட வாய்ப்பிருக்கிறது. இது உலகத்திலுள்ள பல்வேறு நாடுகளிலும் நிரூபணம் ஆகியிருக்கிறது.

## 3.4 குறிப்பிட்ட உரிமைகளுக்கு அதிக முக்கியத்துவம் வழங்குதல் :

மனித உரிமைகளில் இன்றுள்ள முக்கியப் பிரச்சினை மனித உரிமைகள் ஆணையமோ, மனித உரிமைகள் ஆய்வாளர்களோ மனித உரிமைகளின் முக்கியத்துவத்தை மதிப்பதில்லை என்பதாகும். ஒரு குறிப்பிட்ட உரிமைக்கு அதிக முக்கியத்துவம் வழங்கும்பொழுது மற்ற உரிமைகளை செயல்படுத்துவதிலுள்ள முக்கிய விஷயங்கள் அடிபட்டுப் போகின்றன. மனித உரிமைகள் ஆய்வாளர்கள் இந்த விஷயத்தைக் கருத்தில் கொள்வதில்லை. சமத்துவ உரிமை, பேச்சுரிமை, தனி மனித உரிமை, சொத்துரிமை மற்ற உரிமைகளை விட முக்கியமான உரிமைகள் ஆகும். இதில் ஏதாவது ஒரு உரிமைக்கு அதிக முக்கியத்துவம் வழங்கும் பொழுது மற்ற உரிமைகளின் முக்கியத்துவம் அடிபட்டுப் போகிறது. எந்த ஒரு குறிப்பிட்ட உரிமைக்கும் முக்கியத்துவம் வழங்கும்பொழுது அதற்கு அடிப்படை நியதி இருக்க வேண்டும். உதாரணமாக சில பாகுபாடுகளை நீக்க விரும்பும் பொழுது மற்ற உரிமைகளுக்கு அது பிரச்சனையை உருவாக்கும். சொத்துரிமையையும், பேச்சுரிமையையும் பல்வேறு வகையான பாகுபாடுகளின் அடைவெளிகளைக் குறைத்திருக்கிறத. பேச்சுரிமை, சொத்துரிமை மற்றும் பொருளாதார சுதந்திரம் அரசாங்க செயல்களைவிட நலிந்த வர்க்கத்தினருடைய மேம்பாட்டிற்கு முக்கியப் பணி ஆற்றியிருக்கின்றன.

## 3.5 கடமைகளற்ற உரிமைகள் :

ஹோவுற்பெல்ட் என்ற தத்துவஞானி உரிமைகளுக்கும், கடமைகளுக்கும் உள்ள உறவுகள் உரிமைகளுக்கும், சலுகைகளுக்கும் உள்ள வேறுபாடுகள் ஆகியவைகளின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியிருக்கிறார். இவர் கடமைகளற்ற உரிமைகள் இருக்க முடியாது என்பதை வலியுறுத்துகிறார். ஒருவருக்கு வழங்கப்பட்ட உரிமை மற்றவர்களின் கடமையாக அமைகிறது என்று குறிப்பிடுகிறார். கடமைகளற்ற உரிமை அர்த்தமற்றது என்று குறிப்பிடுகிறார். அதேபோன்று உரிமைகளையும், சலுகைகளையும் வேறுபடுத்துகிறார். சலுகை ஒருவருக்கு கஷ்டப்படுவதின் அடிப்படையில் அமைகிறது. சலுகை என்பது ஒருவர் விருப்பப்பட்டு வழங்குவது. உரிமை என்பது சட்டபூர்வமாக ஒருவருக்கு வழங்கப்படுவது. வேலைவாய்ப்புரிமை, நலப்பணி உரிமை ஆகியவைகள் உரிமைகள் அல்ல. வேலைவாய்ப்புரிமை

உரிமை என்று கருதுவது தவறு. ஏனெனில் ஒரு நபர் ஒருவரை வேலைக்கு அமர்த்த வேண்டும் என்ற கடமை கிடையாது. அதே போல் நலப்பணி என்பதும் உரிமையாகாது. நலப்பணி என்பது ஒரு நபர் மற்றவர்களுக்கு வழங்கக்கூடிய சலுகையாகும். மேற்கூறிய பகுப்பாய்வு சரியாகவும் இருக்கலாம். சரியாக இல்லாமலும் இருக்கலாம். ஆனால் உரிமை என்பது மற்றவருடைய அல்லது மற்ற நிறுவனத்தினுடைய கடமையில் அமைவது என்பது மறுக்க முடியாதது ஆகும். ஒரு நபரின் உரிமையின் கடமை எவ்வாறு அமைகிறதோ அதே போன்று மற்ற நபரின் உரிமையிலும் கடமை அமைகிறது. இன்றுள்ள சமுதாயத்தில் மக்களுக்கு, சமுதாயமும் உரிமைகளின் முக்கியத்துவத்தைப் பற்றி பறைசாற்றி வருகின்றன. அவை கடமைகளின் முக்கியத்துவத்திற்கு முக்கியத்துவம் வழங்குவதில்லை. அரசாங்கங்கள், மனித உரிமைகள் ஆணையம், மற்ற அரசாங்க செயலாண்மைகள் ஆகியவை இந்த வகையில் சந்தேகப்படக்கூடிய தலைமையை வழங்குகின்றன. அவைகள் மக்களுக்கு எந்தெந்த மனித உரிமைகள் கிடைக்கின்றன என்பவற்றை அனுபவபூர்வமாக பறைசாற்றுகின்றன. ஆனால் அவை மக்கள் பொறுப்புடன் மனித உரிமைகளை அனுபவிப்பதற்கு உள்ள கடமைகளைப் பற்றி மக்களுக்கு கற்பிப்பதில்லை.

### 3.6 நீதித்துறையை மதிப்பிடுதல் :

மனித உரிமைகளை செயல்படுத்துவதில் நீதிமன்றத்தினுடைய பணி, பங்கு மிக அவசியமானது என்ற எண்ணம் குறைவாகக் காணப்படுகிறது. சுயேட்சையாக சுதந்திரமாக இயங்கக்கூடிய நீதித்துறை மனித உரிமைகளின் அவசியத்தை வலியுறுத்தமுடியும். மனித உரிமைகள் தனி நபர் செயலாலோ அரசு செயலாலோ புறக்கணிக்கப்படலாம். அரசாங்கத்தினுடைய ஆக்கிரமிப்பிலிருந்து பொதுமக்களைப் பாதுகாப்பதற்காக உருவாக்கப்பட்டவை. இந்த மனித உரிமைகள் சரியாக மக்களுக்கு கிடைக்க வேண்டுமெனில், சுயேட்சையாகவும் மற்றும் சுதந்திரமாகவும் இயங்கக்கூடிய நீதித்துறை மிகவும் அவசியம்.

### 3.7 ஐ.நா. அவை மனித உரிமை முறைமை

ஐ.நா. அவையின் மனித உரிமைகள் மகாசாசனம் மற்றும் மனித உரிமைகள் தொடர்பான சட்டம் மற்றும் பிற நிறுவனங்கள் ஆகியன எவ்வாறு வளர்ந்துள்ளன என்பதை இப்பாடத்தில் காண்போம். மனித உரிமை தொடர்பான சட்ட நெறிமுறைகள் மற்றும் நிறுவனங்கள் ஆகியன மனித உரிமைகள் மகாசாசனம் பிற ஐ.நா. அவையின் கட்டுப்பாட்டில் ஏற்பட்ட ஒப்பந்தங்கள்

ஆகியவற்றின் வாயிலாகவே வளர்ந்தவை என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

### 3.8 ஐ.நா. சாசனம் :

இன்றைய பன்னாட்டு மனித உரிமைகள் சட்டம் என்பது இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் உருவான வளர்ச்சியாகும். ஹிட்லரின் ஏதேச்சதிகாரத்தால் மனித உரிமை மீறல்கள் ஏராளமாக ஏற்பட்ட காரணத்தால்தான் இந்த பன்னாட்டு மனித உரிமைகள் சட்டம் என்பது உருவானதென்று கூட கூறலாம். சர்வதேச சங்கம் மனித உரிமை மீறல்களைத் தடுக்க உரிமை நடவடிக்கைகள் எடுத்திருந்தால் இந்த மாதிரியான ஏராளமான மனித உரிமை மீறல்கள் இரண்டாம் உலகப்போரில் நிகழ்ந்திருக்காது எனக் கூறுகின்றனர். எனவே பன்னாட்டுச் சட்டம் மனித உரிமைகளைக் காக்கும் வகையில் இன்று வளர்ச்சி பெற்றுள்ளது.

பன்னாட்டு மனித உரிமைக்கான ஆரம்பத்தை 1945ல் அமெரிக்க குடியரசுத் தலைவர் ~~ரூஸ்வேல்ட்~~ துவங்கி வைத்தார். ரூஸ்வேல்ட்டின் உலகமே போற்றும் நான்கு சுதந்திரம் என்பதுதான். இரண்டாம் உலகப்போரின் தாரக மந்திரமாக இருந்தது. பின்னர் இவற்றின் மூலம் தான் இன்றைய ஐ.நா. சபை தோன்றியது. பேச்சு மற்றும் கருத்துக்களை வெளியிடும் சுதந்திரம் ஒவ்வொரு மனிதனும் தான் விரும்பும் வகையில் இறைவனை வழிபடும் சுதந்திரம், விரும்பியதைச் செய்யும் சுதந்திரம், பயமின்றி செயல்படும் சுதந்திரம் ஆகியனதான் ரூஸ்வேல்ட் கூறிய நான்கு சுதந்திரங்கள். இவை தார்மீக நெறியை ஒவ்வொருவரிடமும், ஒவ்வொரு நாட்டிலும் வளர வைக்கக் கூடியது. இதனால் போரற்ற அமைதியான நல்வாழ்வை மக்களும் நாடுகளும் விரும்பும் என்பதால் நாடுகள் இச்சுதந்திரத்தைப் பாதுகாக்க எதிரிகளோடு போரிட்டு வென்று இறுதியில் ஐ.நா. சபையைத் தோற்றுவித்தன.

### 3.9 ஐ.நா. சாசனமும் மனித உரிமைகளும்

ஐ.நா. சபையின் பொது அவையினால் 1948ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மனித உரிமைகள் பற்றிய பிரகடனம் பிறப்பிக்கப்பட்டது. இது உலகளாவிய அளவில் அனைவருக்கும் பொருந்தக் கூடியது. எனவே மனித உரிமை நாள் என்று கூறக்கூடிய அளவிற்கு இத்தீர்மானம் பெயர் பெற்றுள்ளது. இது உலக

நாடுகளில் வாழும் அனைத்து மக்களும் உரிமைகள் பெற வழி வகுக்கக் கூடிய பிரகடனம் இது. இதனுடைய முகவுரையில் சொல்லப்பட்டுள்ளவற்றைப் பார்ப்போம்.

உலகில் அமைதி, நீதி, சுதந்திரம் ஆகியவற்றிற்கு அடிப்படையாக அமையக்கூடியதுவும், மக்களின் அந்தஸ்து, சமத்துவம் மற்றும் மக்களிடமிருந்து பிரிக்க முடியாதவை உரிமைகள் ஆகும். மக்களின் உரிமைகள் மறுப்பதன் மூலமும், மக்கள் உரிமைகளை எதிர்ப்பது மூலமும் மனித உரிமை மீறல் ஏற்பட்டு மனிதனின் மனசாட்சிக்கு ஒப்பில்லாத கொடூர வன்முறைச் செயல்கள் ஏற்படுகின்றன. உலகில் மனிதனின்பேச்சுரிமை நம்பிக்கை, விரும்பியதைச் செய்வதும், பயமின்றி வாழ்வதுவும், மிக உயர்நத இலட்சியங்கள் அவற்றைச் செய்ய வழி வகுப்பது, மனித உரிமைகள், வன்முறை, போராட்டம், ஏதேச்சதிகாரம் போன்ற செயல்கள் மனித உரிமை மீறல்கள். இவற்றைச் சட்டத்தில் ஆட்சியின் மூலம் தடுத்து, உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும்.

நாடுகளுக்கிடையே நட்புறவை வளர்ப்பது மிகவும் அவசியமான ஒன்றாகும். ஐ.நா. சபையின் சாசனத்தில் நம்பிக்கை கொண்டு மக்களின் அந்தஸ்து, சம உரிமை, ஆண், பெண் ஆகிய அனைவரும் அடிப்படை சுதந்திரத்தைப் பெற்று உலக மக்களின் வாழ்க்கைத் தர மேம்பாட்டிற்கும், சமூக வளர்ச்சிக்கும் ஒன்றுபட்டு பாடுபட வேண்டும். ஐ.நா. உறுப்பு நாடுகள் ஒன்று கூடி, உறுதி எடுத்து, ஐ.நா. சபையோடு மனித உரிமைகள், அடிப்படை சுதந்திரம் ஆகியன அனைவருக்கும் கிடைக்க ஒத்துழைக்க வேண்டும். எனவே மனித உரிமைகள் மற்றும் சுதந்திரம் ஆகியவற்றைத் தெரிந்து கொண்டால் உறுதி மொழி எடுத்த நோக்கங்களை எளிதில் பெற்று விடலாம். இதற்கான தீர்மானத்தை ஐ.நா. பொது அவை நிறைவேற்றியுள்ளது. எல்லா நாடுகளும் எல்லா மக்களும் சாதிக்க வேண்டிய பொதுவான உலகத் தரம் கொண்டது. இந்த பன்னாட்டு மனித உரிமைகள் சாசனம். ஒவ்வொரு மனிதனும் சமூகத்தில் ஒவ்வொரு அங்கமும் இந்த சாசனத்தை மனதில் நிலையாக நிறுத்தி, இதன் அம்சங்களை மக்களுக்கு மனித உரிமைகள் மீதான விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். ஆக்கபூர்வ ரீதியில் மனித உரிமைகள் மேம்பாட்டிற்கும், மதிப்பிற்கும் தேவையான நடவடிக்கைகளை உறுப்பினர் நாடுகளும் தங்கள் நாடுகளில் மக்களுக்கு மேற்கொண்டு உலகளாவிய அந்தஸ்தை இதற்கு கொடுக்க வேண்டும்.

பிரிவு 1:

உரிமைகள் மற்றும் அந்தஸ்து ஆகியவற்றில் மனிதர்கள் அனைவரும் சுதந்திரமும் சமத்துவமும் கொண்டவர்கள். மனிதர்கள் சகோதரத்துவ பாசத்தோடு ஒருவருக்கொருவர் பரஸ்பரமாகச் செயல்பட வேண்டும்.

பிரிவு 2:

இச்சாசனத்தில் வரையறுக்கப்பட்ட எல்லா உரிமைகளையும், சுதந்திரங்களையும் அனைவரும் பயன்படுத்த உரிமை கொண்டவர்கள். இனம், நிறம், பால், மொழி, மதம், அரசியல் மற்றும் பிற கருத்துக்கள், நாடு, சமூகத்தோற்றம், சொத்து, பிறப்பு மற்றும் பிற அந்தஸ்து போன்ற வித்தியாசங்களைக் கடந்து சாசன உரிமையையும் சுதந்திரத்தையும் பயன்படுத்தவல்லவர்கள்.

தவிர, அரசியல் முறை, பன்னாட்டு அந்தஸ்து போன்றவற்றைக் கருதி எந்த ஒரு மனிதனையும் வேறுபடுத்தி பார்க்கக் கூடாது. அந்த நாடு சுதந்திரமானதா அல்லது பிற நாட்டின் ஆதிக்கத்தில் உள்ளதா என்ற அடிப்படையில் மனிதர்களின் உரிமைகள் மறுக்கக் கூடாது.

பிரிவு 3:

ஒவ்வொரு மனிதனும் பாதுகாப்புடனும், சுதந்திரமாக வாழவும் உரிமை கொண்டவர்கள்.

பிரிவு 4:

எந்த மனிதனையும் அடிமையாகவோ அல்லது அடிமைத்தனமாகவோ வைத்திருக்கக் கூடாது. அடிமை மற்றும் அடிமை வியாபாரத்தை அடியோடு ஒழித்துவிட வேண்டும்.

பிரிவு 5:

மனிதாபிமானமற்ற வகையில் எந்தவொரு மனிதனையும் சித்ரவதை செய்வதோ, தண்டனை வழங்கவோ கூடாது.

பிரிவு 6:

சட்டத்தின் முன் அனைவரும் உலக அளவில் தனி மனிதனாக இருக்க உரிமை கொண்டவன்.

பிரிவு 7:

சட்டத்தின் முன் அனைவரும் சமம். எந்தவிதப் பாகுபாடின்றி சட்டத்தின்பால் சமத்துவமாக பாதுகாப்பு வழங்கப்பட வேண்டும்.

பிரிவு 8:

அரசியலமைப்பாலும், சட்டத்தாலும் வழங்கப்பட்ட அடிப்படை உரிமைகள் மீறப்பட்டால் அம்மீறல்களுக்குத் தீர்வு காண தேசிய அளவில் திறமையான வழக்கு மன்றங்களை அணுகி தீர்வு பெற உரிமை கொண்டவர்கள்.

பிரிவு 9:

எந்தவொரு மனிதனையும் கட்டாய காவலிலோ, சிறையிலோ அல்லது ஏதேச்சதிகாரமாகக் கைது செய்யவோ கூடாது.

பிரிவு 10:

ஒவ்வொரு மனிதனுக்கும் சுதந்திரமான பாரபட்சமற்ற தீர்ப்பாயத்தின் முன் தங்களது உரிமைகளை பிரச்சனைகளைக் கூற சம உரிமை உண்டு. கிரிமினல் தொடர்பான வழக்குகளில் குற்றம் சாட்டப்பட்டால், அவ்வழக்கு தொடர்பான தங்களது நிலையை தீர்ப்பாயத்தில் கூற உரிமை உண்டு.

பிரிவு 11:

குற்ற வழக்குகளில் தண்டனை விதிக்கப்பட்டவர்கள், தாங்கள் அவ்வழக்குகளில் தொடர்பில்லாது இருந்தால் அவர்கள் தங்களைக் காத்துக் கொள்ள பொது விசாரணைக்கு உட்பட்டு தங்களைக் காத்துக் கொள்ள உரிமை உண்டு.

பிரிவு 12:

எந்தவொரு நாடும் பிறர் மீதான தனிவாழ்வு, குடும்பம், வீடு, கடிதப் போக்குவரத்து, கௌரவம், நற்பெயர் ஆகியவற்றின் மீது ஏதேச்சதிகார ரீதியில்

தலையிட அனுமதி கிடையாது. இந்த மாதிரி தலையீடு அல்லது குறுக்கீடு மேற்படி விஷயங்களில் செய்தால் சட்டபூர்வ பாதுகாப்பு மக்களுக்கு வழங்க வேண்டும்.

பிரிவு 13:

ஒவ்வொருவரும் நாட்டின் எந்தப் பகுதியிலும் வசிக்கவும், சென்று வரவும் உரிமை கொண்டவர்கள்.

பிரிவு 14:

ஒவ்வொருவரும் பிற நாடுகளில் தங்களைக் காக்க தஞ்சம் (asylum) பெறும் உரிமையும் கொண்டவர்கள்.

பிரிவு 15:

ஒவ்வொருவரும் தங்களது நாட்டில் அந்நாட்டு உரிமை கொண்டவர்களாக இருக்க வேண்டும்.

நாட்டின் உரிமையை எந்தவொரு மனிதரிடமிருந்தும் பறிக்கக் கூடாது. பிற நாடுகளில் உரிமை கோரினால், அந்த உரிமையைத் தடுக்கக் கூடாது.

பிரிவு 16:

பருவம் அடைந்த ஆண்களும், பெண்களும் சமமாக திருமணம் செய்து கொள்ளும் உரிமையும், குடும்பம் அமைக்கும் உரிமையும் கொண்டவர்கள். இனம், தேசியம், மதம் ஆகியவற்றில் வேறுபாடு இன்றி, சம உரிமை கொண்டவர்கள். திருமண உரிமை மட்டுமின்றி திருமண முறிவு உரிமையும் சமமாகக் கொண்டவர்கள். திருமணம் இரண்டு பேர்களின் முழு விருப்பத்திற்கிணங்வே நடைபெற வேண்டும். குடும்பம் என்பது இயற்கையான அடிப்படை குழுவாக இருப்பதால் சமூகமும், அரசாங்கமும் இதனைப் பாதுகாக்க வேண்டும்.

பிரிவு 17:

ஒவ்வொருவரும் தனித்தனியாகவும் மற்றவர்களோடு சேர்ந்து கூட்டமாக சொத்து வைத்து கொள்ளவும் உரிமை கொண்டவர்கள். எவரும் அத்துமீறி இவர்களது சொத்தைப் பறித்து கொள்ள முடியாது.

பிரிவு 18:

ஒவ்வொருவரும் சுதந்திரமாக சிந்தனை செய்யவும், மனசாட்சிப்படி நடக்கவும், மத உரிமையும் கொண்டவர்கள். மதமாற்றம், நம்பிக்கை ஆகியவற்றிற்கும் இது பொருந்தும். தனியாகவோ, மற்றவர்களோடு சேர்ந்து கூட்டாகவோ, பொது அமைப்புக்கள் வாயிலாகவோ அல்லது தனிப்பட்ட அமைப்புகளையோ தங்களது மதத்தைப் பரப்பவும், பின்பற்றவும், வழிபடவும் உரிமை கொண்டவர்கள்.

பிரிவு 19:

ஒவ்வொருவரும் தங்களது கருத்துக்களை உருவாக்கிக் கொள்ளவும் பரப்பவும் சுதந்திரம் கொண்டவர்கள்.

பிரிவு 20:

அமைதி வழியில் கூட்டம் கூட்டவும், சங்கங்கள் அமைத்துக் கொள்ளவும் ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. யாரையும் கட்டாயப்படுத்தி சங்கங்களில் சேர்க்கக் கூடாது.

பிரிவு 21:

அரசாங்கத்தில் நேரடியாகவோ அல்லது தங்களது பிரதிநிதிகள் வாயிலாகவோ பங்கு பெறும் உரிமையை மக்கள் ஒவ்வொருவரும் கொண்டுள்ளனர். இதே மாதிரி, அரசாங்கப் பணிகளில் சேரவும் சம உரிமைகளை அனைவரும் கொண்டுள்ளனர். அரசாங்கம் என்பது மக்களின் விருப்பத்தால் ஏற்படக் கூடியது. எனவே நேரத்திற்கு நேரம், மக்களின் விருப்பத்தை அறிய முறையான தேர்தல்கள் நடத்தப்பட வேண்டும். சம உரிமையையும், அனைவரும் பங்குபெறும் வகையில் வாக்குரிமை வழங்கப்பட வேண்டும். மக்கள் தங்கள் வாக்குகளை இரகசியமாகவும், சுதந்திரமாகவும் பயன்படுத்தும் வகையில் தேர்தல் செயல்முறைகள் இருக்க வேண்டும்.

பிரிவு 22:

ஒவ்வொருவரும் சமூகம் அங்கமாக இருப்பதால் அவர்களுக்கு சமூகப் பாதுகாப்பு வழங்க வேண்டும். சமூகப் பாதுகாப்பினை நாடு மற்றும் பன்னாட்டு ஒத்துழைப்பிற்கேற்ப ஒவ்வொரு நாடும் அந்தந்த நாட்டின் அமைப்பு மற்றும் இயற்கை வளங்களுக்கேற்ப பொருளாதார, சமூகக் காலாச்சார உரிமைகளை மக்களுக்கு

வழங்க வேண்டும். ஏனெனில் இவைதான் மனிதனின் ஆளுமைத் தன்மையை வளர்க்கவும், மனித அந்தஸ்தைக் காக்கவும் உதவுகின்றன.

பிரிவு 23:

ஒவ்வொருவரும் வேலை பெறும் உரிமையும், வேலைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் உரிமையையும் கொண்டவர்கள். இவர்கள் நியாயமான, உகந்தவகை வேலைக் கட்டுப்பாடுகள் மற்றும் வேலையின்மைக்கு எதிரான பாதுகாப்பு உரிமையும் பெற்றவர்கள்.

எந்தவிதப் பாகுபாடும் இன்றி, அனைவரும் சம வேலைக்கு சம ஊதியம் கொண்டவர்கள்.

ஒவ்வொருவரும் தன்னையும், தன்ளை சார்ந்த குடும்பத்தைக் காக்கும் வகையிலும், அந்தஸ்தைக் காக்கும் வகையில் நியாயமான ஊதியம் பெறும் உரிமை கொண்டவர்கள்.

ஒவ்வொருவரும் தங்களது நலன்களைக் காக்கும் பொருட்டு தொழிற்சங்கங்களை அமைக்கவும், தொழிற்சங்கங்களில் சேரவும் உரிமை கொண்டவாக்ள.

பிரிவு 24:

ஒவ்வொருவரும் வேலை செய்யும்பொழுது களைப்பு ஏற்படும்போது ஓய்வு எடுத்துக் கொள்ளவும், ஊதியத்துடன் கூடிய விடுப்புக்கள் எடுத்துக் கொள்ளவும் உரிமை கொண்டவர்.

பிரிவு 25:

ஒவ்வொருவரும் பொது மருத்துவ நலன்களைப் பெறும் உரிமை கொண்டவர்கள். உணவு, உடை, உறவிடம், மருத்துவ உதவி, தேவையான சமூகப் பணிகள் போன்றவை ஒவ்வொருவருக்கும் மற்றும் அவரைச் சார்ந்த குடும்பத்தினர்களுக்கும் கிடைக்க வேண்டும். வேலையின்மையிலிருந்து பாதுகாப்பு பெறும் உரிமை, நோய், நொடி, இயலாமை, வயது முதுமை போன்ற காரணங்களால் வாழ இயலாதவர்களுக்கு போதிய பாதுகாப்பும், ஆதரவும் பெற உரிமை கொண்டவர்கள். தாய்மார்களும், சிறுவர்களும் தனிக்கவனத்திற்கும் உதவிகளுக்கும் இலக்கானவர்கள். எல்லா

குழந்தைகளும் ஒரே மாதிரியான சமூகப் பாதுகாப்பிற்கு உரியவர்கள் திருமணம் செய்த பின்னர் பிறந்த குழந்தைகளும், திருமணமாகாது பிறந்த குழந்தைகளும் ஒரே மாதிரி நடத்தப்பட வேண்டும்.

பிரிவு 26:

கல்வி பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. கல்வியானது இலவசமாக குறைந்தபட்சம் அடிப்படைக் கல்வி அளவில் அனைவருக்கும் வழங்கப்பட வேண்டும். அடிப்படைக் கல்வி கட்டாயமாக்கப்பட வேண்டும். தொழில்நுட்ப தொழிற்துவ கல்வி அனைவருக்கும் கிடைக்கும் வகையில் செய்யப்பட வேண்டும். உயர்கல்வி பெற அனைவருக்கும் உரிமையிருந்தாலும் தகுதி அடிப்படையில் மாணவர்கள் சேர்க்கப்பட வேண்டும்.

கல்வி மனிதன் முழு வளர்ச்சியைப் பெற அவசியமானது. எனவே இதன் மூலம் மனித உரிமைகள் மற்றும் அடிப்படை சுதந்திரங்களின் முக்கியத்துவத்தைச் சொல்வதற்கு இது பயன்படும். இதனால் நாடுகளுக்கிடையே நல்லுறவும், பொறுமையும் நட்பினையும் வளர்க்க உதவுவதால் எல்லா மதங்களும், இனங்களும் பன்னாட்டு அமைதியை உருவாக்க பாடுபட்டு, ஐ.நா.வின் நோக்கத்தை எளிதில் நிறைவேற்றும்.

பிரிவு 27:

சமுதாயக் கலாச்சார நடவடிக்கைகளில் ஒவ்வொருவரும் பங்குபெற சுதந்திரம் கொண்டவர்கள். இதனால் கலைகளையும், அறிவியல் முன்னேற்றம் மற்றும் அதன் பயன்களையும் பகிர்ந்து கொள்ள முடியும்.

பிரிவு 28:

சாசனத்தில் வரையறுத்துள்ள உரிமைகளையும், சுதந்திரத்தையும் உணர சமூக பன்னாட்டு ஒழுங்கு முறையை ஏற்படுத்த ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு.

பிரிவு 29:

ஒவ்வொருவரும் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகளை செய்வதன் மூலமே சுதந்திரமாகத் தங்களது முழு ஆளுமைத் தன்மையை மேம்படுத்த முடியும்.

இவ்வாறு இவர்கள் தங்களது உரிமைகளையும், சுதந்திரத்தையும் பயன்படுத்தும்போது சட்டத்தின் மூலம் சில கட்டுப்பாடுகள் உரிமைகளைக் காக்கவும், அறிந்து கொள்ளவும் தேவைப்படுகின்றது. அறநெறி பொது ஒழுங்கு மற்றும் பொது நல வாழ்வு ஆகியன மக்களாட்சி சமூகத்தில் ஏற்படுத்த இந்த உரிமைகளுக்கும், சுதந்திரங்களுக்கும் கட்டுப்பாடு தேவையாகின்றது. இந்த உரிமைகளும் சுதந்திரங்களும் ஐ.நா. அவையின் கோட்பாடுகளுக்கும் நோக்கங்களுக்கும் எதிராகப் பயன்படுத்தக் கூடாது.

பிரிவு 30:

இந்த சாசனத்தில் வரையறுக்கப்பட்டுள்ள அம்சங்களை, உரிமைகள், சுதந்திரம் ஆகியனவற்றை அழிக்க எந்த நபருக்கும், அரசுக்கும், குழுவிற்கும் அதிகாரம் கிடையாது. ஏனெனில் இவ்வுரிமைகள், சுதந்திரங்கள் ஆகியவற்றைக் காத்து வளர்க்க வேண்டும் என்பது அனைவரின் கடமை.

ஐ.நா. அவையின் குறிக்கோள்களில் ஒன்றாகக் கீழ்க்கண்ட நோக்கத்தை இச்சாசனம் வரையறுத்துள்ளது.

பன்னாட்டுப் பிரச்சனைகள் பொருளாதார, சமூகக் கலாச்சார மற்றும் மனிதாபிமானப் பிரச்சினைகளைத் தீர்த்து, பன்னாட்டு அளவில் ஒற்றுமையை ஏற்படுத்துதல் இதன் முக்கிய நோக்கம். எந்தவித இன, பால், மொழி, மத வேறுபாடுகள் இன்றி அனைவருக்குமாக மனித உரிமைகளையும், அடிப்படை சுதந்திரங்களையும் போற்றி மேம்படுத்துதல் இதன் குறிக்கோள் ஆகும். இக்குறிக்கோள்களை நிறைவேற்றுதல் ஐ.நா. உறுப்பினர் நாடுகள் ஒவ்வொன்றின் கடமையாகும்.

பிரிவு 55:

நாடுகளுக்கிடையே நல்லுறவும், அமைதியும், ஏற்படத் தேவையான அனுகூல நிலைமையை ஏற்படுத்த மனித சுதந்திரங்கள் உரிமைகளின் அடிப்படையில் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை ஐ.நா. சபை மேற்கொள்ள வேண்டும்.

1. உயர்ந்த வாழ்க்கைத் தரம், முழு வேலை வாய்ப்பு, பொருளாதார, சமூக வளர்ச்சி மற்றும் மேம்பாட்டிற்கான அனுகூல நிலைகளை உருவாக்குதல்.

2. பன்னாட்டு பொருளாதார, சமூக, மருத்துவ மற்றும் பிற தொடர்புடைய பிரச்சினைகளைத் தீர்த்து வைத்தல், பன்னாட்டு கலாச்சாரம், கல்வி ஆகியவற்றில் ஒத்துழைப்பை உருவாக்குதல்.

3. மனித உரிமைகள் மற்றும் சுதந்திரங்கள், ஆகியவற்றிற்கு அனைவரது ஆதரவையும் பெற்று பின்பற்றுதல், எந்தவிதமான பாகுபாடு இன்றி அனைவரும் ஒரே மாதிரியாக ஆதரித்து அனுசரிப்பது.

பிரிவு 56:

பிரிவு 55ல் உள்ள உறுதிமொழிகளை உறுப்பினர் நாடுகள் தனித்தனியாகவும், பிற நாடுகளின் ஒத்துழைப்போடும், அடைவதற்குண்டான வழியை பிரிவு 13(1) கூறுகின்றது. இதன்படி ஐ.நா. பொது மனித உரிமைகள் மற்றும் சுதந்திரங்கள் பற்றிய ஆய்வினை நடத்த வழிவகை செய்யும். பின்னர் மனித உரிமைகளை உய்க்க போதுமான ஆதரவை நல்கும். எந்தவிதப் பாகுபாடுமின்றி அனைவருக்குமாக இது உதவி செய்யும். இது மாதிரியான அதிகாரத்தை ஐ.நா. பொருளாதார, சமூக ஆணையத்திற்கும் (Ecosoc) அளிக்கப்பட்டுள்ளது. இந்த அமைப்பும் உலகின் மனித உரிமைகள் மற்றும் அடிப்படை சுதந்திரங்களுக்காக பாடுபட்டு ஐ.நா.வின் குறிக்கோளை நிறைவேற்றும் சமூக, பொருளாதாரப் பிரிவுகளில் இது தனது கவனத்தைச் செலுத்தும்.

ஐ.நா. சபை இதுவரையிலும் உலகில் மனித உரிமை மீறல் எங்கெங்கு உருவாகின்றதோ அங்கெல்லாம் அவற்றைத் தடுத்து, மனித உரிமைகளுக்குப் பாதுகாப்பு வழங்கி வருகின்றது. ஐ.நா. சபையின் உறுப்பினர் நாடுகள் அனைத்தும் மனித உரிமை மீறல்களைத் தடுக்கும் வகையில் செயல்பட்டு வருகின்றன. ஐ.நா.வின் மனித உரிமை ஆணையம் தனி அதிகாரம் கொண்டு உலகின் மனித மீறல்களைத் தடுத்து, மக்களுக்கு உரிமைகளை நிலைநாட்டி வருகின்றது.

### 3.10 மனித உரிமைகள் பற்றிய பன்னாட்டுச் சட்டம்:

ஐ.நா. சபையின் முதல் கூட்டம் ஐ.நா. மனித உரிமைப் பன்னாட்டு சாசனத்தோடு பிற உரிமைகளைச் சேர்க்க வேண்டுமெனக் கருதியது. இதனால் மனித உரிமை சாசனத்தோடு மற்றும் இரண்டு ஒப்பந்தங்கள் சேர்க்கபட்டன. அவை சிவில் மற்றும் அரசியல் உரிமைகள் ஒப்புந்தங்கள் ஆகும். இவை இரண்டும் மனிதனின் அத்தியாவசியமான தேவையான உரிமைகள் என்று மக்கள் உரிமை

சாசனத்தோடு இணைக்கப்பட்டன. ஆனால் இவை இரண்டும் சான்பிரான்சிஸ்கோ மாநாட்டில் கொண்டு வந்த தீர்மானத்திற்கு உட்பட்டுதான் செயல்பட வேண்டும்.

### 3.11 மனித உரிமைகள் மகாசாசனம்:

முன்னேற்றத்தை அறிவதற்கான தன் னிறைவு சோதனை வினா.
2. மனித உரிமைகள் மகாசானத்தின் முக்கியத்துவத்தை சுருக்கமாக கூறுக.

மனித உரிமைகள் மகாசாசனம் ஐ.நா. அவையால் 1948ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் உருவாக்கப்பட்டது. மனித உரிமைகள் குறித்து தெளிவான பன்னாட்டு அளவிலான ஒரே ஒரு சாசனம் இது. இச்சாசனம் அரசியல், சட்ட மற்றும் அறநெறித் தன்மை கொண்டு விளங்குவதால் இது மிகவும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. இதனால் இங்கிலாந்தின் உரிமை மகாசாசனத்தோடும் (Magna Carta) பிரெஞ்சுப் புரட்சிப் பிரகடனத்தோடும், அமெரிக்க விடுதலைப் பிரகடனத்தோடும் ஒப்பிட்டுப் பேசக் கூடிய அளவிற்கு மிகவும் உன்னதமான சாசனம் இது. மனித உரிமைக்காக மனிதனின் சுதந்திரத்திற்காகவும் பாடுபடக் கூடிய வரலாற்று சிறப்பு மிக்க சாசனம் இச்சாசனம். எல்லா மனிதர்களும் அந்தஸ்திலும், உரிமைகளிலும், சுதந்திரமானவர்கள், சமத்துவம் கொண்டவர்கள் என்பது இச்சாசனத்தில் முதல் வார்த்தை. பின்னர் பிரிவு 28ன்படி ஒவ்வொரு மனிதனும் சமூகப் பன்னாட்டு ஒழுங்குமுறையை ஒழுங்குபடுத்த உரிமை கொண்டவன் என்று தெளிவாக மக்களின் உரிமையை வெளிப்படுத்தி உள்ளது.

### 3.12 உரிமைகளும் சுதந்திரங்களும்:

மனித உரிமைகள் மகாசாசனம் பரந்த அளவில் இரண்டு வகையான உரிமைகளைக் கொடுத்துள்ளது. ஒன்று அரசியல் மற்றும் சிவில் உரிமைகள், மற்றொன்று பொருளாதார, சமூக மற்றும் கலாச்சார உரிமைகள். சிவில் மற்றும் அரசியல் உரிமைகளில் வாழ்வுரிமை, சுதந்திரம், பாதுகாப்பு, அடிமைத்தனத்தை ஒழித்தல் மற்றும் சித்திரவதை செய்தல், சட்டத்திற்கு எதிராகக் கைது செய்தல், சிறையிலடைத்தல் போன்றவற்றைத் தடுத்து மக்களுக்கு வழங்கியுள்ள உரிமைகளில் அடங்குகின்றது. தனி நபர் வாழ்வுரிமை, சொத்து, பேச்சு, மதம், சங்கம் அமைத்தல். நாட்டின் எப்பகுதிக்கும் சென்று வருதல். அரசாங்க நடவடிக்கைகளில் பங்கு பெறுதல், முறையான தேர்தல்கள் உத்திரவாதம். எந்த நாட்டிலும் தஞ்சம் பெறும் உரிமை எனப் பல்வேறு உரிமைகள் அரசியல் மற்றும் சிவில் உரிமைகளில் அடங்கியுள்ளது.

பொருளாதார, சமூக மற்றும் கலாச்சார உரிமைகள் ஒவ்வொரு மனிதனும் சமூகத்தின் அங்கமாகத் திகழ்வதால் அவனுடைய ஆளுமைத் திறனை முழுமையாக வளர்க்க பொருளாதார, கலாச்சார உரிமைகள் அவசியம். எனவே சமூகப் பாதுகாப்பு, வேலை வாய்ப்பு, சம வேலைக்கு சம ஊதியம், முறையான ஊதிய விகிதம், போதுமான மருத்துவ வசதி, வயது முதிர்ந்தோர், நோயாளிகள், இயலாதோர் ஆகியோர்களுக்கு பாதுகாப்பு வழங்குதல் போன்ற பல உரிமைகள் இடம் பெற்றுள்ளன. கல்வி உரிமை, கலாச்சார உரிமை எனப் பல உரிமைகள் மக்களுக்கு இச்சாசனத்தில் வழங்கப்பட்டுள்ளன.

மக்கள் உரிமை மகாசாசனம் என்பது ஒரு ஒப்பந்தம் அல்ல. இது ஒரு தீர்மானம் தான். யாரையும் கட்டாயப்படுத்த முடியாது. ஏனெனில் இது ஒரு தார்மீக அறநெறிச் சட்டம். ஆகவே ஒவ்வொரு நாடும் இதனைப் பின்பற்ற வேண்டிய கட்டுப்பாட்டிற்கு வந்துவிட்டது. எனவே இச்சாசனம் சட்டபூர்வமானதா என்ற பேச்சு எழவில்லை. இச்சாசனத்தில் உள்ள அனைத்து உரிமைகளையும் செயல்படுத்த முடியுமா? எந்தெந்த சூழ்நிலைகளில் செய்யலாம் என்ற கேள்விகளின் மூலம் செம்மைப்பட்டு இன்று இச்சாசனம் பொதுவான சட்டக் கோட்பாடாக வளர்ந்து விட்டது.

ஐ.நா. உறுப்பு நாடுகள் மனித உரிமைகளைக் காப்பது அவசியமானதாக சாசனம் அவர்களை வலியுறுத்துகிறது. எனவே இச்சாசனப் பிரிவுகளைச் செயல்படுத்துவது ஒவ்வொரு நாட்டின் கடமையாகி விட்டது. ஒரு நாடு மனித உரிமை மீறல்களைக் கண்டிக்காது விட்டு விட்டால், பன்னாட்டு அளவில் அதற்கு கண்டனங்கள் வந்து விடுகின்றது. எனவே பன்னாட்டு அளவில் தங்களது நிலைமையை முறையாகத் தக்க வைக்க வேண்டுமானால் மனித உரிமை மீறல்களைத் தடுக்க வேண்டும். எனவே சாசனப் பிரிவுகள் அனைத்தும் சட்டபூர்வ அந்தஸ்துக்கு மேற்பட்ட அதிகாரத்துவப் பிரிவுகளாகப் மாறிவிட்டன என்றால் மிகையல்ல. எனவே மனித உரிமைகளைக் காப்பது பன்னாட்டு அளவில் செயல்பட வேண்டிய செயலாக நாடுகளின் கடமையாக மாறிவிட்டது.

### 3.13 தொகுப்புரை:

பொருளாதார, சமூக மற்றும் கலாச்சார ஒப்பந்தம் என்று ஒரு ஒப்பந்தமும் மற்றொன்று சிவில் மற்றும் அரசியல் ஒப்பந்தம் என்பதுவும் 1966ம் ஆண்டு ஐ.நா.

அவையில் கொண்டுவரப்பட்டு. உறுப்பினர்களின் பார்வைக்கு எடுத்துச் செல்லப்பட்டது. உடனடியகாக 35 நாடுகள் இவற்றை ஏற்றுக் கொண்டன. இந்த ஏற்றுக் கொண்ட நாடுகளின் எண்ணிக்கை 130ஆக 1994ம் ஆண்டு இதை மாற்றியது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் 1992ம் ஆண்டு ஏற்றுக் கொண்டது. இது ஒப்பந்தமாக இருப்பதால் இதனை ஏற்றுச் செயல்படுத்துவது நாடுகளில் கட்டாயக் கடமையாக மாறியுள்ளது. இந்த ஒப்பந்தங்களில் வரையறுக்கப்பட்ட உரிமைகளுக்கு உத்திரவாதம் இன்று கிடைத்துள்ளது. எனவே உரிமைகள் என்பது ஒரு நாட்டோடு அடங்கக் கூடிய உள்நாட்டுச் செயல் அல்ல என்பதுவும், பன்னாட்டுச் செயல் என்ற அளவில் உலகளவிற்கு இந்த உரிமைகளின் நிலை உயர்த்தப்பட்டுள்ளது, எல்லா மனிதர்களும் தங்களது உரிமைகளைத் தீர்மானித்துக் கொள்ளும் உரிமைகளும் கொடுக்கப்பட்டுள்ளதால், அரசாங்கங்களை அமைத்து, அவற்றின் மூலம் தங்களது உரிமைகளைத் தீர்மானித்து நிறைவேற்றிக் கொள்ளும் வகையில் முழுமையான உரிமை உலக மக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

### 3.14 முக்கிய வார்த்தைகள்

ஐ.நா சபை, சமுதாயத் தகவுகள், நீதிபதிகள், சாசனம் , பன்னாட்டுச் சட்டம், சுதந்திரம்

### 3.15 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 3.3 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 3.11 ல் அறிக

### 3.16 மாதிரி வினாக்கள்:

1. மனித உரிமையின் அடிப்படைய நியதியை விவாதிக்க.
2. மனித உரிமைகளைப் பாதுகாப்பதில் ஐ.நா.வின் பங்கினை விளக்குக.

### 3.17 பரிந்துரை நூல்கள்

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka **Publisher and** Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, **Dattsons, 1998.**

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi **Publishing** Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

## அலகு - 4

## பன்னாட்டு பொது உரிமைக் கழகம் மற்றும் ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் - ஆசியக் காவலன்

**அறிமுகம் :**

**பன்னாட்டு பொது உரிமைக் கழகம்,**
**(Amnesty International)**

பன்னாட்டு பொது உரிமைக் கழகம் என்பது உலக அளவில் அங்கீகரிக்கப்பட்ட மனித உரிமைகளைக் காக்கும் அளவில் ஏற்படுத்தப்பட்ட ஓர் அமைப்பாகும். உரிமைகள் பிரகடனத்தில் வரையறுக்கப்பட்ட அனைத்து உரிமைகளையும் ஒவ்வொரு குடிமகனும் துய்க்க வேண்டும் என்பதுதான் இந்த அமைப்பின் முக்கிய நோக்கம் ஆகும். ஏனெனில் நாட்டிற்கு நாடு மனித உரிமைகள், அவற்றின் எண்ணிக்கை வேறுபடக்கூடும். இதை மாற்றி எல்லா நாடுகளும் ஒரே மாதிரியாக பன்னாட்டுத் தரத்திற்கேற்ப மனித உரிமைகளை துய்க்க வேண்டும் என்பது இதன் மற்றொரு முக்கிய அம்சம். இந்த இரு நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக, பன்னாட்டு பொது உரிமைக் கழகம், ஆய்வுகள் மேற்கொள்கின்றன மனித உரிமைகளுக்கு எதிரான செயல்கள் தடுத்தல் போன்றவற்றை செய்யும் வகையில் புதிய வழிமுறைகளுக்கான ஆய்வுகளை நடத்துகின்றது. சிந்தனை உரிமை, கருத்துக்களை வெளியிடும் உரிமை, பாராபட்மின்றி சமமாக நடத்துதல் போன்ற மனித உரிமைகள் மேம்பாட்டிற்கு பாடுபட்டு வருகின்றது இக்கழகம்.

நோக்கங்கள் :

1. பன்னாட்டு உரிமை கழகத்தின் அமைப்பு மற்றும் செயல்பாடுகள் கற்றல்
2. ஐரோப்பிய மனித உரிமை ஆணையத்தின் அமைப்பு மற்றும் பணிகளை அறிதல்.

வடிவமைப்பு

**உட்கூறுகள்**

**4.1 பன்னாட்டு பொது உரிமைக் கழகம்**

## 4.1 பன்னாட்டு பொது உரிமைக் கழகம்:

இது பன்னாட்டு அளவில் பிரச்சாரம் செய்து விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றது.

1. குற்றம் புரிந்து காவலில் இருக்கும் கைதிகள் தங்களது குற்றங்களை உணர்ந்தபின் விடுதலை செய்தல்.
2. அரசியல் கைதிகளை முறையாகவும், சீராகவும் நடத்துதல்.
3. மரண தண்டனை ஒழித்தல், சிறைக் கைதிகள் கொடுமைப் படுத்துதல் மற்றும் மோசமாக நடத்துதல் ஆகியவற்றைத் தடுத்தல்.
4. அரசியல் படுகொலைகளைத் தடுத்து நிறுத்துதல்.
5. எதிர்க்கட்சியினர் ஈடுபடும் மனித உரிமைத் துஷ்பிரயோகங்களை எதிர்த்தல்.

கைதிகள் மற்றும் அரசியல் கைதிகள் மற்றும் எதிர்க்கட்சிகளின் மனித உரிமைத் துஷ்பிரயோகம் ஆகியன அதிக அளவில் மனித உரிமை மீறலில் ஈடுபடுவதால் அவற்றைக் கவனிப்பது இதன் முக்கிய செயலாகும்.

## 4.2 உறுப்பினர்கள்:

பன்னாட்டு உரிமைக் கழகத்தின் உறுப்பினர்கள் உலகமெங்கும் உள்ளனர். உலகின் எல்லாப் பாகங்களிலும் இதற்கு உறுப்பினர்கள் உள்ளனர். ஏறத்தாழ

18 இலட்சம் உறுப்பினர்கள் உள்ளனர். இவர்கள் தவிர இக்கழகத்தின் ஆதரவாளர்கள் மற்றும் நிதி உதவி நல்குவோர் என ஏராளமானோர் உள்ளனர். எனவே பல்வேறு தரப்பட்ட அரசியல், மத நம்பிக்கைகள் கொண்டவர்களாக பல்வேறு நாடுகளின் பின்னணி கொண்டவர்களாக உறுப்பினர்கள் இருப்பதால், அனைவரும் ஒட்டு மொத்தமாகச் சேர்ந்து மனித உரிமைகளை ஒவ்வொரு மனிதனும் துய்க்க வேண்டுமென்று அயராது பாடுபட்டு வருகின்றனர்.

## 4.3 செயல்கள்:

பன்னாட்டு பொது உரிமைக் கழகத்தின் செயல்பாடுகள், கடிதம் எழுதுவது முதல் பொது போராட்டங்கள் நடத்துவது ஆகிய பல்வேறு செயல்களைச் செய்து வருகின்றது. இதன் முக்கிய நோக்கமானது மனித உரிமைக் கல்வியை மக்களுக்கு வழங்கி மக்கள் தங்களது உரிமைகளில் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும் என்பதாகும். நிதி திரட்டல் போன்ற செயல்கள் மற்றும் குறிப்பிட்ட மனித உரிமை மீறலை வெளிக் கொணர்ந்து அதனைச் சீர்செய்ய போராட்டங்கள் நடத்துதல் போன்று பல நடவடிக்கைகள் செய்து வருகின்றது. இது தனிநபர் மனித உரிமை மீறல் என்றாலும்கூட, உலக அளவில் போராட்டம் நடத்தும் நாடுகள் அனைத்திற்கும் பொதுவான மனித உரிமைகள் இருக்க வேண்டும் என்பது இதன் அணுகுமுறை.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. ஐரோப்பிய பன்னாட்டு உரிமைகழகத்தின் நோக்கங்களை கூறுக.

## 4.4 ஐரோப்பிய நாடுகள் அலுவலகம்:

ஐரோப்பாவில் பன்னாட்டு உரிமைக் கழகத்தின் பிரிவு உள்ளது. இதன் கொள்கைகள் யாதெனில்,

ஐரோப்பிய சங்க ஐக்கியத்தில் உலக நாடுகளின் உறுப்பினர்கள் மற்றும் இடம் பெற்றுள்ள நாடுகின்ற மனித உரிமைகளை காப்பது.

1. ஐரோப்பிய ஐக்கியத்தின் வெளிநாட்டுக் கொள்கை மனித உரிமையைக் காக்கும் வகையில் செய்தல்.
2. மனித உரிமைகளைப் பாதுகாக்கும் நடவடிக்கைகள்.
3. தஞ்சம் புகுந்த அகதிகளின் பாதுகாப்பு.
4. நீதித்துறை மற்றும் காவல் துறையின் ஒத்துழைப்பு.

5. இராணுவத் தளவாடங்கள் விற்பனையும் மனித உரிமைகளும்

6. மனித உரிமை உதவிக் குழுக்களோடு ஒத்துழைப்பு ஆகிய முக்கிய நடவடிக்கைகளை இந்த அலுவலகம் செய்து வருகின்றது.

பன்னாட்டு உரிமைக் கழகம் என்பது சுதந்திரமாக இயங்கக் கூடிய அமைப்பு. எந்த அரசாங்கத்திற்கும், அரசியல் கோட்பாட்டிறக்கும், மத நம்பிக்கைக்கும், கட்டுப்படாத பாரபட்சமின்றி அனைத்துலக மக்களுக்காக இயங்கக் கூடிய அமைப்பு இது. இது எந்த ஒரு அரசாங்கத்திற்கும் அரசியல் முறைமைக்கும் கட்டுப்பட்டதல்ல. உலகில் யாரேனும் மனித உரிமை மீறலில் பாதிக்கப்படுகின்றனரோ அவர்களின் மனித உரிமை பாதுகாப்பிற்கென செயல்படக் கூடியது இந்த அமைப்பு.

பன்னாட்டு உரிமைக் கழகம் தனது சுதந்திரத்தை இழக்காமல் செயல்பட வேண்டும் என்பதற்காகவே எந்தவொரு அரசாங்கத்திடமிருந்தும் அரசியல் கட்சிகளிடமிருந்து நிதி உதவி பெறுவதில்லை. ஐரோப்பிய ஐக்கிய மனித உரிமைக் கழகத்திற்கு அதன் உறுப்பினர் நாடுகள் மட்டும் நிதி உதவி அளித்து வருகின்றன. மனித உரிமைகள் பாதுகாப்பில் பாரபட்சமின்றி இக்கழகம் பணியாற்றி வருகின்றது.

பன்னாட்டு உரிமைக் கழகம் ஒரு மக்களாட்சி நிறுவனம். தன்னிச்சையாக இயங்கக் கூடியது. எல்லா நாடுகளின் பிரதிநிதிகளும் அடங்கிய பன்னாட்டு மன்றம்தான் முடிவுகளை எடுக்கும் அதிகாரம் கொண்டது. பெரும்பான்மைப்படி முடிவுகளை இது எடுக்கும். உலக அளவில் பல நாடுகள், அவற்றின் பின்னணி ஆகியனவற்றை வைத்து மனித உரிமைகளின் தன்மைகளை ஆராய்ந்து உறுப்பினர்கள் முடிவு செய்கின்றனர். எனவே இது பன்னாட்டுத் தரத்தில் ஆராய்ந்து உறுப்பினர்கள் முடிவு செய்கின்றனர். எனவே இது பன்னாட்டுத்த தரத்தில் மிகவும் தெளிவான, தரமான மனித உரிமைப் பாதுகாப்பினை வழங்கவல்ல முடிவுகளை எடுக்கும். இதன் தேசிய அளவுப் பிரிவுகள் மற்றும் உள்ள பிரிவுகள் ஆகியன பன்னாட்டு உரிமைக் கழகத்திற்கு தேவையான நிதியினை விருப்பமாக, தாராளச் சிந்தையுட்ன வழங்கக்கூடிய மக்களிடமிருந்து பெறுகின்றது. முன்னர் கூறியதுபோல் எந்த அரசாங்கத்திடமிருந்தும், அரசியல் கட்சிகளிடமிருந்தும் நிதி உதவி பெறுவதில்லை.

## 4.5 ஆண்டறிக்கை:

பன்னாட்டு உரிமைக் கழகம் தனது நடவடிக்கைகள் அனைத்தையும் தெரிவித்து ஆண்டறிக்கையாக ஒவ்வொரு ஆண்டும் தனது அறிக்கையை வெளியிடும். உலக அளவில் நடைபெற்று வரும் முக்கியமான மனித உரிமை மீறல்கள் அனைத்தும் இந்த அறிக்கையில் இடம் பெறும். 2003ம் ஆண்டில் ஏற்பட்ட மிக முக்கிய பிரச்சனையான ஈராக் மீது அமெரிக்கா போர் தொடுத்ததால் ஏற்பட்ட மனித உரிமை பிரச்சினையை இது வெளியிட்டது. மேலும் உலகமெங்கும் பல கோடி மக்கள் உணவின்றி வறுமையிலும், சமூக அநீதியிலும் அல்லல்பட்டு வரும் வேளையில் நாடுகள் போர் புரிவதற்கு போர்த் தளவாடங்களை அதிகமான அளவில் வாங்க ஏராளமான கோடி ரூபாய்களை செலவழிப்பது மனிதாபிமானச் செயலாக இது கருதவில்லை. எனவே நாடுகள், மக்களின் அடிப்படை வசதிகளை செய்து தர நடவடிக்கைகளில் இறங்க வேண்டும் என தனது நிலையை விளக்கியது. 2004ம் ஆண்டில் உலகெங்கிலும் சாதாரண குடிமக்கள், ஆண், பெண் மற்றும் குழந்தைகள் ஆகியோர்களின் உரிமைகள் உலகெங்கும் அதிகமான அளவில் மீறப்பட்டுள்ளதாக, 149 நாடுகளில் நடைபெற்ற மனித உரிமை மீறல்களைத் தெளிவாக 2005ம் ஆண்டு அறிக்கை பட்டியலிட்டு உள்ளது. மேலும் 2005ம் ஆண்டு அறிக்கையில் மனித உரிமை விழிப்புணர்வு உலகமெங்கும் வளர்ந்துள்ளதையும் இது சுட்டிக்காட்டியுள்ளது. மனித உரிமை விழிப்புணர்வால் விரைவில் மனித உரிமை மீறல்கள் மிகவும் குறைந்து அனைவருக்கும் சுதந்திரமும், சமூக நீதியும் கிடைக்கும் என்ற ஆக்கபூர்வ நிலையையும் உணர்த்தியுள்ளது.

பெண்கள் மீதான வன்முறை, சமூக, பொருளாதார, கலாச்சார உரிமைகள், அகதிகள், இடம்பெயர்ந்தோர் (migrants) போன்றோர்களுக்குரிய நியாயமான உரிமைகள் மற்றும் அவர்களது பாதுகாப்பு போன்ற விஷயங்கள் அனைத்தும் பன்னாட்டு மனித உரிமைக் கழகத்தின் அறிக்கையில் தெளிவாக விளக்கப்பட்டு உள்ளன.

பெண்கள் உரிமை, பன்னாட்டு உரிமைக் கழகத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. ஏனெனில் பாலின வேறுபாட்டால் உரிமைகள் பெண்களுக்கு மறுக்கக் கூடாது. எப்போது பெண்கள் உரிமை பெறுகின்றனரோ, அவ்வுரிமைகள்தான் மக்கள் உரிமைகளாக இருக்கும் என்ற கருத்து உள்ளது.

பெண்கள் உரிமை எவ்வாறு நாடுகளின் கலாச்சாரத்தால் மறுக்கப்படுகின்றதென்பதையும், பெண்கள் எவ்வாறு அச்சுறுத்தப்படுகின்றார்கள் என்பதையும் உலக அளவில் ஆராய்ந்து, பெண்கள் உரிமையைக் காக்கும் நடவடிக்கைகளிலும் இது தனது கவனத்தைச் செலுத்தியுள்ளது.

## 4.6 ஐரோப்பிய மனித உரிமை ஆணையம்

ஐரோப்பிய மக்களின் உரிமைகளைக் காக்க ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் அமைக்கப்பட்டுள்ளது.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 2. ஐரோப்பிய மனித உரிமை ஆணையத்தின் அமைப்பை கூறுக.

ஐரோப்பிய மனித உரிமை ஆணையத்தில் ஐரோப்பிய சமூகத்தில் இடம் பெற்ற நாடுகளின் எண்ணிக்கைகளுக்கு சமமான உறுப்பினர்கள் இடம் பெற்றுள்ளனர். ஒரே நாட்டிலிருந்து இரண்டு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதில்லை. அமைச்சர்கள் கொண் குழுவின் மூலமாக இதன் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வசதியாக ஆலோசனைப் பிரிவு ஒன்று உள்ளது. இப்பிரிவு ஒவ்வொரு நாட்டிலும் இருந்து தேர்ந்தெடுக்கப்படுவதற்கு மூன்று உறுப்பினர்கள் அடங்கிய பட்டியலைத் தயார் செய்கின்றது. இந்தப் பட்டியலிலிருந்து ஒரு நாட்டுக்கு ஒருவர் என்ற அடிப்படையில் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். எந்த நாட்டு உறுப்பினர் இடம் காலியாகுமோ அந்த இடத்தில் அந்த நாட்டுப் பிரதிநிதி உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவர்.

## 4.7 பதவிக் காலம்:

ஐரோப்பிய மனித உரிமை ஆணைய உறுப்பினர்கள் ஆறு ஆண்டு காலங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. இவர்கள் மறுபடியும் தேர்ந்தெடுக்க தகுதி படைத்தவர்கள். பதவி வகித்த ஒருவர் இடம் காலியாகுமானால், காலியான இடத்திற்குரிய மீதிக் காலத்திற்கு மற்றொருவர் தேர்ந்தெடுக்கப்பட்டு அந்தக் காலம் முடியும் வரை பணியாற்றலாம்.

## 4.8 செயல்முறை:

ஐரோப்பிய சமூகத்தில் இடம் பெற்றுள்ள ஒரு நாடு மற்றொரு நாடு மீதாக மனித உரிமைக் குற்றச் சாட்டுக்கள் கூறலாம். ஆனால் இவை ஐரோப்பிய சங்கத் தலைமைச் செயலர் வாயிலாகத்தான் குற்றச் சாட்டுக்களை கூற முடியும். ஐரோப்பிய

சங்கத் தலைமைச் செயலக குற்றச்சாட்டுக்களை தனி நபர்கள், அரசு சார்பில்லா நிறுவனங்கள் மற்றும் பிற குழுக்கள் ஆகியன புகார் கூற வேண்டும். என்னென்ன மனித உரிமை மீறல் செய்யப்பட்டதென்பதையும் தெரிவிக்க வேண்டும். புகார்கள் விசாரிக்கத் தக்கவை தானா? சட்டத்திற்குட்பட்டது தானா? என்பதை ஐரோப்பிய சங்கத் தலைமைச் செயலர், தொடர்புடைய நாடுகளில் தெரிவிக்கப்பட்டு அவை வெளியிடப்படும். இதற்கு பிரகடனம் வெளியிடல் என்று பெயர். இதற்கு குறைந்தபட்சம் ஆறு உறுப்பினர்கள் ஆதரவு தேவைப்படும். ஐரோப்பிய மனித உரிமை ஆணையத்திற்கு வரும் புகார்கள் அந்தந்த நாடுகளில் உள்ள சட்ட திட்டங்களுக்குட்பட்டு பரிகாரம் காண முடியவில்லை என்ற பொழுதுதான் இங்கு வரவேண்டும். அப்பேர்பட்ட புகார்களை மட்டும்தான் இந்த ஆணையம் விசாரணைக்கு ஏற்றுக் கொள்ளும். அந்தந்த நாடுகளின் பரிகாரம் செய்ய முடியவில்லை. பிரச்சினை தீரவில்லையென்றால், இப்புகார்கள் ஆறுமாத கால இடைவெளிக்குள்ளாக இந்த ஆணையத்தின் பார்வைக்கு வரவேண்டும். அதற்கு மேல் காலம் தாழ்த்தப்பட்டால் இது விசாரணைக்கு அந்தப் புகாரை ஏற்றுக் கொள்ளாது. அனாமத்து (anonymous) புகார்களை இந்தஆணையம் விசாரணைக்கு ஏற்காது. ஒரு விஷயத்தை மாறி மாறி பிற வடிவங்களில் கொண்டு வந்தாலும் இது பரிசீலனைக்கு ஏற்றுக் கொள்ளாது. எனவே, விசாரணைக்கு உரிய விஷயங்களை மட்டும் கவனத்தில் எடுத்துக் கொள்ளும் புகார்களை தவறான வழியில் திசை திருப்பும் வகையில் கொடுக்கப்பட்டால், வெளிப்படையாகவே விசாரணைக்கு உட்படாத விஷயமெனில் இது பரிசீலனைக்கு மேற்படி புகார்களை எடுக்காது.

**முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.**
3. ஐரோப்பிய நாடுகளின் நிதிமன்ற பிரிவுகளை வகைப்படுத்துக்காக

## 4.9 பணிகள்:

ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் புகார்களை பெற்றுக் கொண்டதுடன், விசாரணைக்கு உகந்தவை என்று தீர்மானித்த பின்னர், சம்பந்தப்பட்ட இரு பிரிவினர்களிடமிருந்து பிரச்சினை தொடர்பான விபரங்களைச் சேகரிக்கும். சில சமயங்களில் ஆணையமே புலன் விசாரணை மேற்கொண்டு விபரங்களைத் திரட்டும். புகாரில் சம்பந்தப்பட்ட இரு பிரிவினர்களும் ஆணையத்தின் ஒப்புதலோடு பிரச்சினையைத் தெரிவிப்பர். இப்பிரச்சினைகள், செய்திகள் அனைத்தும் திட்டப்பட்டு பிரச்சினைகளை அமைதியான முறையில் நட்புறவோடு பரஸ்பர ரீதியில் தீர்த்து வைக்க

முய்றசிக்கப்படும். பொதுவாக பிரச்சினைகளை விசாரித்து முடிவு வழங்க துணைக் குழுவை ஆணையம் நியமிக்கும். இதில் 7 உறுப்பினர்கள் இடம் பெற்றிருப்பர். இந்தக் குழுவில் பிரச்சினையில் தொடர்புடைய இரு பிரிவினர்களும் தங்களது உறுப்பினர்களை நியமித்துக் கொள்ளலாம். எனவே, இந்த இரண்டு உறுப்பினர்கள் தவிர எஞ்சிய 5 உறுப்பினர்களை குடவோலை முறை மாதிரியாக (Lot) மூலம் தேர்ந்தெடுப்பர். இந்தத் துணைக்குழு நட்புகரமாக இரு பிரிவினர்களையும் இணங்க வைத்து பிரச்சினை முடிவுக்குக் கொண்டு வந்தால், அறிக்கையைத் தயார் செய்து இருபிரச்சனைக்குரிய நாடுகளுக்கு அனுப்பி வைப்பர். அமைச்சர்கள் குழு, ஐரோப்பிய சங்க தலைமைச் செயலர் ஆகியோர்களுக்கும் அறிக்கை அனுப்பப்பட்டு அறிக்கை பிரசுரம் செய்யப்படும். இந்த அறிக்கையில் பிரச்சினைகள் பற்றிய பின்னணி தீர்க்கப்பட்ட வழிமுறை ஆகிய செய்திகளும் இடம் பெற்றிருக்கும்.

துணைக் குழுவினால் பிரச்சினைக்கு முடிவு கிடைக்கவில்லையேல், ஆணையம் துணைக்குழுவின் அறிக்கையைப் பரிசீலனை செய்து மேற்படி பிரச்சினை மனித உரிமை மீறல்தானா என்பதையும் சம்பந்தப்பட்ட நாடுகள் அளித்துள்ள உண்மைகள் அல்லது விபரங்கள் சரிதானா என்பதைப் பரிசீலனை செய்யும். ஆணையம் உறுப்பினர்கள் அனைவரது கருத்துக்களையும் கேட்டறிந்து அந்த அறிக்கையில் இணைக்கும் பின்னர் இந்த அறிக்கை அமைச்சர்கள் குழுவிற்கு அனுப்பி வைக்கப்படும். பின்னர் அந்த அறிக்கை பிரச்சினையில் சம்பந்தப்பட்ட இரண்டு நாடுகளுக்கும் அனுப்பி வைக்கப்படும். அந்த அறிக்கையை மேற்படி இரண்டு நாடுகளும் வெளியிடக் கூடாது. அமைச்சர்கள் குழுவின் பரிந்துரைகளும், கருத்துரைகளும் தேவைப்பட்டால் அந்த அறிக்கையில் இணைக்கப்படும்.

மனித உரிமை மீறல் பற்றிய பிரச்சினை தொடர்புடைய நாடுகள் வரையறுக்கப்பட்ட மூன்று மாதங்களுக்குள் நடவடிக்கையில் இறங்க வேண்டும். நீதிமன்றத்திற்குச் சென்று பரிகாரம் பெறலாம். இல்லையேல் அமைச்சர் குழுவே மனித உரிமை மீறல் உள்ளதா? இல்லையா? என்பதை முடிவு செய்து, என்ன செய்ய வேண்டும் என்று நாடுகளுக்கு வழிகாட்டவோ, நடவடிக்கையையோ மேற்கொள்ளும். ஆணையம் வழிகாட்டிய செயல்களை வரையறுக்கப்பட்ட காலக்கட்டத்திற்குள்ளாக நாடுகள் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். இது கட்டாயமாக நாடுகள் ஏற்றுக் கொள்ள வேண்டும். எனவே, அமைச்சர்கள் குழு எடுக்கும் முடிவு இறுதியானது. முதல் தயாரிக்கப்பட்ட அறிக்கையுடன இம்முடிவுகளையும் இணைத்து புது அறிக்கை வெளியிடப்படும். ஆணையத்தின் கூட்டங்கள் இரகசியமாகவே

நடைபெறும். பெரும்பான்மைப்படி முடிவுகள் எடுக்கப்படும். வருகை தந்த உறுப்பினர்களின் பெரும்பான்மைப்படியே முடிவுகள் எடுக்கப்படும். இது மாதிரியேதான் துணைக் குழுக்களும் பெரும்பான்மை அடிப்படையில் முடிவுகளை எடுக்கும்.

ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் மற்றும் மனித உரிமைகள் நீதிமன்றம் ஆகிய இரண்டும் 1954ஆம் ஆண்டும், 1959ம் ஆண்டும் நீக்கப்பட்டு, புதிய பன்னாட்டு நீதிமன்ற அமைப்பு 1998ம் ஆண்டு நவம்பர் மாதம் முதல் தேதி உருவாக்கப்பட்டது. இது ஏற்கனவே இருந்த ஒப்பந்தத்தை இரத்து செய்து, புதிய ஒப்பந்தம் (Protocol II) மூலம் புது நீதிமன்றம் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நீதிமன்ற நீதிபதிகள் ஐரோப்பிய அமைப்பினால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இந்நீதிமன்ற நீதிபதிகள் ஐரோப்பிய அமைப்பில் இடம் பெற்றுள்ள உறுப்பினர்களின் எண்ணிக்கைக்குச் சமமாக இருப்பார்கள். தற்போது 45 நீதிபதிகள் இந்நீதிமன்றத்தில் இடம் பெற்று செயல்பட்டு வருகின்றனர். ஒவ்வொரு நாடும் ஒரு நீதிபதி மூலம் பிரதிநிதித்துவம் பெற்று செயல்பட வேண்டும் என்பதில்லை. நீதிபதிகள் பாரபட்சமின்றி நீதியை நிலைநாட்டக்கூடியவர்களாக இருந்தால் போதுமானது என்ற நிலை இன்று உருவாகியுள்ளது. கட்டாயமாக நாடுகளில் பிரதிநிதிகளாக நீதிபதிகள் இருந்தநிலை மாறியுள்ளது.

ஐரோப்பிய நாடுகளின் நீதிமன்றம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிரிவும் பகுதிவாரியாக வட்டாரமும், பாலினமும் சமமாக ஒவ்வொரு பிரிவிலும் அமையும் வகையில் நீதிபதிகள் நியமிக்கப்படுகின்றனர். இந்நீதிமன்றம் ஒரு தலைவரையும், நான்கு பிரிவுத் தலைவர்களையும் தேர்ந்தெடுத்து செயல்படுகின்றது. பிரிவுத் தலைவர்களில் இருவர் நீதிமன்ற உதவித் தலைவர்களாக பணியாற்றி வருவர். இவர்களது அனைவரது பதவிக் காலமும் மூன்று ஆண்டுகள்தான் ஆகும். ஒவ்வொரு பிரிவும் பிரிவுத் தலைவருடன் ஆறு நீதிபதிகள் சுழற்சி முறையில் தேர்ந்தெடுக்கபட்டு செயல்படுகின்றனர். இவை தவிர, 17 உறுப்பினர்கள் கொண்ட பேரவையும் (Chambers) உண்டு. இந்த பேரவையில் தலைவர், உதவித் தலைவர்கள், பிரிவுத் தலைவர்கள் மற்றும் சுழற்சி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட நீதிபதிகள் ஆகியோர் இதில் இருப்பர். ஒவ்வொரு ஒன்பது மாத இடைவெளியில் நீதிபதிகள் சுழற்சி முறையில் ஒரு பிரிவிலிருந்து மற்றொரு பிரிவிற்குச் சென்று பணியாற்றக் கூடியவர்களாக இருப்பார்கள்.

மனித உரிமை மீறல் பற்றி உறுப்பினர் நாடுகள் தலைமையகத்தில் புகார் கொடுக்க வேண்டும். அப்புகார்கள் உடனே ஒரு பிரிவிற்கு அனுப்பி வைக்கப்படும். ஒவ்வொரு புகாரையும் மூன்று நீதிபதிகள் அடங்கிய குழு முதலில் விசாரித்து தகுதியற்ற புகார்கள் உடனடியாக நிராகரிக்கப்பட்டு விடும். விசாரிக்கப்பட்ட புகார்களை முழு அவை கேட்டு தனது முடிவினைத் தெரிவிக்கும் மிகவும் முக்கியத்துவம் பெற்ற வழக்குகள் பேரவையின் முறையீட்டிற்குச் செல்லும். இப்பேரவை செய்யும் முடிவே இறுதியானது. அமைச்சர்குழு இந்நீதிமன்றங்களின் செயல்பாடுகளைக் கண்காணிக்கும் அதிகாரம் கொண்டது. நீதிமன்ற உத்திரவுகள் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்படும். கட்டாயப்படுத்தி உத்தரவுகளைச் செயல்படுத்துவதென்பது கடினம். எனவே, இந்நீதிமன்ற உத்தரவுகளைச் செயல்படுத்தாத உடன்படாத நாடுகள் ஐரோப்பிய அமைப்பிலிருந்து வெளியேற்றப்படும். ஐரோப்பிய நாட்டிற்குள்ளே தனித்து செயல்படக்கூடிய நிலை அந்நாட்டிற்கு ஏற்படும். இதுதான் அந்நாட்டிற்கு வழங்கப்படும் தண்டனை. எனவே, நீதிமன்ற உத்தரவுகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு மனித மீறல் பிரச்சிசனைகள் நேரத்திற்கு நேரம் முழுமையாகப் பராமரிக்கப்பட்டு வரும்.

மனித உரிமைகளில் ஐரோப்பிய மக்கள் கொண்டிருக்கும் அதிக விழிப்புணர்வும், ஈடுபாடும் மிகவும் அபரிதமானது. இவர்கள் எதிர்பார்க்கும் அளவில் இந்நீதிமன்றத்தின் செயல்பாடுகள் அமையவில்லை. எனவே, இந்நீதிமன்றச் செயல்பாடுகளை துரிதப்படுத்த வேண்டும் என்ற கருத்து நிலவி வருகின்றது. 2003 நவம்பர் 1ம் தேதியிலிருந்து 2004 பிப்ரவரி 29ம் தேதி வரை இந்நீதிமன்றத்தில் 7315 வழங்குகள் பரிசீலனைக்கு வந்துள்ளன. இவற்றில் 6255 வழக்குகள் விசாரணைக்கு உகந்தவை என ஏற்றுக் கொள்ளப்படவில்லை. சில வழக்குகள் 5 ஆண்டுகளுக்கு மேல் ஆகியும் முடிக்கப்படவில்லை. ஏராளமான வழக்குகள் தேக்கத்திலும் உள்ளன. எனவே இந்நீதிமன்றத்தை சீரமைப்பது தேவை என்று பலரும் வாதிடுகின்றனர். நீதி தாமதமென்பது நீதி மறுப்பதென்பதாகும். எனவே, இந்நீதிமன்றத்தைச் சீரமைக்க வழிவகைகள் பல மேற்கொள்ளப்பட்டன. மனித உரிமைப் பாதுகாப்பு மற்றும் அடிப்படை உரிமைகள் மாநாடு ஒப்பந்தம் 14 என்பது உருவாக்கப்பட்டது. இதன்படி பல மாற்றங்கள் செய்யப்பட்டன. அவற்றின் சில முக்கியமானவை.

மூன்று நீதிபதிகள் வழக்கு விசாரணைக்கு உகந்ததா என்ற நிலையை மாற்றி ஒரு நீதிபதியே வழக்கு விசாரணைக்கு தகுதி கொண்டதா என்பதை நிர்ணயிக்கும் வகையில் மாற்றம் செய்யப்பட்டது. பொதுவாக ஒரே மாதிரியாக அமையக்கூடிய

வழக்குகளில் உறுப்பினர் நாடு ஏற்காத சில வழக்குகளை ஏற்கும் அதிகாரத்தை மூன்று நீதிபதிகள் கொண்ட நீதிமன்ற பிரிவு விசாரித்து நீதி வழங்கலாம். முன்னர் இருந்த 7 நீதிபதிகள் நீதிமன்றப் பிரிவு விசாரிக்க வேண்டியதில்லை. சில வழக்குகளை விசாரித்து நீதி வழங்கினால் பெரிய விளைவு ஏதும் ஏற்படாது என்று கருதினால், அவ்வழக்குகளை ஏற்க வேண்டிய அவசியமில்லை. அவற்றை விசாரித்தாலும் பெரிய பயன் ஏற்படாது. எனவே அப்படிப்பட்ட வழக்குகளை அமைச்சர்கள் குழு ஒரு நாடு வழக்கினை நடைமுறைப்படுத்தவில்லையேல், அந்நாட்டின் மீது நடவடிக்கை எடுக்க அமைச்சர் குழு கூறலாம். மேலும் வழக்குகளை விசாரித்து, எளிமையாக அனைவருக்கும் பயன்தரதக்க அளவில் உறுப்பினர் நாடு ஏற்கும் முறையை அங்கீகரித்து அதற்கேற்ப நீதிமன்றம் முடிவுகள் எடுக்கலாம். இவ்வாறு பல மாற்றங்கள் செய்யப்பட்டன. ஆனால் இவற்றின் மூலம் மனித உரிமை மீறல் பிரச்சினைகள் தெளிவாகத் தீர்க்கப்பட இயலாது என பன்னாட்டு பொது உரிமைக் கழகம் கூறியுள்ளது.

## 4.10 ஆசியக்காவலன்

உலக அளவில் உள்ள மனித உரிமைகள் அமைப்பின் பகுதிவாரியான அமைப்பு ஆசியக் காவலன் என்ற அமைப்பாகும். ஆசிய நாடுகளில் நடைபெறும் அனைத்து மனித மீறல் உரிமைகளை விசாரித்து, மனித உரிமைகளுக்கும் பாதுகாப்பு அளிக்கக் கூடியது இது. பயங்கரவாதத்தில் பாதிக்கப்படும் மனித உரிமைகளைப் பற்றியும், பெண்களுக்கு சில முகம்மதிய அரசுகள் சமத்துவம் வழங்காததையும், பெண்கள் பாலின மீறல் போன்ற பல பிரச்சிசனைகளை வெளியிட்டு அவற்றைத் தீர்க்க உதவுகின்றது. ஆசிய நாடுகளில் ஏற்படும் அனைத்து மனித உரிமை மீறல்களையும் விசாரிக்கக் கூடியது இந்த அமைப்பு.

## 4.11 தொகுப்புரை

மனித உரிமைகளின் காவலன் என்ற ஒரு அமைப்பு பன்னாட்டு அளவில் ஏற்பட்டு உள்ளது. இது உலகம் முழுவதும் உள்ள மனித உரிமை மீறல் பிரச்சிசனைகளைத் தீர்த்து வைக்க உதவுகின்றது. பாராடட்சமாக நடத்துதல் அரசியல் சுதந்திரம், குற்றவாளிகள், மனிதாபிமானமற்ற செயல்களைக் கண்டித்தல் போன்ற செயல்களில் மூலம் மனித உரிமைக்ளுக்கு விழிப்புணர்வும், பாதுகாப்பும் கிடைக்க வழிவகை செய்துள்ளது. அரசாங்கங்கள் அத்துமீறி மனித

உரிமை மீறல்களைச் செய்தாலும் அவற்றையும் இந்த அமைப்பு வன்மையாகக் கண்டிக்கும். உலக அளவில் மனித உரிமைகள் எவ்வாறு மதிப்பளிக்கப்பட வேண்டும். பாதுகாக்கப்பட வேண்டும் என அரசாங்கங்களுக்கும் வழிகாட்டல் செய்யக் கூடியது இந்த அமைப்பு. இது சுதந்திரமான, தன்னிச்சையான, அரசு சார்பற்ற நிறுவனம், பொதுமக்கள் வழங்கும் தாராள தயை உதவிகளைப் பெற்று செயல்பட்டு வருகின்றது. அரசாங்கங்களிடமிருந்து நேரடியாகவோ, மறைமுகமாகவோ நிதி உதவி எதுவும் பெறுவதில்லை.

### 4.12 முக்கிய வார்த்தைகள் :

பன்னாட்டு பொது உரிமை கழக, ஐரோப்பிய மனித உரிமை ஆணையம், நிதித் துறை, காவல்துறை, ஈராக், அமெரிக்க பெண்கள் உரிமை, இடம் பெயர்ந்தோர்

### 4.13 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 4.4 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 4.6 ல் அறிக

வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 4.9 ல் அறிக

### 4.14 மாதிரி வினாக்கள் :

1. பன்னாட்டு பொது உரிமைக் கழகத்தின் அமைப்பு மற்றும் செயல்பாட்டினை விவரி.
2. ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் பற்றி சுருக்கமாக எழுது.

### 4.15 பரிந்துரை நூல்கள் :


1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

# அலகு - 5

# அடிப்படை உரிமைகள் மற்றும் அரசு நெறிமுறைக் கோட்பாடுகள்

**அறிமுகம் :**

மனிதர்கள் அனைவரும் சமம். சம உரிமை கொண்டவர்கள் என்ற அடிப்படை இலட்சியத்தைக் கொண்டுள்ளது நமது நாடு. உள்நாட்டளவிலும், பன்னாட்டளவிலும் மனித உரிமைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து வருகின்றது இந்திய நாடு. எனவே தான் அரசியலமைப்பின் மூன்றாவது பாகம் முழுவதும் அடிப்படை உரிமைகளைக் கொண்டுள்ளது. நீதிபதி பகவதி, "இந்தியா வேதகாலத்திலிருந்து இன்று வரை மக்கள் தங்களின் அடிப்படைத் தகவுகளாக அடிப்படை உரிமைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வருகின்றனர்" என்கிறார். நீதிபதி பல்கிவாலா " அடிப்படை உரிமைகள்தான் இந்திய அரசியலமைப்பின் நங்கூரம்" என்கிறார்.

அடிப்படை உரிமைகளுக்கு முக்கியத்துவம் சுயராஜ்யக் காலத்திலிருந்து அதாவது, 1895லிருந்து கொடுக்கப்பட்டு வருகின்றது. அன்னிபெசண்டின் காமன்வெல்த், 1927ம் ஆண்டின் இந்திய தேசியக் காங்கிரசின் தீர்மானம், 1928ம் ஆண்டின் நேரு அறிக்கை ஆகியன தொடர்ந்து மனித உரிமைகளுக்கு முக்கியத்துவம் அளித்து வருகின்றன. அமெரிக்க அரசியலமைப்பின் உரிமைகள் சாசனம் 1776, 1789ம் ஆண்டின் பிரெஞ்சுப் புரட்சி பிரகடனம், 1935 ஐரீஸ் அரசியலமைப்பின் அம்சங்கள் ஆகிய சாசனங்கள் இந்திய அரசியலமைப்பை உருவாக்கியோர்களை மிகவும் கவர்ந்ததால், மனித உரிமைகளுக்கு முக்கியத்துவம் வழங்கினர். எனவே அடிப்படை உரிமைகளை சட்டபூர்வமாக செயல்படுத்தக் கூடியவற்றை பாகம் III-லும் பாகம் IV-ல்லும் வழகாட்டு நெறிக்கொள்கையெனவும் வகுக்கப்ட்டுள்ளது.

அடிப்படை உரிமைகள் மறுக்கப்படும் சமயங்களில் நீதிமன்றங்களின் மூலமாக அவற்றைப் பாதுகாத்துக்கொள்ளலாம். ஆனால் வழிகாட்டு நெறிக் கொள்கைகளை நீதிமன்றத்தின் வாயிலாக நிலைநாட்ட முடியாது. மேலும் அடிப்படை உரிமைகள் குடிமக்களுக்கு உத்திரவாதம் அளிப்பதால் அவற்றன் மறுக்க முடியாது. அவற்றை குறைக்கவும் முடியது.

ஏனெனில் அரசியலமைப்பு மூலம் குடிமக்களுக்கு மறுக்க முடியாத உத்திரவாதம் மனித உரிமைகளுக்கு வழங்கப்பட்டுள்ளது.

**நோக்கங்கள் :**

1. இந்திய அரசியல் அமைப்பில் கூறப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளை ஆராய்தல்
2. அரசு நெறிமுறை கோட்பாட்டின் முக்கியத்துவத்தை அறிதல்

வடிவ அமைப்பு

**உட்கூறுகள்**

5.1 அடிப்படை உரிமைகள்
5.2 சமத்துவ உரிமை
5.3 சுதந்திர உரிமைகள்
5.4 சுரண்டலுக்கெதிரான உரிமை
5.5 மத உரிமை
5.6 கலாச்சார மற்றும் கல்வி உரிமைகள்
5.7 சொத்துரிமை
5.8 அரசியலைப்பு பரிகார உரிமைகள்
5.9 அரசு நெறிமுறைக் கோட்பாடுகள
5.10 அடிப்படை உரிமைகட்கும் அரசு நெறிமுறைக் கோட்பாட்டிற்கு உள்ள வேறுபாடுகள்
5.11 கோட்பாடுகள்
5.12 கோட்பாட்டின் தன்மைகள்
5.13 அடிப்படை உரிமைகளும் நெறிமுறைக் கோட்பாடுகளும்
5.14 அடிப்படை கடமைகள்
5.15 தொகுப்புரை
5.16 முக்கியவார்த்தைகள்
5.17 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனைகளுக்கான வினா பதில்கள்
5.18 மாதிரி வினாக்கள்

5.19 பரிந்துரை நூல்கள்

## 5.1 அடிப்படை உரிமைகள் :

அரசியலமைப்பின் மூன்றாவது பாகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் கீழ்க்கண்டனவாகும். அவையாவன.

1. சமத்துவ உரிமை
2. சுதந்திர உரிமை
3. சுரண்டலுக்கு எதிரான உரிமை
4. மத உரிமை
5. கலாச்சார மற்றும் கல்வி உரிமை
6. சொத்துரிமை
7. அரசியல் பரிகார உரிமைக ஆகியனவாகும்

## 5.2 சமத்துவ உரிமை: (விதிகள் 14-18)

சமத்துவ உரிமையும், சட்டத்தின் முன் சமத்துவமும் மக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. ஆனால் இவை கட்டுப்பாடுகள் இல்லாத உரிமைகள் எனச் சொல்ல முடியாது. ஏனெனில் நியாயமான கட்டுப்பாடுகள் இவ்வுரிமை மீதாக வரையறுக்கப்பட்டுள்ளன. ஏனெனில் உலகம் முழுமையும் பல்வேறு சமத்துவமின்மையால் காணப்படுகின்றது. சமூக பொருளாதார, அரசியல் வேற்றுமைகள் பல உள்ளன. சமூகத்தில் சமத்துவமின்மையைத் தடுக்கவும் சில நேரங்களில் அதனைத் தேவைப்பட்டால் கடைபிடிப்பதன் மூலம் சமத்துவ உரிமை காக்கப்படுகின்றது. சட்டத்தின் மூலம் அனைவருக்கும் சமத்துவம் வழங்கப்பட்டுள்ளது. சட்டத்தின் பாதுகாப்பும் சமத்துவத்திற்கு வழங்கப்பட்டுள்ளது. மதம், இனம், சாதி, பால், பிறந்த இடம் போன்றவற்றின் மூலமாக எந்தவித பாகுபாடும் பார்க்கக்கூடாது. அரசு அனைவரையும் ஒரே மாதிரியாகவே பாவிக்க வேண்டும். வேலைவாய்ப்பும் எல்லோருக்கும் சமமாகவே வழங்கப்பட வேண்டும். எக்காரணத்தை வைத்தும் பேதம், வேறுபாடு ஆகியன காட்டக் கூடாது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. சமத்துவ உரிமை என்றால் என்ன?

### 5.3 சுதந்திர உரிமைகள் (விதிகள் 19-22)

இந்திய அரசியலமைப்பின் 19வது பிரிவின்படி கீழ்க்கண்ட சுதந்திர உரிமைகள் வழங்கப்புட்டுள்ளது. அவையாவன.

பேச்சுரிமை மற்றும் கருத்துக்களை வெளியிடும் உரிமை
ஆயுதங்களின்றி அமைதியாக கூட்டம் கூடும் உரிமை
சங்கங்கள் அமைக்கும் உரிமை
இந்தியாவில் எவ்விடத்திற்கும் சென்று வரும் உரிமை
இந்தியாவில் எப்பகுதியிலும் வாழும் உரிமை
சொத்துரிமை
எவ்வேலைகளையும் செய்யும் உரிமை
சட்டப்படியன்றி யாரையும் குற்றவாளியென்று தண்டிக்கக் கூடாது.
ஒருவரை ஒரு தவறுக்காக இரண்டு முறை தண்டிக்கக் கூடாது.
எனவே ஒருவரது வாழும் உரிமையையும், தனி நபர் சுதந்திரத்தையும் யாரும் பறிக்கக் கூடாது. இது அரசியலமைப்பின் 21வது பிரிவில் வழங்கப்பட்டுள்ளது.
சித்திரவதை போன்றவற்றிலிருந்து விடுதலை உரிமை
சட்ட உதவி பெறும் உரிமை
வழக்குகளை விரைவாக முடிக்கும் உரிமை
பாதிக்கபட்டோர் நஷ்ட ஈடு பெறும் உரிமை

ஆகியன 21வது பிரிவில் குடிமக்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.எல்லா உரிமைகளுக்கும் சில நியாயமான கட்டுப்பாடுகளை அரசாங்கம் விதித்திருக்கின்றது.

அரசிலமைப்பின் 22வது பிரிவில் குடிமக்களைக் கைது செய்தல் மற்றும் சிறையிலடைத்தல் போன்றவற்றிலிருந்து பாதுகாப்பு பெறும் உரிமை வழங்கப்பட்டுள்ளது. கைது செய்த யாரையும் சிறையிலடைக்க நேர்ந்தால் அதனை முறைப்படி எக்காரணத்திற்கு கைது செய்யப்படுகிறார் என்பதை த்தெரிவிக்க வேண்டும். கைது செய்யப்பட்டவரை 24 மணி நேரத்திற்கு மேல் காவலில் வைக்கக் கூடாது. பின்னர் அவர் செய்தது குற்றமா? இல்லையா? என்று அவரைப் பாதுகாக்க வக்கீல் மூலம் வாதிட அவருக்கு வாய்ப்பு கொடுக்க வேண்டும். கைது செய்யப்பட்ட காரணத்தை கைது செய்யப்பட்டவருக்குத் தெரிவிக்கப்பட வேண்டும். இது கட்டாயம்

செய்யப்பட வேண்டிய சட்டபூர்வ செயல் ஆகும். வரையறுக்கப்பட்ட காலத்திற்குள் கைது செய்யப்பட்ட காரணம் தெரிவிக்கப்பட வேண்டும் அல்லது தாமதமாகத் தெரிவிப்பதற்கு தகுந்த காரணம் இருக்க வேண்டும். தகுந்த காரணமிருக்கும்போது எதற்காக கைது செய்யப்பட்டார் என்பதைத் தெரிவிக்க வேண்டும் என்பதில்லை. ஆயினும், இன்னென்ன குற்றங்களுக்காக, இச்சட்டத்தின்படி அவசர ஆணையின்படி அல்லது ஒழுங்குமுறைச் சட்டத்தின்படி கைது செய்துள்ளோம் என்பதைத் தெரிவிக்க வேண்டும். நீதிமன்றம் கைது செய்யப்பட்ட காரணம், குற்றங்கள் ஆகியனவற்றை ஆராய்ந்து கைது செய்யப்பட்டது சரிதான் என்று முடிவு செய்யலாம் அல்லது கைது செய்யப்பட்டது சட்டத்திற்கு எதிரானதென்று முடிவு செய்யலாம். கைது செய்யப்பட்டது சட்டத்திற்கெதிரானதென்றால், கைது செய்யப்பட்டவர் உடனே விடுவிக்கப்பட வேண்டும். கைது செய்யப்பட்டவர் ஜாமீனில் வெளி வந்த பின்னர் கைது செய்யப்பட்ட காரணம் சொல்வதுடன் முடிந்து விடுவதில்லை. கைது செய்யப்பட்டவர் தவறு செய்து விட்டால், குற்றமற்றவர் என்று தன்னைக் குற்றத்திலிருந்து விடுவித்துக் கொள்ள வாய்ப்பு வழங்க வேண்டும். இதற்காக அவர் நீதிமன்றத்தின் உதவியை நாடலாம். கைது செய்யப்பட்டவர் 24 மணி நேரத்திற்குள் நீதிமன்றத்தில் ஒப்படைத்து நபரின் குற்றங்களைத் தெரிவிக்க வேண்டும். ஏனெனில் காவல் துறையான ஆட்சித் துறையின் நடவடிக்கைக்கு நீதிமன்றத்தின் ஒப்புதல் அவசியம். நீதிமன்ற ஒப்புதல் இல்லாமல், அதாவது கைது செய்யும் ஒப்புதல் (Warrant) இல்லாது காவல்துறை கைது செய்திருந்தால் அவரை மறுபடியும் அதே நீதிமன்றத்தின் ஒப்புதலுக்குக் கொண்டுபோக வேண்டியதில்லை. ஏனெனில் இது இயற்கை நீதிக் கோட்பாட்டிற்கு முரணானது.

### 5.4 சுரண்டலுக்கெதிரான உரிமை:

கட்டாய வேலை, அடிமைத் தனம், கொத்தடிமை, பெண்களை இழிதொழிலான விபச்சாரம் போன்றவற்றில் ஈடுபட வைத்தல், பிச்சை எடுத்தல் போன்றவற்றில் ஈடுபட வைப்பதை தடை விதித்துள்ளது. இந்திய அரசியலமைப்பு முன்னர் கூறிய செயல்கள் எந்த வடிவத்திலும், முறையிலும் செய்யப்பட்டாலும், குற்றச் செயல் என இந்திய குற்றத் தண்டனைச் சட்டம் 370ல் குறிப்பிடப்பட்டுள்ளது. பெண்களையும், சிறுமிகளையும் கட்டததுதல் கடத்திச் சென்று விற்பது, அடிமைகள் போல் விற்பது. வாங்குவது போன்ற குற்றங்களில் ஈடுபடுவோர் மீது கடுமையான தண்டனை விதிக்க சட்டத்தில் இடம் உள்ளது. இவற்றிற்கு ஏழாண்டு சிறை தண்டனையும், அபராதம் மற்றும் பிற கடுமையான தண்டனைக்ள விதிக்கப்டும்.

இந்திய அரசியலமைப்பு பிரிவு 24ன்படி, 14 வயதிற்கு குறைவாக உள்ள சிறுவர்களை அபாயம் விளைவிக்கும் தொழில்கள் ஈடுபடுவதைத் தடை செய்துள்ளது. இது வழிகாட்டு நெறிக் கொள்கையில் கூறியுள்ள கட்டாய இலவசக் கல்வி 14 வயது வரை உள்ள அனைத்துச் சிறுவர்களுக்கும் வழங்க வழி செய்துள்ளது. அரசியலமைப்பு செயல்படுத்தப்பட்ட 10 ஆண்டுகளில் செயல்படுத்த வழிகாட்டல் செய்யப்பட்டாலும், அரசாங்கம் இதுவரை செயல்படுத்துவில்லை. இந்யத வழிகாட்டலை அரசாங்கம் முன்னதாக செயல்படுத்தியிருந்தால் இன்று 100 விழுக்காடு கல்வி பெற்றிருப்போம். தவிர, 1939ம் ஆண்டு சிறுவர் வேலைச் சட்டத்தின்படி, 15 வயதுக்குக் குறைவான சிறுவுர்களை பயணிகள் போக்குவரத்து தொடர்பான வேலைகளில் ஈடுபடுவதைத் தடை செய்துள்ளது. இரயில்வே துறைமுகம் போன்றவற்றில் பொருட்களைத் தூக்கும் சுமை தொழில்களில் ஈடுபடக் கூடாது என்று சிறுவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. உற்பத்தித் தொழில்கள் வெடி மருந்துகள், தீப்பெட்டித் தொழில், மைகாத் தொழில், சோப், மர வேலை போன்ற தொழில்களில் 12 வயதுக்குத் குறைவானவர்கள் வேலை செய்யத் தடை விதிக்கப்பட்டுள்ளது. 1948ம் ஆண்டு தொழிற்சாலைகள் சட்டத்தில் பருத்தித் தொழிலில் (Pressing Cotton) சிறுவர்கள் வேலை செய்வது தடை செய்யப்பட்டுள்ளது. இது மாதிரியாக 1952ம் ஆண்டு சுரங்கச் சட்டத்திலும் தடை உள்ளது. இவ்வாறாக சிறுவர்களை சுரண்டுவதைத் தடை செய்து சிறுவர்களுக்கு பாதுகாப்பினை இந்திய அரசியலமைப்பு வழங்கியுள்ளது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. மத உரிமையின் முக்கியத்துவத்தை கூறுக.

## 5.5 மத உரிமை :

எல்லா மனிதர்களும் சமம். இது மதத்திற்கும் பொருந்தும். குடிமக்கள் எந்த மதத்தில் இருக்கவும், பின்பற்றவும், பரப்பவும் உரிமை கொண்டவர்கள். இது அரசியலமைப்பின் 25வது பிரிவில் இடம் பெற்றுள்ளது. அரசாங்கம் மதத்தோடு தொடர்புடைய பொருளாதார, நிதி, அரசியல் மற்றும் பிற மதச்சார்பற்ற நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தவும், கட்டுப்படுத்தவும் அரசாங்கம் அங்கீகாரம் கொண்டுள்ளது. அரசியலமைப்பு பிரிவு 26ன்படி, எந்த மதமும் தங்களது பெயரில் மதச் சார்பு நிறுவனங்களையும், அறக் கட்டளைகளையும் ஏற்படுத்திக் கொள்ளலாம். அந்த அமைப்புக்களை மதச் சார்பாக மேலாண்மை செய்து கொள்ளலாம். அந்த அமைப்புக்களுக்கு அசையும் மற்றும் அசையாச் சொத்துக்களை ஏற்படுத்திக் கொள்ளலாம். ஆனால் இவை அனைத்தும் சட்டங்களுக்கு உட்பட்டு நிர்வகிக்கப்பட

வேண்டும். எந்தவொரு குடிமகன் மீது ஒரு குறிப்பிட்ட மத வளர்ச்சிக்காக வரி விதித்தல் கூடாது என 27வது பிரிவு கூறுகின்றது. ஏனெனில் இது மதச்சார்பற்ற அரசாங்கத்திற்கு எதிரானதாகும். அரசாங்க உதவி பெறும் கல்வி நிறுவனங்களில் மதக் கல்வி எதுவும் இடம் பெறக் கூடாது எனக் கூறப்பட்டுள்ளது. இது கல்வி நிறுவனத்திற்கு மட்டுமின்றி மத, அறக்கட்டளை போன்றவற்றிற்கும் பொருந்தும். கட்டாய மதக் கல்வி கூடாது என்று பிரிவு 28 கூறுகின்றது. இருப்பினும் விருப்பமாக மக்கள் மதக் கல்வி பெறுவதில் சிக்கல் எதுவுமில்லை. சிறுவராக இருந்தால் அவரது பாதுகாவலரின் அனுமதியுடன் அந்த சிறுவர் மதக் கல்வி பெறலாம். ஆனால் யாரையும் கட்டாயப்படுத்தக் கூடாது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
3. சொத்துரிமை அடிப்படை உரிமையில் இருந்து நீக்கப்பட்டது ஏன்?

## 5.6 கலாச்சார மற்றும் கல்வி உரிமைகள்:

இந்தியக் குடிமகன் இந்தியாவில் எப்பகுதியில் இருந்தாலும் அவர்களது மொழி எழுத்து, கலாச்சாரம் ஆகியவற்றை கட்டிக் காக்க முழு சுதந்திரம் உள்ளது என அரசியலமைப்பு பிரிவு 29 கூறுகின்றது. மதம், இனம், சாதி, மொழி மற்றும் பிற தன்மைகளின் அடிப்படையில் எந்தவொரு கல்வி நிறுவனத்திலும் எவருக்கும் அனுமதி மறுக்கக்கூடாது. இந்திய அரசியலமைப்பின் சாராம்சமானது மதமொழி வகை சிறுபான்மையோர்கள் தங்களது மத, மொழி மேம்பாட்டிற்கு கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தத் தடை எதுவும் விதிக்க வில்லை. மாறாக இந்திய ஒற்றுமையை வளர்க்க சிறுபான்மையோர்களுக்கு பாதுகாப்பினை அரசியலமைப்பு பிரிவு 30 வழங்கியுள்ளது. நாட்டின் பொது மதச் சார்பற்ற அனைத்து மாணவர்களையும், பொதுவான வகையில் படிக்க, சிந்திக்க வைக்கின்றது. இதனால் கல்வியின் மூலம் சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகிய கோட்பாடுகளை நடைமுறைப்படுத்த முடியும். சிறுபான்மையோர் பொதுவாக தாங்கள் ஒதுக்கப்பட்டு விட்டோம் என்ற நிலை வரக் கூடாது என்பதற்காக சிறுபான்மையோர்களுக்கு பாதுகாப்பு கொடுக்கப்பட்டுள்ளது. எனவே கட்டாய மதக் கல்வி இல்லாது விருப்பக் கல்வி வழங்கப்பட்டுள்ளது.

## 5.7 சொத்துரிமை:

சொத்துரிமை அடிப்படை உரிமைகளில் முக்கியமான உரிமையாகக் கருதப்படுகின்றது. அரசியலமைப்பின் 44வது திருத்தத்தின்படி, இது அடிப்படை உரிமையிலிருந்து நீக்கப்பட்டு விட்டது. இது தற்போது பொதுவான உரிமையாக

உள்ளது. பொதுமக்கள் சொத்துக்கள் வாங்கவும், வைத்துக் கொள்ளவும், விற்கவும் உரிமை கொண்டவர்கள். ஆயினும் அரசாங்கம் பொதுநலன் கருதியும் பழங்குடினர் நலன் காக்கும் வகையிலும் நியாயமான கட்டுப்பாடுகள் விதிக்க அரசியலமைப்பின் பிரிவல் இடம் உள்ளது. எவருடைய சொத்தையும் பறித்துக் கொள்ள அரசாங்கத்திற்கு உரிமை கிடையாது. இருப்பினும் சட்டத்தின் மூலம் பொதுமக்கள் நலன் கருதி கட்டுப்பாடுகள் கொண்டுவர அரசாங்கத்திற்கு அதிகாரம் உண்டு. அடிப்படை உரிமைகளிலிருந்து சொத்துரிமையை எடுத்துவிட்டு, சாதாரண உரிமைகளில் சொத்துரிமை இன்று இடம் பெற்றுள்ளது.

## 5.8 அரசியலமைப்பு பரிகார உரிமைகள் :

அரசியலமைப்பில் வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கக் கொடுக்கப்பட்டுள்ளது இந்த உரிமை. தலைமை நீதிமன்றத்தின் மூலம் இவ்வுரிமைகளுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது. அடிப்படை உரிமைகள் மீறப்பட்டால் குடிமக்கள் நேரடியாக தலைமை நீதிமன்றம் சென்று, தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள அரசியலமைப்பின் பிரிவு 31 உத்திரவாதம் அளித்துள்ளது. எனவே, தலைமை நீதிமன்றம் ஆட்கொணர் நீதிப் பேராணை, கட்டணை நீதிப் பேராணை, தடை விதித்தல் பேராணை, எவ்வகை அதிகார நீதிப் பேராணை, சான்றிதழ் ஒப்படைப்பு நீதிப் பேராணை ஆகியவற்றின் மூலம் மக்களுடைய அடிப்படை உரிமைகளை நீதிமன்றம் காப்பாற்றுகின்றது. இந்திய அடிப்படை உரிமைகள் அனைத்தும் ஐ.நா, அவை பிரகடனமான உலக மனித உரிமை மகாசாசனப் பிரகடனத்ததைப் போன்றதாகும். எனவே மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாப்பது இந்திய நீதிமன்றம் இதுதான் அரசியலமைப்பு பரிகார உரிமை ஆகும்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
3. பரிகார உரிமகளின் வகைகளை கூறுக.

## 5.9 அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் :

இந்திய அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் காணப்படும் பதினாறு விதிகள் (36 முதல் 51 வரை) அரசு நெறிமுறைக் கோட்பாடுகளைக் கொண்டுள்ளன. சில பொருளாதாரக் குறிக்கோள்கள், சட்டமன்றத் துறைக்கும், ஆட்சித் துறைக்கும் அளிக்கப்பட்டுள்ள சில வழிமுறைகள் நீதிமன்றங்களால் நிலை நாட்ட முடியாத சில உரிமைகள் போன்றவை அடங்கியவைதான் இந்நெறிமுறைக் கோட்பாடுகள். சட்டங்களை இயற்றும் பொழுதும் நிர்வாகம் நடத்தும்பொழுதும் இந்நெறிமுறைக் கோட்பாடுகளை அரசாங்கம் பின்பற்றக் கடமைப்பட்டுள்ளது.

மக்கள் நல அரசை உருவாக்குவதற்கென்றே இந்நெறிமுறைக் கோட்பாடுகள் நமது அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்நெறிமுறைகளை நாம் அயர்லாந்து குடியரசின் அரசியலமைப்பில் இருந்து எடுத்துள்ளோம். மனித உரிமைகளுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இது கருதப்படுகின்றது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
5. அறநெறி கோட்பாடு என்றால் என்ன?

### 5.9 அரசு நெறிமுறை கோட்பாடுகள்:

அரசியலமைப்பின் நான்காவது பாகத்தில் சமூக, பொருளாதார உரிமைகள் ஆகியன அரசின் வழிகாட்டு உரிமைகளாக அமைந்துள்ளன. இவை அரசாங்கம் எடுக்கும் கொள்கைகளில் இடம் பெற வேண்டும். அந்த உரிமைகள்,

1. வாழும் உரிமை
2. பொருளாதார, சுரண்டெலுக்கெதிரான உரிமை
3. (பாலின வேறுபாடின்றி) சம வேலைக்கு சம ஊதியம்
4. வேலை செய்யும் உரிமை
5. ஓய்வு மற்றும் பொழுதுபோக்கு உரிமை
6. வேலையின்மை, முதியோர், நோய், ஆகியவற்றிலிருந்து பாதுகாப்பு மற்றும் அரசாங்க உதவி பெறும் உரிமை.

### 5.10 அடிப்படை உரிமைகட்கும் இவற்றிற்கும் உள்ள வேற்றுமைகள்:

அடிப்படை உரிமைகள் என்பவை அரசாங்கத்தின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துபவையாகும். ஆனால் நெறிமுறைக் கோட்பாடுகள் எனப்படுபவை அரசாங்கத்திற்குக் கட்டளையிடும் கருவியாகும். அரசாங்கம் உரிய சட்டங்களை இயற்றி நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும். நீதி மன்றத்தால் நிலை நாட்டப்படக் கூடிய உரிமைகள் எதையும் உருவாக்காத இந்நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற நீதிமன்றங்களால் இயலாது. ஆனால் 42வது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் அரசுநெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் அடிப்படை உரிமைகளுக்கும் மேலான முக்கியத்துவத்தைக் கொடுத்திருக்கிறது. மேலும் இத்திருத்தம் அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் குறிக்கப்பட்டுள்ள அனைத்து அரசு நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் முக்கியத்துவம் கொடுக்கும்முகமாக விதி 31-Cயின் நோக்கத்தை விரிவுபடுத்தியுள்ளது. துவக்கத்தில் நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும் என்று அரசாங்கத்திற்கு உத்தரவிட

எந்த நீதிமன்றத்திற்கும் அதிகாரம் கிடையாது. அரசியலைப் பின்னணியாகக் கொண்டுதான் இந்நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலாற்ற வேண்டும். அரசாங்கம் இந்நெறிமுறைக் கோட்பாடுகளைப் புறக்கணித்தால் அது தேர்தலின்போது மக்களுக்குப் பதிலளிக்க வேண்டியிருக்கும் என்று டாக்டர் அமபேத்கார் கூறினார். இந்நெறிமுறைக் கோட்பாடுகள் நாட்டின் நிர்வாகத்திற்குத் தேவையான அடிப்படைகள் எனக்கருதப்படுவதால் ஒரு அரசாங்கம் தனது கொள்கையை உருவாக்கும்பொழுது இவற்றைப் புறக்கணிக்ககட கூடாது.

அடிப்படை உரிமைகள் அரசைத் தடை செய்யும் தன்மையுடையவை. அரசு மக்கள் உரிமைகளைப் பறிக்கக் கூடாது என்று இவை கூறுகின்றன. ஆனால் நெறிமுறைக் கோட்பாடுகள் அரசின் கடமைகளைக் குறிப்பிடுகின்றன. சில சமூகப் பொருளாதாரக் குறிக்கோள்களை வளர்ப்பது அரசின் கடமையாகும் என்று நெறிமுறைக் கோட்பாடுகள் சொல்கின்றன. அடிப்படை உரிமைகள் என்பவை சில பணிகளைப் புரிவதற்கு அரசாங்கத்திற்கு அளிக்கப்படும் கருத்துரைகளாகும் என்றும் A. கிளெட்ஹில் என்ற ஆசிரியர் கூறுகின்றார்.

### 5.11 கோட்பாடுகள்:

பின்வருபவை நமது அரசியலமைப்பில் கொடுக்கப்பட்டுள்ள நெறிமுறைக் கோட்பாடுகளாகும். வேலை உரிமை கல்வியுரிமை, வேலையில்லாதபொழுது பொது உதவி, முதிர்ந்த வயதிலும், நோய்வாய்ப்பட்டிருக்கும் போதும் பொது உதவி, வேலை செய்வதற்குச் சாதகமான சூழ்நிலைகள், மகப்பேற்றுச் சலுகை, வாழ்க்கைக்கேற்ற ஊதியம், ஓய்வு, எல்லாத் தொழில்கட்கும் சமூகக் கலாச்சார வசதிகள் அளித்தல், ஒரே சீரான உரிமை இயல் சட்டத்தை நாடு முழுவதிலும் செயல்படுத்தல், பதினான்கு வயதிற்குக் குறைவான குழந்தைகள் அனைவருக்கும் கட்டாய இலவசக் கல்வியளித்தல், நவீன முறையில் வேளாண்மையையும், கால்நடைப் பராமரிப்பையும் கொண்டு வருதல், பொதுச் சுகாதாரத்தின் தரத்தை உயர்த்தல், மதுவிலக்கு, பசுவதையைத் தடை செய்தல், கலாச்சார, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பண்டைய நினைவுச் சின்னங்களைப் பாதுகாத்தல், கிராமப் பஞ்சாயத்துக்களை அமைத்து வளர்த்தல், நீதித்துறையை ஆட்சித் துறையினின்று பிரித்தல், பன்னாட்டு அமைதியையும் பாதுகாப்பையும் வளர்த்தல் ஆகியவையாகும்.

42வது திருத்தச் சட்டத்தின்படி சில புதிய நெறிமுறைகள் நான்காவது பாகத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அவையாவன:

1. பொருளாதார அடிப்படையில் பின்தங்கிய வகுப்பினருக்கு இலவசச் சட்ட உதவி

2. எல்லா வகைத் தொழில்களிலும் நிர்வாக மேலாண்மையில் பணியாளர்களின் பங்கீடு

3. வனம் மற்றும் வன விலங்குகளைப் பாதுகாத்தல், வாழ்க்கைச் சூழ்நிலைகளின் பாதுகாப்பும் முன்னேற்றமும்

அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் காணப்படுபவை மட்டுமின்றி அதன் வேறு பகுதிகளிலும் சில நெறிமுறைக் கோட்பாடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவையும் நீதிமன்றத்தால் செயல்படுத்த முடியாதவையே. அரசியலமைப்பின் 350-A விதியின்படி நாட்டில் காணப்படும் மொழிவாரிச் சிறுபான்மையினரது குழந்தைகட்கு ஆரம்பக் கல்வியைத் தாய்மொழியில் அளிப்பதற்குத் தேவையான வசதிகளை அரசாங்கமும் உள்ளாட்சி நிறுவனங்களும் ஏற்படுத்த முயற்சிக்க வேண்டும். ஹிந்தி மொழியை வளர்த்து பரப்ப வேண்டுமென்று 351வது விதி கூறுகின்றது. நியமனங்கள் செய்யும் பொழுது பின்தங்கிய வகுப்பினரது தேவைகளையும் மாற்றிக் கொள்ள வேண்டுமென்று 335வது விதி கூறுகின்றது.

## 5.12 கோட்பாட்டின் தன்மைகள் :

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
3. அறநெறி கோட்பாட்டின் தன்மை ஆராய்க.

மேற்கூறிய நெறிமுறைக் கோட்பாடுகளை நான்கு தலைப்புகளின் கீழ் வகைப்படுத்தலாம். சமத்துவத் தன்மையுடையவை, காந்தியக் கோட்பாடுடையவை, முற்போக்கான ஆய்வறிவு சார்ந்தவை, பொதுப்படயானவை என்பவைதான் இந்நான்கு தலைப்புகளும்.

நெறிமுறைக் கோட்பாடுகளில் பெரும்பான்மையானவை மக்கள் நல அரசை நிறுவுவதைத் தமது குறிக்கோளாகக் கொண்டுள்ளமையால் அவை சமத்துவத் தன்மையடையனவாகக் கருதப்படுகின்றன.

கிராமப் பஞ்சாயத்துக்கள், தாழ்த்தப்பட்டோர், குடிசைத் தொழில்கள், பசுவதை தடை, மது விலக்கு போன்றவை சம்பந்தப்பட்ட கோட்பாடுகளில் காந்தியத் தத்துவத்தைக் காணலாம்.

நாடு முழுமைக்கும் ஒரே சீரான உரிமையியல்விதி கட்டாயக் கல்வி, நவீன விஞ்ஞான முறைகளிலான வேளாண்மை, கால்நடைப் பராமரிப்பு, பிற துறைகளினின்றும் நீதித்துறையைப் பிரித்தல், பன்னாட்டு அமைதியையும், பாதுகாப்பையும் வளர்த்தல் போன்றவை சம்பந்தப்பட்ட கோட்பாடுகளை முற்போக்கான ஆய்வறிவு சார்ந்தவை எனலாம். பிற போட்பாடுகள் யாவும் பொதுப்படையானவையே.

அரசு நெறிமுறைக் கோட்பாடுகளை அரசியலமைப்பு வல்லுநர்கள் மிக வன்மையாகக் கண்டித்துள்ளனர். இந்நெறிமுறைக் கோட்பாடுகள் புனித விழைவுகள் என்று சர் ஐவர் ஜென்னிங்ஸ் கூறுகின்றார். இவற்றை நமது அரசியலமைப்பில் சேர்ந்ததன் மூலம் இங்கிலாந்தில் பத்தொன்பதாவது நூற்றாண்டில் நிலவி வந்த ∴ பேபியன் (Fabian) பொதுநலத்துவம் இங்கு இறக்குமதி செய்யப்பட்டுள்ளது என்றும் இவர் கூறுகின்றார். இந்நெறிமுறைக் கோட்பாடுகள் அரசியலமைப்பில் சேர்த்து முட்டாள்தனமான நடவடிக்கையென்றும் இவை அரசியலமைப்பிற்கு இழிவு தேடித் தருமென்றும் பேராசிரியர் K.C. வயர் கூறுகின்றார்.

சட்டத்தின் வலிமையற்ற இந்நெறிமுறைக் கோட்பாடுகட்கு அரசியலமைப்பு சார்ந்த முக்கியத்துவம் இல்லை எனச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. அரசியல் நிர்ணய சபையின் அங்கத்தினரில் ஒருவரான நசுருதீன் இக்கோட்பாடுகளைப் புது வருடத் தீர்மானங்கள் என அழைக்கின்றார். உணர்ச்சிகளின் குப்பைத் தொட்டி என்று டி.டி. கிருஷ்ணமாச்சாரி இவற்றை வருணித்தார்.

இக்கோட்பாடுகளை நல்லொழுக்க விதிகளாகக் கொண்டால் இவை காணப்பட வேண்டிய இடம் அரசியலமைப்பல்ல. செயற்படுத்த முடியாதவற்றை அரசியலமைப்பில் சேர்ப்பதென்பது பொருளற்றதாகும்.

நெறிமுறைக் கோட்பாடுகள் தெளிவற்றவை என டாக்டர் ஜென்னிங்ஸ் குறிப்பிடுகின்றார். இவை பொதுப்படையானவை என்று டாக்டர் A.C.வியர் கூறுகின்றார். முக்கியமானவையும், முக்கியமற்றவையும் இக்கோட்பாடுகளில் கலந்துள்ளன. பல கோட்பாடுகள் தெளிவற்றவையாகத் தென்படுகின்றன. உணர்ச்சிகளையும் விருப்ப வெறுப்புகளையும் மட்டும் அடிப்படையாகக் கொண்ட பல கோட்பாடுகள் இங்கு காணப்படுகின்றன. மது விலக்கு போன்ற சில கோட்பாடுகள் நலலொழுக்கத்தைச் செயலாற்ற முயற்சி செய்கின்றன. நல்லொழுக்கம் என்பது சட்டத்தால் செயலாற்றப்படக் கூடியதல்ல.

மக்கள் நல அரசை எய்துவதைக் குறிக்கோளாகக் கொண்டுள்ள நெறிமுறைக் கோட்பாடுகளில் இதனை எய்தும் முறைகள் கொடுக்கப்படவில்லை. காலப் போக்கில் இந்நெறிமுறைக் கோட்பாடுகள் முன்னேற்றத்தைத் தடை செய்யும் என்று டாக்டர் ஜென்னிங்ஸ் அஞ்சுகின்றார்.

இந்நெறிமுறைக் கோட்பாடுகள் பொருளற்றவை என்று நாம் அறவே புறக்கணிக்க முடியாது. ஆட்சித்துறை வழிகாட்டியாக இவை செயல்பட்டு வருகின்றன. பொது நல அரசை உருவாக்குவதில் இந்நெறிமுறைக் கோட்பாடுகள் ஆற்றியுள்ள தொண்டினை இத்தருணத்தில் சரியாக அளவிட இயலாது. எனினும் பொதுநல அரசை உருவாக்குவதில் இந்தியா பெருமளவு முன்னேற்றம் கண்டுள்ளது என்பதனை நாம் மறுக்க முடியாது. குறிப்பாக 42வது அரசியல் திருத்தத்தல் அரசு வழிகாட்டு நெறிமுறைக்கு அடிப்படை உரிமையைவிட அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருந்தது.

சட்டத்தின் வலிமையற்ற நெறிமுறைக் கோட்பாடுகட்கு பொதுமக்கட்கருத்து வலிமையளிக்கலாம். நாட்டின் நிர்வாகத்திற்கு அடிப்படையானவை இக்கோட்பாடுகள் என்று கூறியதன் மூலம் இவற்றிற்கு அரசியலமைப்பு புனித தன்மை அளித்துள்ளது என்று முன்னாள் தலைமை நீதிபதி கன்னா கூறியுள்ளார். வரம்பு மீறுதல்களைக் கட்டுப்படுத்த இக்கோட்பாடுகளால் இயலும். அதிகாரத்தை ஏற்கும் எவரும் இக்கோட்பாடுகளைப் புறக்கணிக்க முடியாது. நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயலுறுத்துவதற்காக அடிப்படை உரிமைகள் மீது கட்டுப்பாடு விதிக்கப்பட்டால் அவை செல்லுபடியாகும் என்று செதல்வாட் கூறியுள்ளார். பாராளுமன்றத்திற்கும் மாநிலச் சட்டமன்றங்கட்கும் இவை வழிகாட்டியாகத் திகழ்கின்றன. திட்டக் குழுவில் இக்கோட்பாடுகளினுடைய செல்வாக்கு வளர்ந்து கொண்டே வருகிறது.

**5.13 அடிப்படை உரிமைகளும் நெறிமுறைக் கோட்பாடுகளும் :**

அரசிலமைப்பு 44வது திருத்தச் சட்டத்திற்கு முன்னர் விதி 341ன்படி சட்டபூர்வமான அதிகாரத்தினாலன்றி எந்த ஒரு நபருடைய

சொத்துரிமையையும் பறிக்க முடியாது. இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் சொத்துரிமையையும் அதை அனுபவிக்கவோ அல்லது விற்கவோ உள்ள உரிமையையும் இதன் மூலம் அரசியலமைப்பு அளித்து பாதுகாத்து வந்தது. ஆனால் பொதுநலம் கருதி அரசாங்கம் இவற்றின் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்கலாம். இருப்பினும் சட்டத்தின் துணையின்றி ஆட்சித் துறையின் ஒரு நடவடிக்கை மூலம் ஒரு நபருடைய சொத்துரிமையைச் சாதாரணமாகப் பறிக்க முடியாது. எனவே இவ்வுரிமையைப் பறிக்க விழையும் எந்த ஒரு சட்டத்தையும் நீதிமன்றம் செல்லாது எனக் கூறலாம். அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பில் 31வது விதியின் கீழ் கொடுக்கப்பட்டிருந்த சொத்துரிமை அரசியலமைப்பின் முதலாவது, நான்காவது, பதினேழாவது, இருபத்தி நான்காவது மற்றும் இருபத்தி ஐந்தாவது திருத்தச் சட்டங்களால் திருத்தி அமைக்கபட்டுள்ளது. மனிதனை மனிதன் சுரண்டுவதை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவற்காகவே அரசாங்கம் சொத்துரிமை மீது சில கட்டுப்பாடுகளைக் கொணர்ந்தது. இதன் விளைவாகத் தான் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம், நிலச் சீர்திருத்தச் சட்டம், நில உச்சவரம்புச் சட்டம் மற்றும் வங்கிகளைத் தேசியமயமாக்கும் சட்டம், மன்னர் மானிய ஒழிப்புச் சட்டம் மற்றும் கிராமியக் கடன்கள் தள்ளி வைப்புச் சட்டங்கள் ஆகியன இயற்றப்பட்டன. ஆனால் கோலக்நாத் வழக்கு மற்றும் வங்கிகள் தேசியமயமாக்கியதை எதிர்த்துத் தொடரப்பட்ட வழக்கு ஆகியவற்றில் இச்சட்டங்கள் அடிப்படை உரிமைகளை மிகவும் பாதிப்பதாகக் கருதி இந்த அடிப்படை உரிமைகளைத் திருத்தி அமைக்கப் பாராளுமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது என்று நீதித்துறை தீர்ப்பு வழங்கியது. இதனை அடுத்து 42வது அரசியலமைப்புத் திருத்தம் கொண்டு வரப்பட்டு 31-C திருத்தி அமைக்கப்பட்டது. இத்திருத்தம் வழிகாட்டு நெறிமுறைக் கோட்பாட்டின் முதன்மைத்துவத்தை நிறுவியதோடு, இக்கோட்பாடுகளின் அடிப்படையில் பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்கள் விதிகள் 14, 19 அல்லது 31ல் கொடுக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைப் பறிப்பதாகவோ அல்லது அவைகளுக்கு முரணானதாக உள்ளதாகவோ சுட்டிக் காட்டி அச்சட்டங்களை செல்லாது என அறிவிக்க நீதி மன்றங்களுக்கு அதிகாரம் கிடையாது என்பதையும் வலியுறுத்தியது.

இத்திருத்தங்களின் விளைவாக குடிமக்களின் சொத்துரிமை ஆட்சித் துறையின் ஏதேச்சதிகார நடவடிக்கைகளினின்றும் பாதுகாக்கப்பட்டதேயொழிய சட்டத் துறையின் பிடியிலிருந்து மீட்கப்படவில்லை. தலைமை நீதிமன்றங்களின் நீதிப்புனராய்வினால் மட்டுமே இவ்வதிகாரத்தை ஓரளவு கட்டுப்படுத்த முடியும். ஆனால் துரதிர்ஷ்டாவசமாக நீதித்துறையின் இந்நீதிப்புனராய்வு அதிகாரம்

அரசியலமைப்பின் தொடக்க காலம் தொட்டு கொஞ்சம் கொஞ்சமாக சுருங்கி வருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மேலும் 44வது அரசியலமைப்புத் திருத்தம் சொத்துரிமையை அடிப்படை உரிமைகளிலிருந்து நீக்கி அதனை ஒரு சாதாரணச் சட்டப்பூர்வ உரிமை ஆக்கியது.

42வது அரசியலமைப்புத் திருத்தம் மேற்கொள்ளப்படும்முன் நெறிமுறைக் கோட்பாடுகளின் விதிகள் 39(b) மற்றும் (c) ஆகியவற்றில் காணப்பட்ட கொள்கைகளை அரசு நடைமுறைப்படுத்துவற்கு விதி 39C வழிவகை செய்திருந்தது. அத்துடன் அவ்வாறு இயற்றப்படும் சட்டங்கள் விதிகள் 14, 19 மற்றும் 31ல் கொடுக்கப்பட்டிருக்கும் அடிப்படை உரிமைகளுக்கு முரண்பாடாக உள்ளன என்ற காரணத்தால் நிராகரிக்கப்படுவதிலிருந்தும் விதி 39(C) பாதுகாத்து வந்தது. மேலும் செல்வங்களும் உற்பத்திக் காரணிகளும் நாட்டின் பொதுநலனுக்குத் தீங்கு விளைவிக்கும் வண்ணம் ஓரிடத்தில் குவிவதைத் தடுக்கும் முறையில் அரசு சட்டங்களை இயற்றி அதன் மூலம் பொருளாதார முறை அமைப்பைக் கட்டுப்படுத்துவதற்கு விதி 39 வழிவகைகள் செய்தது. இவ்வாறு இவ்விரு நெறிமுறைகளை மட்டும் நடைமுறைப்படுத்துவதற்கென்று கொடுக்கபட்டிருந்த சட்டப்பாதுகாப்பு 42வது அரசியல் அமைப்புத் திருத்தத்தின் மூலம் எல்லா நெறிமுறைக் கோட்பாடுகளும் வழங்கப்பட்டது. இதன் மூலம் நம் அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பின் ஒரு பகுதியாக விளங்கும் விதிகள் 14, 19 மற்றும் 31ஐ பாராளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங்களும் சுருங்கிவிடக்கூடும்.

1973ல் நடந்த கேசவானந்த பாரதி வழக்கில் விதி 368ன் கீழ் பாராளுமன்றம் அரசியலமைப்பின் எப்பகுதியையும் திருத்தி அமைக்க அதிகாரம் பெற்றிருப்பினும் அரசியலமைப்பின் அடிப்படை அமைப்பையோ அல்லது அதன் அடிப்படைப் பண்புகளையோ திருத்தி அமைக்க அதற்கு அதிகாரம் கிடையாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியது.

இதுபற்றி N.A. பல்கிவாலா கருத்துத் தெரிவிக்கையில் "கேசவானந்த பாரதி வழக்கில் தலைமை நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பின் பின்னணியில் காணப்படும் அடிப்படைக் கோட்பாடு மிகவும் எளிமையாகவும் ஒத்துக் கொள்ள கூடியதாகவும் உள்ளது" மேலும் பாராளுமன்றமானது நம் அரசியலமைப்பினால்

உருவாக்கப்பட்ட ஒரு அமைப்பே ஆகும். எனவே பாராளுமன்றத்திற்கு அடிப்படை அரசியலமைப்பை அழிக்கும் அதிகாரம் இருக்குமேயானால் அது அரசியலமைப்பினால் உருவாக்கப்பட்ட ஒரு அமைப்பு என்ற நிலை நீக்கி அதனுடைய எசமானராக மாறிவிடக் கூடும் என்று கூறினார். அத்துடன் 42வது திருத்தத்தின் கீழ் விதி 31(C)யினால் நேரக்கூடும் தீய விளைவுகளையும் அவர் சுட்டிக் காட்டினார். அவை பின் வருமாறு,

1. விதி 31(C) நம் அரசியலமைப்பைத் தலைகீழாக மாற்றுகிறது. இவ்விதி சட்டப்பூர்வமாக நடைமுறைப்படுத்த வேண்டிய அடிப்படை உரிமைகளை செயற்படுத்த முடியாத வண்ணம் செய்திருப்பதுடன் இதுவரை குடிமக்களின் அடிப்படை உரிமைகளுக்கெதிராக சட்டபூர்வமாக நடைமுறைப்படுத்தப்பட முடியாமலிருந்த நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயற்படுத்த வழிவகைகள் செய்துள்ளது.

2. அரசியல் நிர்ணய சபை எந்த ஒரு திட்டத்தை நிராகரித்ததோ அதனை இவ்விதி புதுப்பிக்கிறது.

3. அடிப்படை உரிமைகளுக்கும் நெறிமுறைக் கோட்பாடுகளுக்குமிடையே தோற்றுவிக்கப்பட்ட ஓர் ஆற்றல் மிக்க உருவாக்கும் திறன் படைத்த உடன்பாட்டை இவ்விதி அழித்துவிட்டது.

4. நீதித்துறைக்கும் சட்டத்துறைக்குமிடையே உருவாக்கப்பட்ட உடன்பாட்டையும் இவ்விதி குலைக்கிறது. விதிகள் 14 மற்றும் 19 ஆகியவற்றின் பாதுகாப்பிற்காகக் கொடுக்கப்பட்டுள்ள விதிகளை அர்த்தமற்றவையாக்குகிறது.

இந்த வழிகாட்டி நெறிமுறைகள் மிகவும் பரந்தநோக்குடையவை. விதி 31( C ) 42 வது திருத்தச் சட்டத்திற்குப்பின் இவ்விதி கீழ்க்காணுமாறு உள்ளது.

"31வது விதியில் கூறப்பட்டிருப்பது யாதாயிருப்பினும் 4 ஆம் பகுதியில் இடம்பெற்றுள்ள நெறிகாட்டு நியதி ஒன்றையோ அனைத்தையுமோ அடையும் பொருட்டு இயற்றப்படும் சட்டத்தினை அச்சட்டமானது விதி 14, விதி 19, விதி 31 ஆகியவை அளிக்கும் உரிமைகளை மீறுவதாகவோ, பறிப்பதாகவோ எண்ணி, செல்லாது என்று கருதக்கூடாது. மேலும் இத்தகைய நெறிகாட்டு நியதியை நடைமுறைப்படுத்துவதற்காக என்ற அடிப்படையில் எந்த நீதிமன்றத்திலும் எழுப்பப் கூடாது.

ஆயினும் இத்தகைய ஒரு சட்டத்தினை மாநில அரசின் சட்டமன்றம் இயற்றியிருந்தால் அச்சட்டமானது குடியரசுத் தலைவரின் பார்வைக்காக அனுப்பப்பட்டு அவரது இசைவினைப் பெற்றிருந்தாலன்றி இவ்விதி அங்கு பொருந்தாது."

முதன் முதலாக விதி 31C 1971ல் அரசியலமைப்பில் ஏற்றப்பட்டது. இதன் நோக்கம் விதி 39 (b) (c) ஆகியவற்றிலுள்ள நெறிகாட்டு நியதிகளைக் காப்பதாகும். 42வது திருத்தச் சட்டமானது இத்தகைய காப்பினை 4 ஆம் பகுதியிலுள்ள எல்லா நியதிகளுக்கும் எட்டுமாறு செய்தது. இதனால் காப்பினை 4ஆம் பகுதியிலுள்ள எல்லா நியதிகளுக்கும் எட்டுமாறு செய்தது. இதனால் எந்த நியதியையும் நிறைவேற்றுவதற்காக இயற்றப்படும் சட்டத்தினை அது அடிப்படை உரிமைகளைப் பாதிக்கின்றது என்று சொல்லி வழக்காட்றி செல்லாது என்று கூறமுடியாது. ஆனால் 1973இல் கேசவானந்த பாரதி வழக்கில் உச்ச நீதிமன்றம் தனது பெரும்பான்மைத் தீர்ப்பு மூலம் இவ்விதியின் ஒரு பகுதியை எழுப்ப கூடாது என்று கூறி விட்டது. ஏனெனில் இப்பகுதி நீதிமன்றத்துக்கு உள்ள நீதிப்புனராய்வு அதிகாரத்தைக் குறைப்பதாகும் என்றும் பாராளுமன்றத்தின் திருத்த அதிகார வரம்பினை மீறியதாகும் என்று நீதிமன்றம் கருதியது. 41ஆவது திருத்தச் சட்டம் 1976ல் இத்தீர்ப்பினால் ஏற்பட்ட விளைவைக் கருத்தில் கொள்ளவில்லை. ஆகவே இன்றும் உச்சநீதிமன்றமானது விதி 31 (c) -இன் ஒரு பகுதியைப் புறக்கணித்து நெறிகாட்டு நியதச் சட்டங்களை நீதிப்புனராய்வு செய்ய முடியும்.

"முன்னுரையில் செய்யப்பட்ட அரசியலமைப்பின் குறிக்கோள்கள் பெரும்பாலும் அடிப்படை உரிமைகள் மூலமே எய்தப்படுகின்றன். உரிமைகள் தனிமனிதனால் மட்டுமே அனுபவிக்கக் கூடியவை. இவை சுதந்திர மக்களாட்சிச் சமுதாயத்தின் பரந்த உயரிய தேசிய மற்றும் சமூக நலனுக்காக தனி மனிதனுக்கு அளிக்கப்படுகின்றன. ஆகவேதான் நமது அரசியலமைப்பு அடிப்படை உரிகைளுக்கு ஏற்றம் தந்தது" H.M. என்று சீர்வாய் என்பவர் கருத்துத் தெரிவித்துள்ளார்.

குடிமக்களின் அடிப்படை உரிமைகளை மீறிய அரசு நெறிமுறைக் கோட்பாடுகளுக்கு முதன்மைத்துவம் அளிக்கும் வகையில் 42வது அரசியலமைப்புத் திருத்தத்தின் மூலம் விதி 31C யில் கொண்டு வரப்பட்ட மாற்றங்கள் செல்லாது என்று நம் தலைமை நீதிமன்றம் 1980ஆம் வருடம் மே மாதம் தான் வழங்கிய தீர்ப்பு ஒன்றில் அறிவித்தது. இவ்வாறு அரசியலமைபில் மேற்கொள்ளப்பட்ட திருத்தங்கள் அரசியலமைப்பின் அடிப்படைப் பண்புகளைத் தகர்ப்பதாகவும், கேசவானந்த பாரதி வழக்கில் நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பை மீறுவதாகவும் உள்ளதாக நீதிமன்றம் சுட்டிக் காட்டியது. இதன் விளைவாக பாராளுமன்றத்திற்கு நெறிமுறைக் கோட்பாடுகளின் கீழ் சட்டமியற்றும் அதிகாரம் விதிகள் 31 (b) மற்றும் (c) ஆகிய இரு பிரிவுகளுக்கும்

மட்டும்தான் உண்டு எனக் குறைக்கப்பட்டது. அத்துடன் நம் அரசியலமைப்பு அது 42வது அரசியலமைப்புத் திருத்தத்திற்கு முன்பிருந்த உயரிய நிலையைத் திரும்பப் பெற்றது.

தலைமை நீதிமன்றத்தின் இத்தீர்ப்பு நம் அரசியலமைப்பின் வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க அம்சமாகும். ஏனெனில்

1. இது அரசியலமைப்பில் மேற்கொள்ளப்படும் திருத்தங்களை நீதிமன்றம் புனராய்வு செய்ய வழி வகுக்கிறது.

2. பாராளுமன்றத்தின் அரசியலமைப்புத் திருத்த அதிகாரத்தைக் கட்டுப்படுத்துகிறது.

3. நெறிமுறைக் கோட்பாட்டிற்கு மேலாக அடிப்படை உரிமைகளுக்கு அளிக்கப்பட்டிருந்த முன்னுரிமைகளை அவற்றிற்கு மீட்டுத் தருகிறது.

5.14 அடிப்படைக் கடமைகள் :

42வது அரசியலமைப்பு திருத்தத்தின்படி கீழ்க்கண்ட அடிப்படைக் கடமைகள் வழங்கப்பட்டுள்ளன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
6. இந்திய குடிமகனின் அடிப்படை கடமைகளை கூறுக.

முதலில் நமது அரசியலமைப்பு குடிமக்களது கடமைகளைப் பற்றி குறிப்பாக ஒன்றும் கூறவில்லை. ஆனால் 42வது அரசியல் திருத்தச் சட்டம் IV-A என்ற புதிய பாகம் ஒன்றினைச் சேர்த்திருக்கிறது. இது குடிமக்களது கடமைகளைக் கீழ்க்கண்டவாறு விளக்கிக் கூறியிருக்கிறது.

1. அரசியலமைப்பிற்கு கீழ்ப்படிதலும் அரசியலமைப்பின் உயர்ந்த நோக்கங்கள் அதன் நிறுவனங்கள், தேசிய கொடி, தேசிய கீதம் போன்றவற்றிற்கு மரியாதை செலுத்துதலும்.

2. நம்முடைய சுதந்திரப் போராட்டத்திற்கு உணர்ச்சியூட்டிய உயர்ந்த கருத்துக்களை பேணுதலும், பின்பற்றலும்.

3. இந்தியாவின் இறைமை, ஐக்கியம், ஒருமைப்பாடு ஆகியவற்றை நிலைநாட்டலும், பாதுகாத்தலும்.

4. நாட்டைப் பாதுகாத்தலும், தேவைப்படுகின்றபொழுது நாட்டுச் சேவை செய்தலும்.

5. சமயம், மொழி மற்றும் பிராந்தியம், பிரிவுகளினால் உண்டாகின்ற வேற்றுமைகளை மறந்த இந்திய மக்களிடையே ஒரு சுமுகமான சூழ்நிலை மற்றும் உறவாண்மையினை வளர்த்தல் பெண்களது கவுரவத்திற்கு இழுக்கு விளைவிக்கக் கூடிய செயல்களைத் தவிர்த்தல்.

6. சிறப்புமிக்க நம்முடைய கூட்டுக் கலாச்சாரத்தை மதித்தலும், பாதுகாத்தலும்.

7. வனங்கள், ஏரிகள், ஆறுகள் போன்ற இயற்கை வளங்களையும், வனவிலங்குகளையும் பாதுகாத்தலும், பேணுதலும் மற்றும் உயிரினங்கள் மீது இரக்கம் காட்டுதலும்,

8. விஞ்ஞான நோக்கு, மனிதத் தன்மை ஆய்வு மனப்பான்மை மற்றும் சீர்திருத்த எண்ணங்கள் ஆகியவற்றை வளர்த்துக் கொள்ளல்.

9. பொதுச் சொத்தைப் பாதுகாத்தலும், வன்முறையைக் கைவிடுதலும்.

10. அனைத்துத் துறைகளிலும் தனியாக மற்றும் கூட்டாக செய்யக் கூடிய செயல்களில் மேம்பாடு அடைவதற்கு முயற்சிப்பதன் மூலம் நாட்டை நிரந்தரமான ஒரு உன்னத நிலைக்கு உயர்த்துதல் இக்கடமைகளுக்கெதிரான அடிப்படை உரிமைகள் இருக்க முடியாது.

## 5.15 தொகுப்புரை:

அடிப்படை உரிமைகள் அரசைத் தடை செய்யும் தன்மையுடையவை. அரசு மக்கள் உரிமைகளைப் பறிக்கக் கூடாது என்று இவை கூறுகின்றன. ஆனால் நெறிமுறைக் கோட்பாடுகள் அரசின் கடமைகளைக் குறிப்பிடுகின்றன. சில சமூகப் பொருளாதாரக் குறிக்கோள்களை வளர்ப்பது அரசின் கடமையாகும் என்று நெறிமுறைக் கோட்பாடுகள் சொல்கின்றன. அடிப்படை உரிமைகள் என்பவை சில பணிகளைப் புரிவதற்கு அரசாங்கத்திற்கு அளிக்கப்படும் கருத்துரைகளாகும் என்றும் A. கிளெட்ஹில் என்ற ஆசிரியர் கூறுகின்றார்.

## 5.16 முக்கிய வார்த்தைகள்

காமன் வெல்த், இந்திய தேசிய காங்கிரஸ் , சித்திரவதை வாழ்வு உரிமை, சிறுபான்மையினர், மதச் சார்பற்ற,அயர்லாந்து,மொழிவாரி.

## 5.18 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 5.1 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 5.5 ல் அறிக

வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 5.7 ல் அறிக

வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 5.8 ல் அறிக

வினா எண்.5 இந்த வினா விடையை பகுதி எண் 5.9 ல் அறிக

வினா எண்.6 இந்த வினா விடையை பகுதி எண் 5.12 ல் அறிக

வினா எண்.7 இந்த வினா விடையை பகுதி எண் 5.14 ல் அறிக

**5.18 மாதிரி வினாக்கள் :**

1. அரசு நெறிமுறைக் கோட்பாடுகள் எந்த அளவிற்கு செயலுறுத்தப்பட்டுள்ளன என்பதை ஆராய்க.

2. இந்திய அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளை விளக்குக.

3. இந்தியக் குடிமகனின் அடிப்படை கடமைகளை விளக்குக.

**5.19 பரிந்துரை நூல்கள் :**


1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.
2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.
3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.
4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.
5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.
6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

## அலகு - 6

## மரண தண்டனை மற்றும் கொத்தடிமை

**அறிமுகம்:**

மரண தண்டனை என்பது கொடுமையானது, மனிதாபிமானமற்றது, நாகரீகமற்றது, காட்டுமிராண்டித்தனமானது ஆகும். இவ்வளவு மோசமான மரண தண்டனை இன்னும் நடைமுறையில் உள்ளதென்பது வேதனையான ஒன்று. மரண தண்டனை கொடுப்பது பற்றி மாறுபட்ட கருத்துக்கள் சட்ட நிபுணர்களிடமும், அரசியல் அறிஞர்களிடமும் நிலவி வருகின்றது. எனவே மரண தண்டனை அடியோடு நீக்கிவிடலா? மாத அல்லது தொடரப்பட வேண்டுமா? என்ற சர்ச்சை பலகாலமாக நிலவி வருகின்றது. எனவே மரண தண்டனை விதிக்கலாமா? மரண தண்டனை நீக்கி விடலாமா? என்ற கேள்வி இன்று எழுந்துள்ளது. உயிர் வாழும் உரிமை என்ற அடிப்படை உரிமை மரண தண்டனையின் மூலம் மீறப்பட்டு உள்ளது. ஐ.நா. சாசனம் அரசியலமைப்பு ஆகியவற்றின் உத்திரவாதம் மரண தண்டனையில் புறக்கணிக்கப்பட்டுள்ளது. ஆனால் இந்தியக் குற்றவியல் தொகுப்பின்படி, ஒருவர் உயிரை மற்றொருவர் எடுக்கும்போது அவ்வாறு செய்தவரின் தவற்றிற்கு தண்டனை கொடுக்க வேண்டும் என சொல்லப்பட்டுள்ளது. ஏனெனில் எல்லோரும் உயிர் வாழ உரிமை கொண்டவர்கள். இப்படிப்பட்ட நிலையில் ஒருவர் பிறிதொருவரது உயிரை எடுக்கும் போது, அவர் உயிரை எடுப்பது தவறா என்ற கருத்தை சட்டவியலர்களும் பொதுமக்களும் எடுத்துரைக்கின்றனர்.

கொத்தடிமை முறை சமூகத்தின் மிகப் பெரிய பிரச்சனையாக உள்ளது. இப்பிரச்சனை பற்றியும் இப்பாடபகுதியில் ஆராய்ப்படுகிறது.

**நோக்கங்கள் :**

1. மரண தண்டனை பற்றிய உலகளாவிய கருத்துக்களை அறிதல்
2. கொத்தடிமை தோற்றத்ததை காணுதல்
3. கொத்தடிமையை நீக்குவதற்கு எடுக்கப்பட்ட நடவடிக்களை காணுதல்

**வடிவ அமைப்பு**

**உட்கூறுகள்**

6.1 மரண தண்டனை பற்றிய உலகளாவிய கருத்துகள்

6.2 இந்தியாவில் மரண தண்டனை

6.3 கொத்தடிமைத் தோற்றம்

6.4 இந்தியாவில் கொத்தடிமை முறை
6.5 கொத்தடிமை நீக்க நடவடிக்கைகள்
6.6 தொகுப்புரை
6.7 முக்கிய குறிப்பு
6.8 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள்
6.9 மாதிரி வினாக்கள்
6.10 பரிந்துரை நூல்கள்

**6.1 மரண தண்டனைய பற்றிய உலகளாவிய கருத்துக்கள்:**

மரண தண்டனையை நீக்குவதில் பன்னாட்டளவில் ஆதரவு உள்ளது. ஒவ்வொருவரும் உயிர் வாழ உரிமைகளை அனுபவிக்க பாதுகாப்பாக இருப்பதற்கு உரிமை கொண்டவர்கள். எவரும் கொடுமைக்கோ, சித்திரவதைக்கோ, மனிதாபிமானமற்ற வகையில் நடத்தப்படவோ தண்டனை பெறவோ கூடாது என்று பன்னாட்டு சாசனம் கூறுகின்றது. பன்னாட்டு சிவில் மற்றும் அரசியல் உரிமைகள் (1966) சாசனம், மரண தண்டனை பெற்றோர் தங்களுக்கு மன்னிப்புக் கோரவும், தண்டனைக் காலத்தைக் குறைக்கவும், விடுதலை பெறவும் வேண்டுதல் அல்லது கோரிக்கை விடுத்தலை கவனமாக பரிசீலிக்க வேண்டும் என்கின்றது. அதே, நேரத்தில் கருவுற்ற பெண்கள், 18 வயதிற்குட்பட்ட இளைஞர்கள், குற்றங்களில் ஈடுபட்டால் அவர்களுக்கு மரண தண்டனை விதிக்கக் கூடாது எனவும் இச்சாசனம் கூறுகின்றது.

உலக அளவில் மரண தண்டனை விதிக்கக் கூடாது என்ற கருத்து நிலவுகின்றது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் பர்மன் வழக்கு (Furman's Case) என்ற வழக்கில் மரண தண்டனை விதித்தது அரசியலமைப்பிற்குப் புறம்பானது என நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது. அரசியலமைப்பின் 8-வது மற்றும் 14வது அரசியலமைப்பு பிரிவிற்கு எதிரானது மரண தண்டனை என்று வழக்கு போடப்பட்டுள்ளது. கொடூர, மாறுபட்ட தண்டனைகள் மனிதாபிமானமற்ற, நாகரீகமற்ற செயல்கள் இவை அரசியலமைப்பிற்குப் புறம்பானவை என 8வது அரசியலமைப்புத் திருத்தத்தின்போது வெளியிடப்பட்டது. அவ்வாறு மரண தண்டனை விதிக்கப்பட்டாலும், தண்டனை பெற்றோர்கள், அவர்களும் உயிர்வாழும் மனிதர்கள் என்ற வகையில் நடத்தப்பட வேண்டுமே தவிர, கொடூரமான முறையில் சித்திரவை செய்யக் கூடாது. உலகில் பல நாடுகள் தூக்குத் தண்டனைக்கு எதிராக உள்ளன. இந்தியா போன்று 76 நாடுகள் இன்னும் மரண தண்டனையை

வைத்துக் கொண்டுள்ளன. 120 நாடுகள் சட்டபூர்வமாக மரண தண்டனையை நீக்கி விட்டன. 85 நாடுகளில் எப்படிப்பட்ட குற்றமாயினும், எல்லாக் குற்றங்களிலிருந்து மரண தண்டனை நீக்கப்பட்டு விட்டது. இராணுவச் சட்டத்தின்படியும், இராஜ துரோக நடவடிக்கைகளுக்கு மட்டும் 11 நாடுகள் மரண தண்டனை விதிக்கின்றன. இவை தவிர பல குற்றங்களுக்கு மரண தண்டனை விதிப்பது கிடையாது. 24 நாடுகள் மரண தண்டனை விதிக்கும் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. ஆனால் அதனால் பயன்படுத்தியது பல காலங்களுக்கு முன்னர் என்ற நிலையில் உள்ளது. இந்நாடுகள் மரண தண்டனையை நீக்க வேண்டும் என்ற எண்ணத்தில் உள்ள நாடுகளாகும்.

**மரண தண்டனை மற்றும் பன்னாட்டு நிறுவனமும்:**

பன்னாட்டு பொது மன்னிப்பு நிறுவனம் மரண தண்டனை வழங்குதலை முழுமையாக எதிர்த்துள்ளது. எந்த வழக்குகளிலும் மரண தண்டனை கூடாது என்கிறது. ஏனெனில், இது உயிர் வாழும் உரிமையை மீறிய செயல். கொடூரமான, மனிதாபிமானமற்ற தண்டனை என ஐ.நா. மனித உரிமைகள் சாசனம் கண்டித்துள்ளது. மரண தண்டனை ஏதேச்சதிகாரம் கொண்டதென்றும், நீதிக்கு எதிராதென்றும் கூறுகின்றது. ஆகவே எப்பேர்பட்ட குற்றங்கள் செய்தாலும் கூட, மிக மோசமான குற்றம் செய்தாலும் கூட, மரண தண்டனை வழங்கக் கூடாது என்ற கருத்து நிலவுகிறது. மரண தண்டனையால் பாதிக்கப்பட்டோர்கள் விபரத்தை ஆராய்வோமேயானால் படிப்பறிவில்லாத ஏழைகள் சமுதாயத்தின் கீழ்மட்டத்தில் இருக்கும் மக்கள்தான் பாதிக்கப்பட்டுள்ளனர் எனத் தெரிகின்றது. மரண தண்டனை என்பது தவிர்க்க முடியாத ஒன்றாகயிருந்தால் மரண தண்டனை தவறுதலாக நிறைவேற்றப்பட்டால் அதற்குப் பரிகாரம் காண்பது இயலாத ஒன்றாகும். எல்லாத் தண்டனைகளும் மனிதன் திருந்துவதற்காக கொடுக்கக் கூடியதுதான். மரண தண்டனை கொடுத்தால் தான் திருந்துவார்கள் என்று சொல்லமுடியாது. மரண தண்டனை விதிக்கப்பட்டு அதனை நிறைவேற்றாமல் காலங்கடத்துவது மரண தண்டனையைக் காட்டிலும் மிகப் பெரிய தண்டனையாகும். ஏனெனில் கொடூர மனிதாபிமானற்ற இந்தத் மக்களிடம் வெறுப்பைத்தான் சம்பாதிக்கும். இந்தியாவில் இது மாதிரியாக மரண தண்டனை விதிக்கபட்டு நிறைவேற்றப்படாத வழக்குகள் பல உள்ளன. இதனால் மரண தண்டனை பெற்றவர் மட்டுமல்ல. அவரைச் சார்ந்தவர்களும், நெருங்கிய நண்பர்களும் தாங்கொண்ணாத் துயரத்திற்கு ஆட்படுகின்றனர்.

## 6.2 இந்தியாவில் மரண தண்டனை :

மரண தண்டனை விதிப்பது குற்றங்களின் இயல்பை பொறுத்ததாகும். பெரும்பாலும், அபூர்வமாக எப்போதாவதுதான் மரண தண்டனை விதிக்கப்படுகின்றது. நீதிபதிகள் ஆழமாக ஆராய்ந்து அவசியமானபோது மட்டும்தான் மரண தண்டனை விதிக்கின்றனர். 1983ம் ஆண்டு மாச்சிசிங் மற்றும் பஞ்சாப் மாநில வழக்கில் மரண தண்டனை அபூர்வத்திலும் அபூர்வமாகத்தான் கொடுக்கப்படுகின்றதென வெளியிட்டது. மரண தண்டனை வழங்க தெளிவாக வழிமுறைகளும் இன்னும் வகுக்கப்படவில்லை. எனவே, நீதிபதிகளின் தனிப்பட்ட விளக்கங்களின் வாயிலாகவே மரண தண்டனை விதிக்கப்படுகின்றது.

தனஞ்ஜெய் சட்டர்ஜி என்பவருக்கு பள்ளிப் பெண்ணை கற்பழித்த குற்றச் சாட்டிற்காக 1990ம் ஆண்டு மரண தண்டனை விதிக்கப்பட்டது. இது 14 ஆண்டுகளுக்குப் பின்னர் 2004 ஆகஸ்ட் 14ம் தேதி நிறைவேற்றப்பட்டது. இந்திய அரசாங்கம் மரண தண்டணைக்கு எதிராகக் குரல் கொடுக்கின்றது. போதை மாத்திரை வழக்கில் இந்தியக் குடிமகன் ஒருவருக்கு ஆகஸ்ட் 2004ல் மரண தண்டனையை இந்தோனேசியா நீதிமன்றம் வழங்கியதற்கு கருணை காட்ட வேண்டுமென இந்திய அரசாங்கம் கோரிக்கை விடுத்தது. இந்தியாவில் எத்தனை பேர்கள் மரண தண்டனை பெற்றார்கள் என்ற விபரம் இல்லை. மக்கள் கூட்டுறவு மக்களாட்சி இயக்கம் (People's Union for Democratic Right) அரசாங்கத்திடம் இது பற்றிய விபரத்தைக் கேட்டது. இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் 55 மரண தண்டனைகள் விதிக்கப்பட்டதாக அரசாங்கம் அறிக்கையை வெளியிட்டது. ஆனால் இந்தியச் சட்ட ஆணையம் 1967ம் ஆண்டு வெளியிட்ட அறிக்கையில் 1953 முடிய 1963 ஆகிய பத்தாண்டு காலத்தில் 1422 மரண தண்டனைகள் விதிக்கப்பட்டதாக செய்தியை வெளியிட்டுள்ளது. எனவே மரண தண்டனை வழக்குகள் விபரம் தெளிவாகத் தெரியவில்லை. பொதுமக்கள் நன்மையைக் கருதி இதுமாதிரி விபரங்கள் அவசியமில்லை என்ற கருத்தும் உள்ளது. ஆனால் சிவில் உரிமை இயக்கங்களும், பன்னாட்டு உரிமை சங்கங்களும் மரண தண்டனைகள் விபரம் வெளியிடப்பட வேண்டும் என வலியுறுத்தி வருகின்றன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. மரண தண்டனை ஒழிப்பு என்றால் என்ன?

மரண தண்டனை ஒழிப்பது குறித்து பாராளுமன்றத்தில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தனர். அத்தீர்மானத்தை சட்ட ஆணையத்தின் பரிசீலனைக்கு அனுப்பி வைத்தனர். J.L. கபூர் என்பார் அப்போது சட்ட ஆணையத்தின் தலைவராக இருந்தார்.

இந்த ஆணையம் பரிசீலனை செய்து இந்தியாவில் மரண தண்டனையை நீக்குவதால் பல பெரிய பிரச்சிசனைகளை சந்திக்க வேண்டியிருக்குமென எச்சரித்தது. மக்களின் பல்வேறு சமூகப் பிரிவுகள், பழக்க வழக்கங்கள், கல்வி மற்றும் அறநெறியில் சமத்துவமின்மை, நாட்டின் பரந்த எல்லை, பல்வேறு கலாச்சாரம் ஆகியவற்றால் சட்டம் ஒழுங்கைப் பராமரிப்பதே பெரிய பிரச்சினையாக உள்ளது. மரண தண்டனையை நீக்கினால் இன்னும் பல சிக்கல்களுக்கு உள்ளாக நேரிடும். எனவே, நீதிமன்றம்தான் மரணதண்டனை தேவைப்பட்டால், அதற்குரிய காரணங்களை விளக்கி வழங்கலாமே தவிர மரண தண்டனையை நீக்க முடியாது என்றுரைத்தது. மரண தண்டனை விதிக்க 13 ஆண்டுகள் கழித்து அதனை நிறைவேற்றுவதே பெரிய தண்டனை, இது மாதிரியாக நடைபெறாது பார்த்ததுகொள்ள வேண்டும். கால இடைவெளியினால் சில சமயம் மரண தண்டனை பெற்றவர் கருணையால் தண்டனைக் குறைப்பிற்கும் உள்ளாகலாம்.

பயங்கரவாதத்தை ஒடுக்குவதற்காக சில சமயங்களில் பயங்கரவாதத் தடுப்புச் சட்டம் (TADA) போன்ற சட்டங்கள் கொண்டு வரலாம். காவல் துறைக்கு அதிக அளவு அதிகாரங்கள் கொடுப்பதால் விசாரனை இல்லாமலே பலர் சிறையில் அடைக்கப்பட்டு உள்ளனர். இதனை 1992ம் ஆண்டில் பீகார் முதல்வரே ஏற்றுக் கொண்டுள்ளார். எனவே, அப்பாவிகள் தொடர்பில்லாதவர்கள் வேண்டுமென்றே பழிவாங்கும் வகையில் விசாரணையில்லாது சிறையில் அடைக்கப்படுவதை பன்னாட்டுச் சட்டங்கள் அங்கீகரிப்பதில்லை.

### 6.3 கொத்தடிமைத் தோற்றம்:

கொத்தடிமை முறை என்பது சமூகத்தின் மிகப் பெரிய பிரச்சினையாக உள்ளது. பொருளாதாரத்தில் பாதிக்கப்பட்ட மக்கள் உதவியற்றோர், நலிவுற்ற மக்கள் ஆகியோர் கொத்தடிமைகளாக மாற்றப்படுகின்றனர். சமூகம் ஏற்றத்தாழ்வு நிறைந்த காரணத்தால் ஏற்பட்ட விளைவுதான் இது. ஆதிக்கமுற்றறோர்களின் அத்துமீறல்களால் உயர்ந்தோர், உழைப்போர் என்ற நிலை பின்னாளில் உயர்ந்தோர், கொத்தடிமை என்று சமூகம் மாறியது. தேசியத் தொழிலாளர் நல வாரியம் கொத்தடிமை என்பதை பரம்பரைக் கொத்தடிமை என்பதையும், கடன் பெற்றதை திரும்பச் செலுத்தும் காலம் வரையில் கொத்தடிமையாக இருந்து அவருக்குப் பின்னர் அவரது மகனும் கொத்தடிமைகளாக இருப்பதை பரம்பரை கொத்தடிமை என்று

வரையறுத்துள்ளது. கொத்தடிமை என்பது ஒரு சமூக ஒப்பந்தம். இதில் கடன்கொடுத்தவரும், கடன் பெற்றவரும் ஒப்பந்தம் செய்து கொள்வர். அதன்படி கடன் பெற்றோர் கடனை அடைக்கும் வரையில் வட்டியாகவோ அல்லது கடன் தொகையை வரையறுத்துள்ள காலகட்டதிற்குள் கொடுக்கும் வரையிலோ, கடன் கொடுத்தோருக்கு கொத்தடிமையாக உழைக்க வேண்டும் என்று இந்திய சமூகவியல் பள்ளி வரையறை செய்துள்ளது. எனவே, கொத்தடிமையில் இரண்டு முக்கிய அம்சங்கள் உள்ளன. ஒன்று கடன், மற்றொன்று கட்டாய உழைப்பு, கடனுக்காக கடன்பெற்றோரும் அவரது குடும்பமும் கடனை அடைக்கும் வரையில் கொத்தடிமைகளாக இருக்க வேண்டும் என்று தேசிய விவசாய நல வாரியம் விளக்கம் அளித்துள்ளது.

பழங்காலத்திலிருந்து கொத்தடிமை முறை பழக்கத்தில் இருந்து வந்துள்ளது. கிரேக்க, உரோமானிய நாடுகளில் அடிமை முறை இருந்துள்ளது. இந்தியாவிலும் நடைமுறையில் சுதந்திரத்திற்கு பின்னரும் இருப்பது வேதனை, வறுமை, நிலச்சுவான்தார்களின் பேராசை, வட்டிக்குப் பணம் கொடுப்போர் ஆகியயோர்களின் விளைவாக உருவானதுதான் இந்த கொத்தடிமை முறை. அடிமைகள் கொடூரமாகவும், தவறுதலாகவும் நடத்துவது மனிதாபிமானத்திற்கே எதிரானது. மனித அந்தஸ்து கொடுக்காது. விலங்குகள் போல் நடத்தப்பட்டனர் அடிமைகள் இந்த அடிமைகள் என்பவர்கள் ஒப்பந்தங்கள் மூலம் கட்டாயப்படுத்தி வேலை பெறுவதற்கு வழி செய்ததால், கொத்தடிமை முறை நிலையாயிற்று. ஏனெனில், அனைத்து அடிமைகளும் ஒப்பந்தங்களின் கீழ் வேலை செய்ய வேண்டும். சுதந்திரம், அமைதி, வசதி என்ற வார்த்தைகளை அறியாதவர்கள் அடிமைகள் இங்கிலாந்தில் அடிமைகள் பொருட்கள் போல் திறந்த வெளியில் ஏலம் விடப்பட்டனர். நீக்ரோக்கள்தான் பெரும்பாலும் அடிமைகளாக ஏலத்தில் விற்கப்பட்டனர். அமெரிக்கா சுதந்திரம் பெற்றபொழுது அடிமை முறை தவறானது என்று எண்ணினர். எனவே, அடிமை முறையைத் தடை செய்ய முயற்சித்தனர். வட அமெரிக்காவில் அடிமை முறையை அமெரிக்கா முழுவதும் ஒழிக்க வேண்டும் என்று போராட்டமே நடத்த ஆரம்பித்தனர். இவற்றின் விளைவாக ஆபிரகாம் லிங்கனால் அடிமை முறை ஒழிக்கப்பட்டது.

## 6.4 இந்தியாவில் கொத்தடிமை முறை :

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. இந்தியா கொத்தடிமை முறை பற்றி கூறுக.

இந்தியாவில் கொத்தடிமை முறை பலகாலமாக இருந்து வந்துள்ளது. அடிமை, கட்டாய வேலை, ஒப்பந்தக் கொத்தடிமை, உதவியாளர்கள், சுரண்டல் தொழிலாளர் எனப் பலபெயர்களில் சிந்து சமவெளி நாகரீகம் தொடங்கிய காலத்திலிருந்து இருந்து வந்துள்ளது. இந்தியாவிற்கு ஆரியர்கள் வந்தபின்னர், சாதி முறை உருவாகத் தொடங்கி நிலைத்து விட்டது. சமூகத்தின் கீழ்மட்டத்திலுள்ள ஆரியர்கள், சமூகப்படி நிலையில் கடைசியில் இருந்தவர்கள் இவர்கள்தான் அடிமைகள், தீண்டத்தகாதவர்கள் என அழைக்கப்பட்டு பல தொந்தரவுகளுக்கு ஆளானார்கள். புத்தர் காலத்திலும் அடிமை முறை இருந்ததென்பதை ஜாதகக் கதைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ள முடிகின்றது. கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்திலும் சில மனிதர்கள் அடிமைகளாக உள்ளனர். இவர்கள் பிறப்பாலோ அல்லது தொழில் வழியாகவோ உருவானவர்கள் என்று அடிமை முறை இருந்ததைத் தெரிவிக்கின்றார் கௌடில்யர். அந்தக் காலத்திலும் கட்டாயப்படுத்தி வேலை செய்ய வைக்கும் கட்டாயத் தொழிலாளர்கள் இருந்ததென்பது தெரிகின்றது. தென்னிந்தியாவில் சோழர் காலத்தில் வெட்டியான் என்று அழைக்கப்படுவோர் கட்டாயப்படுத்தி வேலை வாங்கும் தொழிலாளர் வகையில் சேர்க்கபட்டுள்ளனர். மொகலாயர் காலத்தில் இந்த அடிமைகளின் எண்ணிக்கை மிகவும் அதிகரிக்கப்பட்டு வந்துள்ளது. இதனால் அக்பர் இந்த முறையை ஒழிக்கப் பெரும் முயற்சி செய்துள்ளார். ஆயினும் அதில் வெற்றி பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

ஆங்கிலேயர் காலத்தில் அடிமைகள் ஒழிப்புச் சட்டம் ஒன்று 1843ம் ஆண்டு இயற்றப்பட்டது. இதனால் கட்டாயத் தொழிலாளர்கள் உருவானார்கள். இவர்களை 1960ம் ஆண்டு இந்தியக் குற்றத் தண்டனைச் சட்டம் தடை செய்தது. இந்த இரு சட்டங்களின் குறைபாடுகளை வைத்து அடிமையும், கட்டாயத் தொழிலாளர் ஆகியோர்கள் இல்லாது புதிதாகக் கொத்தடிமை முறை ஒன்று உருவ்வானது. இக்கொத்தடிமைகள் ஒவ்வொரு மாநிலத்திலும் வித்தியாசமான பெயர்களோடு அழைக்கப்பட்டனர். தமிழகத்தில் வேலைக்காரர்கள் என்றும், கேரளாவில் செருமர் (Cherumar) என்றும், ஒரிஸ்ஸாவில் ஹிரயோஸ்கள் (Halios) என்றும், ஆந்திரப் பிரதேசத்தில் ஜஸ்சிகுலா (Jassigual) என்றும், குஜராத்தில் ஹாலி (Hali)

என்றும், கர்நாடகத்தில் ஜீத்தா (Jeetha) என்றும் அழைக்கப்பட்டனர். இவர்கள் அனைவரும் ஏழைகள், தாழ்த்தப்பட்டோர்கள் மற்றும் மலைவாழ் பிரிவினர்கள் ஆவார்கள்.

இந்தியாவில் ஜமீன்தாரி முறை ஒழிக்கப்பட்டதால் கொத்தடிமைகளின் எண்ணிக்கையும் ஒருவகையில் குறையலாயிற்று. தேசிய தாழ்த்தப்பட்டோர் மற்றும் மலைவாழ் பிரிவினர்களின் நலவாரியம் தனது ஆண்டறிக்கைகளில் கொத்தடிமை முறையைப் பற்றி மிகவும் விரிவாக வெளியிட்டு வருகின்றது. தேசியத் தொழிலாளர்கள் நல நிறுவனம் 1978ல் 13 இலட்சம் கொத்தடிமைகள் இருந்துள்ளதாக அறிக்கை வெளியிட்டுள்ளது. மொத்தத்தில் மாநிலங்களில் பொதுவாக கொத்தடிமைகள் இருப்பதாக செய்திகள் இருந்தாலும் இவற்றை ஒழிக்க மாநில அரசாங்கங்கள் தீவிர நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றன. கொத்தடிமைகளும், சாதாரணத் தொழிலாளர்களும் வித்தியாசமின்றி பணிபுரிவதால் கொத்தடிமை, என்று கண்டுகொள்ள முடியாத அளவில் உள்ளது. ஆகவேதான் வறுமை, வேலையின்மை காரணமாகத் தொழிலாளர்கள் தங்களது உண்மை நிலையை வெளியில் சொல்ல அஞ்சுகின்றனர். 3000க்கும் மேற்பட்ட கொத்தடிமைகள் துன்புறுத்தலுக்கு ஆளாகியுள்ளனர் என ஹிந்துஸ்தான் டைம்ஸ் நாளேடு 1991ல் வெளியிட்டது. இது மாதிரியான நேரத்திற்கு நேரம் நாளேடுகள் பல மாநிலங்களில் கொத்தடிமைகளை வெளியிட்டு வருகின்றன.

ஒவ்வொரு மனிதனும் உயிர் வாழும் அந்தஸ்துடன் உரிமை கொண்டவர்கள் என்பதைப் பலரும் மதிக்காத காரணத்தால்தான் கொத்தடிமை முறை இன்னும் நடைமுறையில் உள்ளது. இந்திய அரசியலமைப்பின் வழிகாட்டு நெறிக் கொள்கைளை முழுமையாகச் செயல்படுத்தினால், தனிநபர்களின் அடிப்படை உரிமைகளைக் காக்க முடியும். சுதந்திரம் பெற்று பல ஆண்டுகளாகியும், இன்னும் கொத்தடிமை முறை பல தொழில்களில் இருப்பது மனிதாபிமான செயல்ல. வேளாண்மை, தொழிற்சாலைகள், கல் குவாரிகள், செங்கல் சூளைகள், கட்டிடத் தொழில், தீப்பெட்டித் தொழில், கைத்தறித் தொழில், பனியன் தொழிற்சாலைகள், சுரங்கம், உணவகங்கள், கம்பளத் தொழில் மற்றும் வைரம் தீட்டும் தொழில்கள் முதலான அனைத்துத் தொழில்களிலும் கொத்தடிமைகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றனர்.

கொத்தடிமைகள் அதிக அளவில் விவசாயம் மற்றும் அதன் சார்ந்த தொழில்களிலும் அதிகமாக உள்ளனர். 2617 இலட்சம் கொத்தடிமைகள் விவசாயத்

தொழிலில் இருப்பதாக காந்திய அமைதி நிறுவனம் மற்றும் தேசிய தொழிலாளர் நிறுவனம் 1978ல் வெளியிட்டது. இவற்றில் உத்திரப் பிரதேசத்தில் அதிகமாகவும், அதற்கு அடுத்ததாக மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா, ஆந்திரப் பிரதேசம், தமிழ்நாடு, கர்நாடகா, குஜராத், பீகார், மாகாராஷ்ட்ரா, இராஜஸ்தான் மாநிலங்கள் ஆகியன வரிசையாக இடம் பெறுகின்றன. பெரும்பாலான கொத்தடிமைகளில் ஏறத்தாழ 86.6 விழுக்காட்டினர் தாழ்த்தப்பட்ட பழங்குடியினர் பிரிவுகளைச் சார்ந்தவர்களாவர். இவர்களில் வயது 20 நிரம்பியோர்களின் எண்ணிக்கை 25 விழுக்காடு ஆகும். எனவே இளைஞர்கள் அதிகமாக இம்முறையில் பாதிக்கப்பட்டுள்ளனர். ஒரு குடும்பத்தில் ஒன்றிற்கு மேற்பட்டோர் 30 விழுக்காடு உள்ளனர். சில சமயங்களில் கடன் பெறாமலேயே கொத்தடிமைகளாக்கப்பட்டுள்ளனர். கொத்தடிமைகள் விழுக்காட்டு அடிப்படையில் குறைந்தபட்சம் 6 ஆண்டுகள் கொத்தடிமைகளாக வேலை செய்கின்றனர். பத்தாண்டுகளுக்கு மேலாக கொத்தடிமைகளாக இருப்போர் எண்ணிக்கை உத்திரப் பிரதேசம், மகாராஷ்ட்ராவில் அதிகம். ஆந்திரப்பிரதேசம், குஜராத், ஒரிஸ்ஸா ஆகிய மாநிலங்களில் மூன்று முதல் நான்காண்டுகள் காலம் உள்ளதாக இருக்கின்றது. குடும்பச் செலவுக்காகக் கடன் வாங்கிய கொத்தடிமைகள் 53 விழுக்காடுகள் ஆவர். கடன் கொடுத்தவர்கள் பெரும்பாலும் உயர்வகுப்பு இந்துக்கள் 45 விழுக்காடு, 15 விழுக்காடு பிற்படுத்தப்பட்டோர், 15 விழுக்காடு தாழ்த்தப்பட்டோர், 13 விழுக்காடு மலைவாழ் பிரிவினர் ஆகிய வரிசையில் கடன் கொடுத்தவர்கள் இரண்டு முதல் 5 கொத்தடிமைகளை வைத்திருப்போர் 51 விழுக்காட்டினர். 5.5 விழுக்காட்டினர் 6 முதல் 10 கொத்தடிமைகளை வைத்துள்ளனர். 40 விழுக்காட்டினர் ஒரு கொத்தடிமையை வைத்துள்ளதாக கணக்கெடுப்புகள் கூறுகின்றன. ஆனாலும் கொத்தடிமை வைத்திருப்பது தண்டனைக்குரிய குற்றமாகக் கருதி, கடும் தண்டனையை அரசாங்கம் விதித்து செயல்படுத்தி வருகின்றது.

### 6.5 கொத்தடிமை நீக்க நடவடிக்கைகள் :

மனிதாபிமானமற்ற, காட்டுமிராண்டித்தனமான கொத்தடிமை முறையை நீக்குவதற்கு பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு வந்த பின்னர் இம்முறையை உடனடியாக ஒழிக்க முயற்சி மேற்கொண்டனர். பன்னாட்டு அளவில் பல மாநாடுகள் கொத்தடிமையை நீக்க முயற்சிகள் மேற்கொண்டன. 1930ம் ஆண்டில் கூட்டப்பட்ட கட்டாயத்

தொழிலாளர் மாநாடு 1948ல் பிரகடனம் செய்யப்பட்ட ஐ.நா. மனித உரிமைகள் மகாசாசனம், அடிமை ஒழிப்பு மாநாடு, அடிமை வியாபாரத் தடை மற்றும் பிற சில மாநாடுகள் குறிப்பிடத் தக்கவையாகும். 1957ல் கூட்டப்பட்ட கட்டாயத் தொழிலாளர் நீக்க மாநாடு போன்றவை கொத்தடிமையை உலகமெங்கும் நீக்குவதற்கு வழிவகை செய்த ஒன்றாகும். இந்திய அரசியலமைப்பின் பிரிவு 23 கொத்தடிமையை ஒழிக்கக் கூடிய பிரிவாகும். அரசியலமைப்பின் வழி, கொத்தடிமை முறையை நீக்குவதற்கு மாநில அரசாங்கங்கள் பல சட்டங்களை இயற்றியுள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்க சில சட்டங்களாவன. ஆந்திரப் பிரதேச வட்டிக்கு விடுவோர் ஒழுங்குபடுத்தும் சட்டம் 1964, அஸ்ஸாம் கிராமப்புற கடன் நிவாரணச் சட்டம் 1975, ஒரிஸ்ஸா தாதன் தொழிலாளர் கட்டுப்பாடு, ஒழுங்குமுறைச் சட்டம் 1975 போன்றவையும் தமிழகத்தில் 2002 அதிக வட்டிக்கு விடுவதைத் தடை செய்யும் சட்டம் ஆகியனவாகும். இந்தியக் குற்றத் தண்டனை தொகுப்பு (பிரிவு 371)ன்படி, ஒருவரது விருப்பம் இன்றி அவரைக் கட்டாயப்படுத்தி தொழிலில் ஈடுபடுத்தப்பட்டால் அது சட்டத்திற்குப் புறம்பானது. அவ்வாறு செய்யப் பணிக்கும் நபருக்கு அபராதமும், சிறைத் தண்டனையும் குற்றத்திற்கேற்ப அபராதமும் சிறைத் தண்டனையும் வழங்க வழிவகை செய்துள்ளது.

இந்தியா முழுவதும் கொத்தடிமை முறையை நீக்கத் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றில் மிகவும் கடுமையான தீவிர நடவடிக்கை 1975ம் ஆண்டில் வெளியிடப்பட்ட மத்திய அரசின் 20 அம்சத் திட்டமாகும். கொத்தடிமை முறை காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கை. எனவே அது ஒழிக்கப்பட வேண்டும். கொத்தடிமை தொடர்பான ஒப்பந்தங்கள் மற்றும் இது தொடர்பான நடவடிக்கைகள் அனைத்தும் சட்ட விரோதமானவை என அறிவிக்கப்பட்டது. 1975ம் ஆண்டு அக்டோபர் 4ம் நாள் கொத்தடிமை நீக்க அவசரச் சட்டம் பிரகடனம் செய்யப்பட்டது. பின் 1976ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2ம் நாள் கொத்தடிமை நீக்கச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. பின்னர் 1986ம் ஆண்டின் 20 அம்சத் திருத்த செயல்திட்டத்தின்படி, கொத்தடிமை முறையை நீக்கும் சட்டத்தை முழுமையாகச் செயல்படுத்துவது. கொத்தடிமை முறையை நீக்க அரசு சார்பில்லா நிறுவனங்களின் ஈடுபாடுகள் ஆகியவற்றிற்கு முழுமையான ஆதரவை நல்கியது.

கொத்தடிமை நீக்க முறையில் முதலாவதாக கொத்தடிமைகள் இருப்பதைக் கண்டுபிடித்தல், இரண்டாவதாக, அவர்களை விடுதலை செய்தல், மூன்றாவதாக கொத்தடிமை வைத்தோர்மீது உரிய நடவடிக்கை எடுத்தல், நான்காவதாக மாவட்ட, வட்ட அளவில் விழிப்புணர்வுக் குழுக்களை ஏற்படுத்தி தொடர்ந்து சில சட்டங்களை

நடத்துதல், ஐந்தாவதாக, நீதிமன்ற நீதிபதிகளுக்கு கொத்தடிமை நீக்கச் சட்டத்தின்கீழ் உரிய அதிகாரங்களை வழங்குதல், ஆறாவதாக, பணியிடங்களில் முறையான பதிவேடுகளைப் பராமரித்தல் ஆகிய ஆறு செயல்கள் உள்ளடங்குகின்றன. கொத்தடிமைகளைக் கண்டுபிடித்து அவர்களை விடுவிப்பது மற்றும் அவர்களுக்கு வேண்டிய சீரமைப்பு அல்லது புனரமைப்புப் பணிகள்செய்வது மாநில அரசாங்கங்களின் பொறுப்பாக சட்டத்தில் (1976) வரையறுக்கப்பட்டுள்ளது. சில மாநிலங்களில் கொத்தடிமைகள் இருப்பதால், அவற்றை நீக்க அந்தந்த அரசாங்கங்கள் கடுமையாக உழைத்து வருகின்றன.

கொத்தடிமைகளின் மறுவாழ்விற்காக மத்திய அரசாங்கத்தின் தொழிலாளர் துறை ஒரு புதிய திட்டத்தை 1978ம் ஆண்டு அறிவித்தது. இது முழுமையான மத்திய அரசாங்கத் திட்டம். இத்திட்டத்தின்படி மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் சேர்ந்து சமமாக நிதி வழங்கி கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு உதவிகள் செய்ய வேண்டும். இதன்படி ஒவ்வொரு கொத்தடிமைக்கும் வழங்கும் நிதியின் அளவு வரையறுக்கப்பட்டது. 1986ம் ஆண்டு ஜனவரி மாதம் கடைசி வரையிலும், ஒவ்வொரு கொத்தடிமைக்கும் 4000 ரூபாய் உதவி வழங்கப்பட்டது. இது 1986ம் ஆண்டு பிப்ரவரியில் 6250ஆக உயர்த்தப்பட்டது. இத்திட்டம் முழுமையாக நிதி வழங்கிய, மறுவாழ்வு உதவி செய்யக் கூடியது. கால்நடை வளர்த்தல், சிறிய தொழில் செய்தல், நிலம் வழங்கல் போன்ற செயல்களுக்காகவும், கொத்தடிமைகளின் திறமைக்கேற்ப தகுதிகளுக்கொப்ப உதவிகளை மாநில அரசாங்கம் செய்ய வேண்டும். விவசாயம் தொடர்பான உழவுச் சாதனங்கள், காளை மாடுகள், விதைகள், உரங்கள் ஆகியன நிலம் தொடர்பான உதவிகள், கால்நடை வளர்த்தல், கறவை மாடுகள் போன்றவை சிறிய தொழிலுக்குரிய கச்சாப் பொருட்கள், முதலீடுகள், கருவிகள் போன்றவை வழங்குதல், கொத்தடிமைகள் முறையாக தங்களது தகுதிக்கேற்ப, திறமைக்கேற்ப மறுவாழ்வு பெறுவர்.

கொத்தடிமைகளின் மறுவாழ்வினை சீராக்கும் வகையில் செழுமைப்படுத்த விரைவான நடவடிக்கைகள் தேவை என்பதை அரசாங்கம் உணர்ந்தது. இச்செயல்கள் அனைத்தையும் மாநில அரசாங்கம், தனது நேரடிக் கண்காணிப்பின்கீழ் செய்து வந்தது. இதனால் தாமதமாகிறதென்பதை உணர்ந்த அரசாங்கம், இதன் அதிகாரங்களை மாவட்ட ஆட்சித் தலைவர்கள்

மற்றும் கோட்ட ஆணையாளர்களுக்கு ஒப்படைப்பு செய்தது. பின்னர் மாநில அளவில் இவர்களின் செயல்பாடுகளைக் கண்காணிக்க கண்காணிப்பு மற்றும் திறனாய்வுக் குழுவை மாநில அரசாங்கம் நியமித்தது. இதன் தலைவர் மாநில தலைமைச் செயலரோ அல்லது அதற்கொப்ப மூத்த அரசு அதிகாரியோ நியமிக்கப்பட வேண்டும். இக்குழு முறையாகத் தொடர்ந்து தனது கண்காணிப்புப் பணிகளைச் செய்ய வேண்டும். கண்காணிப்பு பணிகளைச் செய்யுங்கால், செய்யப்பட்டுவரும் மறுவாழ்வுப் பணிகளின் மேம்பாட்டிற்குரிய பரிந்துரைகளையும் இது செய்யும். இக்குழுவிற்கு தலைமை இயக்குநர் தொழிலாளர் நல்வாழ்வு உறுப்பினராகச் செயல்படுவார்.

தொழிலாளர் அமைச்சக உயர் அதிகாரிகள் மாநிலங்களுக்குச் சென்று மாநில அரசாங்கம் செய்யும் மறுவாழ்வு நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்வர். குறைபாடுகள் ஏதேனுடன் கண்டறிந்தால், அவற்றை நீக்குவதற்கு மாநில அரசாங்கங்களுக்கும் பரிந்துரை செய்வர். இவற்றை மாநில அரசாங்கம் செயல்படுத்தி மறுவாழ்வு நடவடிக்கைகளில் மேம்பாட்டினைச் செய்யும். 1987ம் ஆண்டு திருத்திய 20 அம்சத் திட்டத்தின்படி அரசு சார்பற்ற நிறுவனங்கள் கொத்தடிமைகளை விடுவிக்கும் செயல்களில் ஈடுபட ரூ. 100 கோடியை வழங்கியது. இதுபோல் மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கங்களும் கொத்தடிமை முறையை நீக்குவதற்கு பொதுமக்களின் ஒத்துழைப்பு அவசியம் என்பதை வலியுறுத்தி பொதுமக்களின் ஆதரவையும் திரட்டி வருகின்றன.

இந்திய சுதந்திரத்திற்குப் பின்னர் கொத்தடிமை ஒழிக்க எடுத்த முக்கிய நடவடிக்கைகளாவன,

1. இந்திய அரசியலமைப்பின் பிரிவு 23 (1) இதன்படி பிச்சையெடுத்தல், பாலியல் தீங்கு சார்பான செயல்கள், கட்டாய வேலை வாங்கல் போன்றவை சட்டத்திற்கு விரோதமானவை. இவர்கள் மீது தக்க நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்கும் என்று கூறப்பட்டடுள்ளது.
2. 1952ம் ஆண்டு சுரங்கச் சட்டம்
3. 1970ம் ஆண்டு ஒப்பந்தத் தொழிலாளர் நீக்கச் சட்டம்
4. 1970ம் ஆண்டு ஒப்பந்தத் தொழிலாளர் ஒழுங்கு முறைச் சட்டம்
5. கொத்தடிமை நீக்கச் சட்டம் 1976
6. மாநிலங்களில் இடம் பெயர்ந்தோர் தொழிலாளர் சட்டம் 1979
7. குழந்தைத் தொழிலாளர் ஒழிப்புச் சட்டம் 1981

### 6.6 தொகுப்புரை:

இயற்கை நீதிக்குட்பட்டு விசாரணை செய்து தவறு செய்தவர்கள் தண்டிக்கப்பட வேண்டும் தவிர விசாரணை முறையும் பன்னாட்டு அளவு தராதரத்திற்கு மேம்பட வேண்டும். ஒட்டுமொத்தத்தில் மரண தண்டனை எழுத்தில் இருக்கலாம். நடைமுறையில் இருக்கக் கூடாது.

கொத்தடிமை ஒழிப்பில் இந்தியத் தலைமை நீதிமன்றத்தின் பணி அளவிடற்கரிய ஒன்றாகும். தலைமை நீதிமன்றம் நேரத்திற்கு நேரம் வழங்கும் தீர்ப்புக்கள் கொத்தடிமை முறை ஒழிப்பின் உச்சகட்டத்திற்குச் சென்றுள்ளன. கொத்தடிமைகளின் மறுவாழ்விற்கும் பல வழிகளில் வழிகாட்டியுள்ளது.

மத்திய, மாநில அரசாங்கங்கள் தலைமை நீதிமன்ற வழிகாட்டல்களுக்கேற்ப பல மறுவாழ்வு நடவடிக்கைகளைச் செய்து வருகின்றன. 1997ம் ஆண்டில் தமிழ்நாடு அரசாங்கம் 10000க்கு மேற்பட்ட கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு அளித்துள்ளதாகக் கூறிற்று இங்கு இன்னும் கொத்தடிமைகள் இருப்பதாகக் கருத்து நிலவுகின்றது. அவற்றைச் கண்டுபிடித்து நீக்க வேண்டியது மனிதாபிமானமுள்ள அனைவரது கடமைகளாகும்.

### 6.7 முக்கிய வார்த்தைகள் :

மரண தண்டனை,விசாரனை,மனிதாபிமானம்,கொத்தடிமை,சித்திரவதை, அடிமைகள்,கருணை, ஜமீன்தாரிமுறை.

### 6.8 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 6.2 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 6.4 ல் அறிக

### 6.9 மாதிரி வினாக்கள் :

1. மரண தண்டனை விதிப்பதன் தேவையைக் குறிப்பிடுக.
2. கொத்தடிமை முறை பற்றிச் சுருக்கமாக எழுது.

## அலகு - 7

## பெண் சிசுவதை மற்றும் மறுப்பு உரிமை

**அறிமுகம் :**

பெண்களின் மக்கள் தொகை எல்லா நாடுகளிலும் ஏறத்தாழ சமமாகவோ அல்லது ஆண்களைவிட பெண்கள் அதிகமாகவோ பல நாடுகளில் உள்ளன. ஆனால் இந்தியாவில் மட்டும் பல்லாண்டு காலமாக பெண்கள் மக்கள் தொகை ஆண்களைவிட மிகக் குறைவாகவே இருந்து வந்துள்ளன. 1901ம் ஆண்டு பெண்கள் எண்ணிக்கை 1000 ஆண்களுக்கு 972 பெண்கள் என்ற வகையில் அமைந்து இருந்தது. இது தொடர்ந்து குறைந்து கொண்டே வருகின்றது. இதற்குக் காரணம் பெண் குழந்தைகளிடம் இறப்பு விகிதம் ஆண் குழந்தைகளைக் காட்டிலும் அதிகமாக இருப்பதுதான் ஆகும். ஏனெனில், நோய்வாய்ப்பட்டால் ஆண் குழந்தை, பெண் குழந்தை எனப் பாராது இரண்டு பேர்களையும் சமமாக ஆஸ்பத்திரிக்கு கொண்டு சென்று மருத்துவம் பார்க்க வேண்டும். ஆனால் ஆண் குழந்தைகளுக்கு மட்டுமே முன்னுரிமையாக மருத்துவ வசதி செய்வர். பெண் குழந்தைகள் அதிகமாக ஆண் குழந்தைகளைக் காட்டிலும் நோய்வாய்ப்படுவர். ஆனால் மருத்துவ வசதி செய்து தரப்படுவதில்லை. பெற்றோர்கள் ஆண் குழந்தைகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதால், பெண் குழந்தைகள் சமமான மதிப்பிற்கு உட்படவில்லை.

**நோக்கங்கள்**

1. பெண் சிசுவதை நிலையை அறிதல்.
2. மறுப்புரிமையின் வளர்ச்சியை விளக்குதல்.
3. வளர்ச்சி உரிமையின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்தல்

**வடிவ அமைப்பு :**

**உட்கூறுகள்**

7.1 பெண் சிசுவதை

7.2 மறுப்புரிமை

7.3 வளர்ச்சி உரிமை

7.4 மனித உரிமைகள் ஆணையாளரின் பணி

7.5 தொகுப்புரை

7.6 முக்கிய வார்த்தைகள்

7.7 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான வினா பதில்கள்

7.8 மாதிரி வினாக்கள்

7.9 பரிந்துரை நூல்கள்

### 7.1 பெண் சிசுவதை:

7% இந்தியா, சீனா ஆகிய நாடுகளில் தொடர்ந்து பெண் சிசுவதை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்தியாவைப் பொறுத்தவரை கிழக்கிந்தியக் கம்பெனி இந்தியாவிற்கு வந்தபோது இந்துக்களில் உயர்பிரிவினர்களிடம் பெண் சிசுவதை அதிக அளவில் இருந்துள்ளதை ஆங்கிலேயர்கள் கண்டறிந்தனர். கிழக்கிந்தியக் கம்பெனி உறுப்பினர் ஜோனத்தன் டங்கன் (Jonathan Dungan) என்பார். 1789ம் ஆண்டு இராஜபுத்திராங்களிடம் பெண் சிசுவதைப் பழக்கம் இருந்ததைக் கண்டறிந்து கார்ன்வாலிஸ் பிரபுவிற்கு இது குறித்து கடிதம் எழுதினார். இராஜபுத்திரர் குடும்பங்களின் பெண் சிசுவதை அதிகமாக உள்ளது. இராஜபுத்திரத் தாய்மார்களே தங்களது பெண் குழந்தைகளைக் கவனிக்காது உயிர் துறக்க வைக்கும் கோரச் செயல்கள் நடைபெற்று வருகின்றன. இதனால் இராஜபுத்திரக் குடும்பங்களில் திருமண வயது பெண்கள் குறைவாக இருப்பதால், பிற இராஜபுத்திர குடும்பங்களிலிருந்து திருமணத்திற்கு பெண்கள் எடுக்கின்றனர் என்று பெண் சிசுவதையைப் பற்றி முதலில் எடுத்துச் சொல்லியுள்ளார். 1794ம் ஆண்டு சர்ஜான்சோர் என்பார். இதனால் அதிக அளவில் இக்கொடுமையை வெளிப்படுத்தினார். ஆசிய சமூகம் (Asiatic Society) என்ற அமைப்பில் இதனை வெளியிட்டார். டங்கன் என்பார் இக்கொடுமையைக் கண்டுபிடித்த பின்னர், அதனை நீக்குவதற்கு முயற்சித்தார். எனவே அவர்களோடு ஒப்பந்தம் செய்து இக்கொடுமை தீர நிதி உதவி வழங்க ஏற்பாடு செய்தார். பெண் குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் குடும்பங்களுக்கு பரிசுகள் (awards) தந்து ஊக்கமளித்தார். எனினும் இவருடைய முயற்சி வெற்றி பெறவில்லை. பெண் சிசுவதை இராஜபுத்திர குடும்பங்களில் இரண்டு காரணங்களால் உருவானது. முதலாவதாக, இந்தியாவில் முகம்மதியர்கள் ஆட்சி செய்தபோது, இந்துப் பெண்களைக் கட்டாயப்படுத்தி பலாத்காரத்தில் ஈடுபடச் செய்ததால், பெண் குழந்தைகளைக் கொல்லும் பழக்கம் உருவானது. ஏனெனில் இக்குழந்தைகளுக்கு பாதுகாப்பளிப்பது மிகவும் சிரமம் என்று உணர்ந்தனர். இரண்டாவதாக, பெண்களுக்கு மாப்பிள்ளை கிடைப்பது அரிதாயிற்று. அவ்வாறு தகுந்த மாப்பிள்ளை கிடைத்தாலும் திருமணம் செய்து வைக்க ஏராளமான செலவு பிடித்தது. இதனை மக்களால் தாங்கமுடியவில்லை. எனவே இப்பிரச்சினைக்கு முடிவு பெண் சிசுவதை என்று தவறாகப் புரிந்து இச்செயல்களில் ஈடுபட ஆரம்பித்தனர்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. விடுதலைக் முன் இந்தியாவில் இருந்த பெண் சிசுவதை பழக்கத்தை கூறுக.

டங்கன் பம்பாய் ஆளுநராக நியமிக்கப்பட்ட பின்னர் பெண் சிசுவதைக்கு முடிவு கட்ட முயற்சிகள் மேற்கொண்டார். சூரத், கட்ச் ஆகிய பகுதிகளில்

இராஜபுத்திரர்கள் ஆட்சிபுரிந்து வந்தனர். பரோடா மாகாணத்திலும் மற்றும் பிற மேலை (Coart) பகுதிகளிலும் ஏராளமான இராஜபுத்திர குறுநில மன்னர்கள் ஜெர்ஜாஷ் என்ற (Jerjahs) பெயரில் ஆட்சி புரிந்து வந்தனர். இந்தக் குடும்பங்கள் அனைத்திலும், அப்பகுதிகளிலும் அனைவராலும் பெண் சிசுவதைப் பழக்கத்தைக் கடைபிடித்து வந்ததை அறிந்தார். இந்த இராஜபுத்திர அரசர்கள் அனைவரும் உயரிய தூய்மைக் குணம் படைத்தவர்கள் என பறைசாட்டிக் கொண்டிருந்தனர். முகம்மதிய, மொகலாய ஆட்சியாளர்கள் இராஜபுத்திர பெண்களைத் திருமணம் செய்வதற்கு முயற்சி மேற்கொண்டனர். பலாத்காரத்தில் ஈடுபட்டனர். எனவே இம்முறை ஏற்பட்டது. பெண் சிசுவதையை முடிவு கட்ட ஆங்கிலேயர்கள் தொடர்ந்து முயற்சி செய்தனர்.

வாழையடி வாழையாக பல நூற்றாண்டுகளாக பெண் சிசுவதைப் பழக்கம் குஜராத்திலுள்ள உயர் வகுப்புப் பிரிவினர்களான பட்டேல் மற்றும் இராஜபுத்திரக் குடும்பங்களில் இருந்து வந்துள்ளன. குஜராத் மாநிலம் கேதா மாவட்டத்தில் பட்டேல் குடும்பத்தினர் மூன்று தலைமுறைகளுக்கும் மேலாக இப்பழக்கத்தில் ஈடுபட்டு வந்துள்ளனர். இதனால் பெண் மக்கள் தொகை ஆண்கள் மக்கள் தொகையில் பாதியாகக் குறைந்தது. 1000 ஆண்களுக்கு 200 பெண்கள்தான் என்ற நிலை கூட வந்தது. எனவேதான் ஆங்கிலேயர்கள் இப்பழக்கத்தை 1987ம் ஆண்டு தடை செய்தனர்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. உயர்மட்ட பணக்காரர்கள் மத்தியில் இருந்த பெண் சிசுவதை பழக்கத்தை கூறுக.

பெண் சிசுவதை உயர்மட்ட பொருளாதார பணக்காரர்கள் மத்தியில் அதிகமாக இருந்தது. ஏனெனில் குடும்பச் சொத்து, குடும்பத் தொழில் ஆகியன உடையாமல் குடும்பத்திற்குள்ளேயே வைத்துக்கொள்ள முயன்றனர். பெண்கள் திருமணம் ஆனபின்னர் சொத்தைப் பிரிக்கச் சொல்வர் என்று எண்ணி பெண்களைப் புறக்கணித்தனர். ஹைதராபாத்தில் உள்ள ஏழை முகம்மதியர்களும் இப்பழக்கத்தில் ஈடுபட்டு வந்துள்ளனர். ஏனெனில் தங்களது பெண் குழந்தைகளுக்கு திருமணம் செய்து வைக்க முடியாத அளவிற்கு வரதட்சணை கொடுமை இருந்து வந்துள்ளது. தமிழகத்தில் மதுரை மாவட்டத்தில் உசிலம்பட்டி வட்டத்தில் 1986ம் ஆண்டு பெண் சிசுவதைப் பழக்கம் அதிக அளவில் இருந்துள்ளது. ஏழை கள்ளர் சமூகத்தில் இது கடைபிடிக்கப்பட்டு வந்துள்ளது.

பெண் சிசுவதை என்பதை வெளிப்படையாக செய்து வந்துள்ளனர். ஒவ்வொரு ஆண்டும் ஆயிரத்திற்கு மேற்பட்ட பெண் சிசு கொலை நடைபெற்ற

வந்துள்ளது. பெற்ற தாயே அக்குழந்தைகளைக் கொல்வது விநோதமான ஒன்றுதான். ஏனெனில் கள்ளர் சமூகத்தில் நிலமற்ற, ஏழைகள்தான் பெரும்பாலானோர். ஒரு பெண்ணைத் திருமணம் செய்து வைக்க குறைந்தபட்சம் 2000 ரூபாய் ரொக்கம் கொடுக்க வேண்டியிருக்கும். இது தவிர, தங்களுக்குக் குறைந்தது 5 சவரன் போட வேண்டும். திருமணச் செலவு மற்றும் குடும்பச் செலவுகள் என ஏராளமான செலவுகள் திருமணத்திற்கு தரவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டதால் திருமணம் செய்து வைக்க இயலவில்லை. வைகை அணை கட்டியதால் விவசாயம் செழுமையானது. இதற்கேற்ப வரதட்சணையின் அளவும் அதிகரிக்கலாயிற்று.

கள்ளர்கள், தேவர் ஆகியோர் சோழ அரசர்களிடம் படை வீரர்களாக பணியாற்றி வந்தவர்கள் ஆவர். எனவே அடிப்படையில் வீரகுலத்தைச் சார்ந்தவர்கள். பெண் குழந்தை பிறந்திருக்கிறதென்றால், அக்குழந்தையைப் பார்க்க அவரது தகப்பனார் வர மாட்டார். பெண் குழந்தை பிறந்து விட்டதே என தாயும் வேதனைப்படுவார். இவர்கள் எரிக்லைச் செடியை வீடுகளில் வளர்த்து வருவர். பெண் குழந்தை பிறந்தால் அச்செடியின் பாலை அக்குழந்தைக்கு கொடுத்து கொன்று விடுவர். சில சமயங்களில் தாய் அப்பெண் குழந்தையை வளர்க்க முயற்சி செய்தால் அப்பெண் குழந்தைகளைக் கொல்ல மறுத்தால், அப்பெண்ணை வீட்டை விட்டே வெளியேற்றி விடுவர். இதனால் அவள் இச்செயலுக்கு கட்டாயமாகி விடுகிறாள். மொத்தத்தில் பெண் குழந்தை குடும்பச் சுமையாகவும், ஆண் குழந்தை ஆட்சியாளக் கூடியவன் என்ற எண்ணத்திலேயே பெற்றோர்கள் பிள்ளைகளை வளர்க்கின்றனர். தற்போது பெண் குழந்தை குடும்பத்தின் முத்து என்று அரசாங்கம் அறிவித்து பெண் சிசுவதைக்கு கடுமையான தண்டனை அறிவிக்கப்பட்டுள்ளதால் இப்பழக்கம் இன்று குறைந்து கொண்டே வருகின்றது.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 3. தமிழ்நாட்டில் உள்ள பெண் சிசுவதை பழக்கத்தை கூறுக.

1988ம் ஆண்டு இராஜஸ்தான் மாநிலத்தில் வெளிப்படையாக பெண் சிசுவதை செயல் வெளியிடப்பட்டது. இராஜஸ்தான் நீதிமன்றம் இதனைக் கடுமையாக விசாரித்து தக்க நடவடிக்கை எடுக்குமாறு காவல்துறைக்கு வழிகாட்டல் செய்தது. பாத்தி (Bhati) இனத்தைவர்களிடம் பெண் சிசுவதை நடைமுறையில் இருந்துள்ளது. பெண் குழந்தை பிறந்தவுடனேயே மணல் மூட்டை வைத்து மூச்சுத் திணற அடித்து கொல்லும் முறை இருந்துள்ளது. இதனை அந்தக் குழந்தையின் தாயே செய்யும் பழக்கம் இருந்து வந்துள்ளது. பாத்தி இனத்தவர்களில் பெண்களின் எண்ணிக்கை 50 ஆகக் குறைந்ததும் பெண் குழந்தைகளைக் கொல்லும் பழக்கம் நிறுத்தப்பட்டது. அரசாங்கத்தின் அலட்சியம், அறியாமை, மூட நம்பிக்கை, வரதட்சனை மற்றும் மாயையான உயர்குடி என்ற பெருமை ஆகியன பாத்தி மக்களின் பெண் சிசுவதைக்கு

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 4. இராஜஸ்தான் மாநிலத்தில் உள்ள பெண் சிசுவதை பழக்கத்தை எடுத்துரைக்க.

உள்ள காரணங்களாகும். கல்வியறிவின்மை, மருத்துவமனை போன்ற மருத்துவ வசதிகள் இல்லாதது, பின் தங்கிய பொருளாதாரம் ஆகியன இப்பழக்கத்திற்கு உள்ள பிற காரணங்கள் ஆகும்.

பெண் சிசுவதைப் பிரச்சினைகள் காவல் நிலையத்திற்கு புகார்களாக வருவதில்லை. கிராம மக்கள் அனைவரும் இதில் தொடர்பு இருப்பதால் எவரையும் தண்டிக்க இயலவில்லை. இந்திய கிரிமினல் தொகுப்பு 302ன்படி, மனித கொலை போன்று வழக்குகளை விசாரிக்க முடிவதில்லை. எனவே மக்கள் மனதை மாற்ற முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். மக்களின் மனதை மாற்ற கல்வி அறிவைப் புகட்ட வேண்டும். பெண் சிசுவதையில் பெற்றோர்கள் குற்றவாளிகள் அல்ல. அவர்கள் பாதிக்கப்பட்டவர்கள்தான். மரபார்ந்த, வழக்காறு, அறியாமை, தனிமை, வறுமை, ஏகப்பட்ட நடைமுறை என்ற பல்வேறு காரணங்களால் பாதிக்கப்பட்டவர்கள். குற்றமே செய்யாவிட்டாலும் அதற்கு சமூக நியாயம் கற்பித்தால் அதற்கு தண்டனை விதிக்க முடியாது. ஆகவே அரசாங்கமும், சிவில் சமூகமும் ஒத்துழைத்து இப்பிரச்சினைக்கு முடிவு கொண்டுவர வேண்டும்.

ஆண் குழந்தை, பெண் குழந்தை எனப் பிறந்த பின்னர்தான் பெண் குழந்தை மீது பாகுபாடு காண்பித்து அதனைக் கொலை செய்யும் நிலை மாறி, பிறக்கும் முன்னரே அக்குழந்தையைக் கொல்லும் வழிமுறை இன்றைய நாளில் ஏற்பட்டுள்ளது. பால் இனத்தை அறிதல் என்ற நவீன கருவிகளின் மூலம் ஆணா? பெண்ணா? என்று அறிய ஆர்வம் மாறி பெண் சிசுவைக் கருவிலேயே கொல்லும் நிலை இன்று உருவாகியுள்ளது. இது, அன்போடு எந்தக் குழந்தை என்று அறிவதைக் காட்டிலும் அவற்றை அழிக்க அதிகம் பயனாக உள்ளது. 1985ம் ஆண்டில் மட்டும் 45000 கருக்கலைப்பு அதாவது பெண் சிசு கொலை மகாராஷ்டிராவில் பம்பாய் மாநகரில் நடந்துள்ளதாக அரசாங்கம் மதிப்பிட்டுள்ளது. 1979-1982ல் மட்டும் விருப்பமாக 78000 கருக்கலைப்பு நடைபெற்றுள்ளதென சோமா சட்டர்ஜி அறிக்கை கூறுகின்றது. இந்தியா முழுவதும் எவ்வளவு நடைபெற்றிருக்கும்? இந்தச் சோதனை கிராமப்புறங்களில் தெரிந்திருந்தால் அங்கு எவ்வளவு நடைபெற்றிருக்கும்? என நினைத்தாலே பயமாக உள்ளது. எனவே மாநில அரசாங்கங்கள் இந்த பாலினச் சோதனையைத் தடை செய்துள்ளது. தமிழக அரசாங்கம் 2002ல் இதனைத் தடை செய்தது. கருக்கலைப்பு 1971ம் ஆண்டு முதல் சட்டபூர்வமாகச் செய்யலாம் என சட்ட அங்கீகாரம் கிடைத்தது. பாலினச் சோதனை வணிக ரீதியில் 1974ம்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
5. எவ்வாறு பெண்சிசு கொலைக்கு விஞ்ஞானம் துணையாக உள்ளது?

ஆண்டு முதல் இது செய்யப்பட்டது. எனவே 1975ம் ஆண்டு முதல் இது தடை செய்யப்பட்டது. எனவே 1975ம் ஆண்டு நிறுத்தி வைக்கப்பட்டது. இது தொடர்ந்து நடைபெற்று பல்லாயிரக்கணக்கான பெண் சிசுக்களும் கொல்லப்பட்டு கொண்டுதான் இருக்கின்றனர்.

குழந்தை பெற்று வளர்க்க 5 இலட்சத்திற்குப் பதிலாக வெறும் 500 ரூபாயில் பிரச்சினையை முடித்துக் கொள்ளலாம் என பெண் சிசுவதைக்குரிய விளம்பரங்கள் நாடு முழுவதும் காணப்பட்டது. இதனைக் கண்ட பெண் இயக்க உறுப்பினர்கள் கடுமையான ஆட்சேபம் தெரிவித்து, தங்களது எதிர்ப்புகளை போராட்டம் வாயிலாகத் தெரிவித்தனர். கருக்கலைப்பு என்பது வியாபார ரீதியில் மருத்துவமனைகளுக்கு ஏராளமான வருவாயை ஈட்டித்தந்தது. வெளிநாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்து கருக்கலைப்பு செய்தனர். ஏனெனில் செலவு சிறிது குறைவு என்ற காரணத்திற்காகத்தான். மேலும் மேலைநாடுகளில் கருக்கலைப்பு தடை செய்யப்பட்டிருந்தது. இதனைச் சாதாரணமாக நினைத்து செய்யலாயினர். இவர்களது உடல் நலம் கெடும் என்பதை ஏன் இவர்கள் அறியாமல் உள்ளனர் என மருத்துவர்கள் வியக்கலாயினர்.

இந்தியாவில் பெண்கள் 48 விழுக்காட்டினர் உள்ளனர். காந்தி கூறியதுபோல் பெண்கள் எல்லாத் துறைகளிலும் நுழைந்து பணியாற்றினால், நாடு எளிமையாக, எச்சிரமமும் இன்றி விரைவில் முன்னேறி விடும் என்பதை அறிந்து, பெண்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும். பெண் சிசுவதை போன்ற கொடிய செயல் நடைபெறக் கூடாது. அறநெறியளவிலும், மனிதாபிமானத்திற்கும் எதிரானது பெண் சிசுவதை. பெண் சிசுவதையைத் தடுக்க அரசாங்கம் பல்வேறு முயற்சிகளை செய்து வருகின்றது. அவற்றிற்கு நாம் ஒத்துழைப்புத் தர வேண்டும். பெண்கள் மேம்பாட்டுத் திட்டங்கள் முறையாகச் செயல்படுத்தப்பட வேண்டும். பெண்ணில்லாத குடும்பமே கிடையாது. அப்படிப்பட்ட பெண்ணை வெறுப்பது, கொல்வது என்பது நாகரீக சமூகத்திற்கு பொருத்தமானதல்ல. பெண் குழந்தை குடும்பத்தின் முத்து என்ற அரசாங்கக் கொள்கைக்கேற்ப பெண் குழந்தைகளை முறையாகப் பராமரித்து, குடும்பத்தையும் நாட்டையும் மேம்படுத்த வேண்டும்.

## 7.2 மறுப்புரிமை :

மனித உரிமைகளில் மிகவும் முக்கியமான உரிமைகளில் ஒன்று மறுப்பு தெரிவிக்கும் உரிமையாகும். எல்லாவற்றிலும் இணைந்து ஏற்றுச் செல்வது சில சமயங்களில் முடியாத அல்லது இயலாத ஒன்றாக இருப்பதால் இந்த உரிமை அவசியமாகத் தேவைப்படக் கூடிய உரிமையாகும். பேச்சு உரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, கூட்டம் கூடும் உரிமை ஆகியவற்றில் உருவானதுதான் மறுப்பு உரிமை ஆகும். மக்களாட்சிக் கோட்பாடு மக்களுக்கு பலவகை உரிமைகளைக் கொடுத்துள்ளது. எழுத்துரிமை, பேச்சுரிமை, கருத்துக்களைப் பரப்பும் உரிமை, போராடும் உரிமை, கூட்டம் கூடும் உரிமை, நம்முடையா நம்பிக்கைகள், கருத்துக்களை எடுத்துரைக்கும் உரிமை என பல உரிமைகள் நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றையெல்லாம் பயன்படுத்தும் வண்ணம் பொதுமக்கள் சாதனங்கள் ஏராளமானவை இன்று உள்ளன. பத்திரிக்கைகள், பருவ இதழ்கள், வானொலி நிலையங்கள், தொலைக்காட்சிகள் போன்றவை செய்திகளாக பல கருத்துக்களை பரப்பி வருகின்றன. இவற்றின் சிக்கல்களும் நம்முடைய சட்டமன்ற அமைப்புக்களில் விவாதப் பொருளாக பிரச்சினைகளைத் தீர்க்கும் வகையில் சட்டங்களும் இயற்றப்பட்டு வருகின்றன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன் னிறைவு சோதனை வினா.
2. மறுப்புரிமை பற்றி ஒரு சிறு குறிப்பு தருக.

மக்களுக்கு அதிகமான உரிமைகள் வழங்கப்பட்டு உள்ளன. இவற்றை முறையாகப் பயன்படுத்துவார்களா? துஷ்பிரயோகம் செய்வார்களா என்ற அச்சமும் நிலவுகின்றது. பேச்சுரிமை, எழுத்துரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, கருத்துக்களைப் பரப்பும் உரிமை ஆகியவற்றின் மூலமாக பொய், பித்தலாட்டம், அநீதியான செயல்களைச் செய்ய முற்பட்டால் இந்த உரிமைகள் அனைத்தும் மக்களைப் பாதிக்கும் சமூக விரோத சக்திகளுக்கு இணையாகி விடும். எனவேதான் மக்கள் இவ்வுரிமைகள் பற்றி தெளிவாகத் தெரிந்திருக்க வேண்டும். முறையாகப் பயன்படுத்தப் படுகின்றதா என்ற விழிப்புணர்வும் மக்கள் மனதில் இருக்க வேண்டும்.

இன்று உரிமைகள் உள்ளனவெனினும், உரிமைகளைக் கொடுக்கும் பாதுகாவலனான அரசாங்கத்தை நம்புவதா அல்லது உரிமைகளின் உரிமையாளர்களை மக்களை நம்புவதா என்ற கேள்வி எழுகின்றது. அரசு சொல்வதை அப்படியே ஏற்றுக் கொண்டால் எந்தப் பிரச்சினையும் கிடையாது. அதே நேரத்தில் மக்கள் உரிமைகளைப் பாதிக்கும் செயல்களுக்கும் ஆதரவு அளிக்க முடியுமா? என்று முக்கியமான கேள்வி. ஏதேச்சதிகார ஆட்சிகளில் மக்கள் உரிமைகள், பறிக்கப்படும்போது யாரும் கேள்வி கேட்க முடியாது.

மறுப்புத் தெரிவிக்க முடியாது. எனவே மக்களுக்கு எதைத் தெரிவிக்க வேண்டும் என்பதை அந்த ஏதேச்சதிகார அரசாங்கமே முடிவு செய்யும். எது மக்களுக்கு உகந்தது என்பதையும் அவர்களே முடிவு செய்வர். இவையெல்லாம் உண்மையிலேயே மக்களுக்கு பயனளித்தனவா? என்ற பகுப்பு செய்யக் கூடாது. ஆட்சியாளர்கள் நன்மை பயக்கச் செய்த நடவடிக்கைகள், தீமைகளுக்கு இலக்காகாது என நம்ப வேண்டும். இதுதான் ஏதேச்சதிகார ஆட்சி மக்களின் எண்ணங்கள், கருத்துக்கள், என்னென்னவென்று அலசி ஆராயப் பார்க்காது அந்த அரசாங்கம். ஆனால் மக்களாட்சி அரசாங்கங்களில் மக்கள் முழுமையாகத் தங்கள் தலைவர்களின்பால் நம்பிக்கை வைக்கத் தயங்குவார்கள். குருட்டுத்தனமாக மூடநம்பிக்கையில் அரசாங்கம் நல்லதைத்தான் செய்யும் என்று ஒருதலை பட்சமாக நம்பிக்கை வைக்க மாட்டார்கள். அவர்கள் செயல்களைத் திறனாய்வு செய்வார்கள். அவர்களது முடிவு மக்களுக்கு நன்மையளிக்காதெனில் மக்கள் தலைவர்களின் கருத்துக்களுக்கு செவிமடுக்க மாட்டார்கள். அக்கருத்துக்களுக்கு எதிர்ப்பும் தெரிவிப்பார்கள். தொழிற் சங்கத்திற்கு போராடும் உரிமையை அரசாங்கம் எடுத்துவிட்டால், மேலாண்மையின் ஆதிக்கம் அத்தொழிற்சாலையில் நிலைபெற்று விடும். எதிர்க்கட்சிகளுக்கு தொலைக்காட்சியில் சந்தர்ப்பம் வழங்கப்படவில்லையேல், அடுத்த அரசாங்கத்தை ஆளுங்கட்சியே மறுபடியும் அமைக்கும் எனவே எதிர்ப்பு அல்லது மறுப்பு உரிமை மிகவும் அவசியம்.

மக்களாட்சி சமூகங்களில் கருத்துக்கள் உருவாக்குதலில் முழு சுதந்திரம் உண்டு. அதே நேரத்தில் அரசாங்கம் மக்கள் கருத்து இப்படித்தான் இருக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவதை மக்கள் விரும்புவதில்லை. எனவேதான் பெரும்பாலானோர் தனிப்பட்ட முறையில் மறுப்பு தெரிவிக்கும் உரிமையை விரும்பாமலே மக்களாட்சிக் கோட்பாட்டிற்கிணங்க மறுப்பு தெரிவிக்கும் உரிமை அவசியமென வலியுறுத்துகின்றனர். நீங்கள் கூறுவதை நான் ஏற்றுக் கொள்ளவில்லையாயினும், உங்களுடைய பேச்சுரிமையைக் காப்பது அவசியமென்பதை நான் அறிவேன் என வால்டயர் கூறுவதிலிருந்து பேச்சுரிமை, மறுக்கும் உரிமை இரண்டையும் தெளிவாகப் புரிந்து கொள்ளமுடிகிறது. ஆனாலும் பேச்சு உரிமை, கூட்டம் கூடும் உரிமை, சங்கம் அமைக்கும் உரிமை ஆகியன வரையறுக்கப்படாதது அல்ல. அவை கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்ள கூடிய உரிமைகளே எனக் கூறுகின்றனர்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
3. உரிமைகளுக்கு உரிய கட்டுபாடுகளை கூறுக.

உரிமைகளுக்கு சில கட்டுப்பாடுகள் அவசியம். தவிர்க்க முடியாதவை ஆகும். கூட்டத்திற்குள் இருந்து "தீ,தீ" எனக் கத்தி அனைவரையும் அலைக்கழித்து பயமுறுத்தும் சுதந்திர உரிமையை ஏற்றுக் கொள்ள முடியாது. கூட்டம் கூடும் உரிமையை வைத்து அதிகாலை 4 மணிக்கு குடியிருப்புப் பகுதிக்குள் கூட்டம் கூடும் கூடுவதை அனுமதிக்க முடியாது. இதே மாதிரி, சங்கம் அமைக்கும் உரிமையை வைத்து, குற்றவியல் செயல்கள் செய்ய சதித் திட்ட தீட்டுவதையும் ஏற்க முடியாது. எனவே, உரிமைகள் வரையறுக்கப்பட்ட கட்டுப்பாட்டிற்குள் இயங்க வேண்டும்.

இன்றைய நாளில் பேச்சுரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, கூட்டம் கூடும் உரிமை ஆகியவற்றிற்கு ஏராளமான சட்டங்கள் இவற்றைக் கட்டுப்படுத்தக் கூடிய வகையில் இயற்றப்பட்டுள்ளன. மான நஷ்ட ஈடு சட்டங்கள் மூலம் மக்கள் தங்களைப் பாதிக்கும்போது நீதிமன்றங்களில் வழக்கிடுகின்றனர். மக்களின் பெயர்களைக் களங்கப்படுத்தும் நோக்கில் எழுதப்பட்ட கட்டுரைகள், வார்த்தைகள் ஆகியனவற்றிற்கு நஷ்டஈடு கோரி வழங்கு தொடுக்கின்றனர். இனம், மொழி ஆகியவற்றின்பால் எந்த ஒரு பிரிவினரைப் பாதிக்கும் வகையில் எச்செயலும் அமைந்தால் அவை சட்டதிற்குப் புறம்பானதென்று குற்றவியல் தொகுப்பு வரையப்பட்டுள்ளது. பொது மக்களுக்கு இடைஞ்சல் செய்யும் வண்ணம் ஏதேனும் அதாவது கூச்சலிடல், பாடுவது, கிண்டலடித்தல் போன்றவை செய்தால் சட்டத்தின்பால் தண்டனை வழங்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. வீதிகளில் கூட்டம் நடத்த ஊர்வலம் செல்தல் ஆகியவற்றிற்கு இன்றைய நாளில் காவல் துறையிடம் அனுமதி பெற வேண்டுமென பல நகராட்சிகளில் சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது.

பேச்சுரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, கூட்டம் கூடும் உரிமை ஆகியவற்றிற்கு சட்டம் கொண்டு வந்து ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. இவ்வுரிமைகள் எவ்வளவு முக்கியமோ அந்த அளவிற்கு அவற்றின்மீது கட்டுப்பாடுகளும் அவசியம். சுதந்திர உரிமையின் மூலம் ஏற்படும் பாதிப்பையும், கட்டுப்பாடுகளின் மூலம் சுதந்திர உரிமையின் பாதிப்பையும் கண்ணுற வேண்டும். இவ்வாறு கண்ணுற்று சுதந்திர உரிமைகளின் பாதிப்பிற்கு இலக்காகாதவாறு சுதந்திர உரிமையினால் ஏற்படும் பாதிப்பைக் கட்டுப்படுத்தும் வகையில் வரையறைகள் செய்ய வேண்டும். சுதந்திர உரிமையை மறுத்து மக்களுக்கு எந்தவித உரிமையை வழங்கினாலும் அதனால் பயன் கிட்டாது.

## 7.3 வளர்ச்சி உரிமை

வளர்ச்சி உரிமை மனித உரிமைகளில் மிகவும் முக்கியமான உரிமையாக இன்று வளர்ச்சி பெற்றுள்ளது. மனித உரிமைகளுக்கும் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. எனினும் கடந்த அரை நூற்றாண்டுகளால் ஐ.நா. சபை நடவடிக்கைகளில் வலியுறுத்தப்பட்டதன் விளைவாக இவ்வுரிமை 1980ம் ஆண்டு ஐ.நா.வால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. எனவே வளர்ச்சி உரிமைப் பிரகடனம் என்று தனியாக பிறப்பிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு தனி மனிதனும் தனியாகவும் பொதுவாகவும் நாட்டின் வளர்ச்சியில் பங்கு பெற வேண்டும். எனவே வளர்ச்சி உரிமை என்பது மனிதனிடமிருந்து பிரிக்க முடியாத சேர்ந்தே இருக்கக் கூடிய உரிமையாகும். வளர்ச்சியில் மனிதர்களும் பங்கு பெறுவது மட்டுமல்ல. அவ்வளர்ச்சியில் நன்மைகளையும் உய்க்க வேண்டும் என்பதுதான் வளர்ச்சி உரிமை. பொருளாதார சமூக கலாச்சாரமாக அரசியல் வளர்ச்சிக்கு ஒவ்வொரு மனிதனும் சுதந்திரமாக ஈடுபட வேண்டும். அவ்வாறு ஈடுபட்டதன் விளைவாக ஏற்படும் எல்லா நன்மைகளையும் மனிதன் அனுபவிக்க வேண்டும். 1993ம் ஆண்டு நடைபெற்ற வியன்னா மாநாட்டில் வளர்ச்சி உரிமை என்பது அடிப்படை உரிமைகளில் ஒன்று என்பதையும், மக்களிடமிருந்து பிரிக்க முடியாத அனைவருக்கும் பொருந்தும் உரிமை என்று அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

ஐக்கிய நாடுகள் அவையானது பன்னாட்டு அளவில் அனைத்து நாடுகளுக்கும் ஒன்றுக்கொன்று உதவி உலகத்தில் வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற குறிக்கோளோடு செயல்பட்டு வருவதை அறிவோம். சாதி, மத, பால், மொழி, மதம் என்ற பல்வேறு வேறுபாடுகள் அனைத்தையும் கடந்து சமத்துவமாக அனைவரது வளர்ச்சிக்கும் பாடுபட்டு வருகின்றது. பொருளாதாரம், சமூகம், கலாச்சாரம் ஆகிய பல்வேறு பிரிவுகளிலும் வளர்ச்சியை ஏற்படுத்த வேண்டுமென்பதற்காக பாடுபட்டு வருகின்றது. எனவே வளர்ச்சி என்பது ஒட்டுமொத்த வளர்ச்சியாகும். சமூக, பொருளாதார, காலச்சார மற்றும் அரசியல் ஆகிய அனைத்துப் பிரிவுகளின் வளர்ச்சியே வளர்ச்சி என்பதாகும். எனவே ஒவ்வொருவரும் சுதந்திரமாக வளர்ச்சிகளில் பங்கு பெற்றால் ஒட்டுமொத்தமாக அனைவரும் வளர்ச்சியடையலாம். வளர்ச்சியின் பயனையும் அனுபவிக்கலாம் என்று வளர்ச்சியை ஊக்குவிக்கும் சக்தியாகவும் ஐ.நா. சபை விளக்குகின்றது.

> **முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.**
> 4. வளர்ச்சி உரிமையின் வளர்ச்சியில் ஐக்கிய நாடுகளின் பங்கினை கூறுக.

உலக மனித உரிமைகள் மகாசாசனத்தை ஏற்கனவே வெளியிட்டு தற்போது வளர்ச்சி உரிமையையும் வழங்கி ஒட்டுமொத்த வளர்ச்சிக்கு வித்திட்டுள்ளது. இதனால் நாடுகளும் அனைத்து மனித இனமும் பயன்பெறும்.

**வளர்ச்சி உரிமைப் பிரகடனத்தின் உள்ள முக்கியப் பிரிவுகள்,**

பிரிவு 1:

1. வளர்ச்சி உரிமை என்பது மனித உரிமைகளில் பிரிக்க முடியாத உரிமைகளில் ஒன்று, இவ்வுரிமையை ஒவ்வொருவரும் தனித்தனியாகவும், ஒட்டுமொத்தமாகவும் பயன்படுத்த வேண்டும். இவ்வுரிமையைப் பயன்படுத்துவதன் மூலம் பொருளாதார, சமூகக் கலாச்சார வளர்ச்சிகளை அடைய முடியும். அவற்றைப் பயன்படுத்தவும் முடியும். எனவே மனித உரிமைகள் அனைத்தையும் பயன்படுத்த வளர்ச்சி உரிமை அவசியம்.

2. மக்கள் பன்னாட்டு மனித உரிமை ஒப்பந்தங்களுக்கேற்ப தங்கள் நாட்டின் இயற்கை வளத்தையும் மூலப் பொருட்களையும் பயன்படுத்த தங்களது வளர்ச்சி உரிமையைப் பயன்படுத்தி எவ்வாறு அவற்றைப் பயன்படுத்தலாகுமென்பதை முடிவு செய்யும் உரிமை மக்களிடம் இருக்க வேண்டும்.

பிரிவு 2:

1. மனிதனின் வளர்ச்சியை மையமாகவே வளர்ச்சி இருப்பதால், மக்கள் ஆர்வமாகப் பங்கேற்று அதனால் ஏற்படும் பயன்களைப் பெற வேண்டுமென்பது வளர்ச்சி உரிமை.

2. ஒவ்வொருவரும் தனித்தனியாகவும், கூட்டமாகவும் வளர்ச்சியில் பங்கு பெறும் பொறுப்பு கொண்டவர்கள். தங்களது உரிமைகள், அடிப்படைச் சுதந்திரம், ஆகிய அடிப்படை உரிமைகளின் முக்கியத்துவத்தைப் பராமரித்து சமுதாயக் கடமைகளையும் ஆற்ற வேண்டும். இதனால் மனித சமுதாயம் முழு வளர்ச்சி பெறுவதோடு பொருத்தமான அரசியல், சமூக மற்றும் பொருளாதார முறைமைகளை அமைத்துக் கொள்ள முடியும்.

3. நாடு தேசிய வளர்ச்சிக்குத் தேவையான கொள்கைகளை உருவாக்கும் உரிமையும் கடமையும் கொண்டது. இதனால் மனித சமுதாயமும்

தனிநபர்களும் வளர்ச்சி அடைவர். அனைத்து மக்களும் ஆர்வமாக, சுதந்திரமாக, வளர்ச்சிக் கொள்கைகளில் பங்கு பெற்று, அவற்றால் ஏற்படும் பயன்களை அனுபவிக்கலாம்.

பிரிவு 3:

1. நாடுகள் தேசிய அளவிலும் பன்னாட்டு அளவிலும் நிலவக் கூடிய வளர்ச்சி உரிமையை முழுமையாகப் பயன்படுத்தவல்ல சூழ்நிலைகளை உருவாக்கித் தரும் முழுப் பொறுப்பு கொண்டவையாகும்.
2. வளர்ச்சி உரிமையை முழுமையாக உணர்ந்து செயல்பட பன்னாட்டுச் சட்டங்களுக்கு அரசுகள் மதிப்பளிக்க வேண்டும். இதன் மூலம் நாடுகள் நட்புகரமாகவும், ஒத்துழைப்புடனும் ஐ.நா. சாசனங்களுக்கேற்ப செயல்பட முடியும்.
3. நாடுகள் தங்களுக்குள் வளர்ச்சிக்குரிய ஒத்துழைப்பை நல்குவதோடு வளர்ச்சிக்கு தடையான காரணிகளைக் களைவதற்கும் முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். இதனால் புதிய பன்னாட்டு பொருளாதார ஒழுங்கு முறை அரசுகளின் இறையாண்மையைப் பாதிக்காதவாறு சமத்துவமாக பரஸ்பரமாக ஒருவருக்கொருவர் ஒத்துழைத்து செயல்படும் முறை ஏற்படும். மேலும் இது மனித உரிமைகளை உணரவும் அவற்றைப் பின்பற்றவும் நாடுகளை ஊக்குவிக்கும்.

பிரிவு 4:

1. மனித வளர்ச்சி உரிமையை உணர வைக்ககும் அளவில் பன்னாட்டு வளர்ச்சிக் கொள்கையை நாடு தனியாகவும், கூட்டாகவும் எடுக்கும் கடமை கொண்டன.
2. வளர்ந்து வரும் நாடுகளில் தொடர்ந்து வளர்ச்சி உரிமைக்கு தொடர்ந்து கவனம் செலுத்த வேண்டும். எனவே வளர்ந்து வரும் நாடுகள் ஒட்டுமொத்த வளர்ச்சி பெறுவதற்கு வேண்டிய பொருத்தமான வழிமுறைகளையும், வசதிகளையும் கொண்ட பன்னாட்டு ஒத்துழைப்பு அவசியம். ஒத்துழைப்பால் நாடுகள் வளர்ச்சி பெறும்.

பிரிவு 5:

1. நாடுகள் மனித உரிமைகள் மீறல்களை இரும்புக்கரம் கொண்டு நீக்கும் நடவடிக்கைகளில் இறங்க வேண்டும். நிற வேற்றுமைக் கொள்கை, இனப்பாகுபாடு,

அனைத்து வகை இனப் பிரச்சினைகள், காலனி ஆதிக்கம், வெளிநாட்டு ஊடுருவல், வெளிநாட்டு ஆதிக்கம், அத்துமீறல் மற்றும் பிற வகையான தேசிய இறையாண்மைக்குக் குந்தகம் செய்கின்ற சக்திகள், தேசிய ஒற்றுமை, நாட்டின் எல்லைப் பாதுகாப்பு, போர் போன்ற மனித உரிமைகளைப் பாதிக்கும் மனித உரிமைகள் பாதிக்கின்றன. இங்கு மக்கள் முடிவெடுக்கும் உரிமைகளைக் கொடுத்து அவர்களது வளர்ச்சி உரிமையை நிலைநாட்ட வேண்டும்.

பிரிவு 6:

1. மக்களுடைய அனைத்து மனித உரிமைகள் மற்றும் அடிப்படை சுதந்திரங்களை மதிக்கவும், பின்பற்றவும் எல்லா நாடுகளும் பாடுபட வேண்டும். பால், இனம், மொழி அல்லது மதம் ஆகிய பாகுபாடுகள் இன்றி எல்லா நாடுகளும் மக்களுடைய மனித உரிமைகளுக்குப் பாடுபட வேண்டும்.
2. மனித உரிமைகள் அனைத்தும் பிரிக்க முடியாதது. ஒன்றோடொன்று சார்ந்து செயல்படக் கூடியவை. எனவே, அரசியல், சிவில், பொருளாதார, சமூக, கலாச்சார உரிமைகளைப் பாதுகாக்கவும் அவற்றை மேம்படுத்தவும், செயல்படுத்தவும் அரசுகள் சம முக்கியத்துவம் மற்றும் கவனம் செலுத்துவதோடு உடனடியாக அவற்றைச் செயல்படுத்த வேண்டும்.
3. சிவில், அரசியல், பொருளாதார, சமூகக் கலாச்சார உரிமைகளைச் செயல்படுத்த தடைப்படுத்தும் தடைகளை நீக்க நாடுகள் தேவையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

பிரிவு 7:

1. எல்லா நாடுகளும் பன்னாட்டு அமைதி மற்றும் பாதுகாப்பை ஏற்படுத்த பராமரிக்க மற்றும் மேம்படுத்தும் நடவடிக்கைகளில் ஈடுபட வேண்டும். பன்னாட்டுக் கட்டுப்பாட்டின் கீழ் படைக்குறைப்பை (disarmament) இராணுவத்திற்கு ஏற்படும் செலவைக் குறைக்க வேண்டும். படைக்குறைப்பைக் குறைப்பதால் ஏற்படும் வருமானத்தை வளர்ந்து வரும் நாடுகள் அந்நாடுகளின் ஆக்கபூர்வ வளர்ச்சிக்குச் செலவிட வேண்டும்.

பிரிவு 8:

1. நாடுகள் தங்களது தேசிய அளவிற்குள் மனித வளர்ச்சி உரிமைகளை உணர்த்தும் வகையில் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

நாட்டின் அடிப்படை ஆதாரங்களைப் பெறுவதற்கு மக்கள் அனைவருக்கும் சமவாய்ப்பு அளிக்கப்பட வேண்டும். கல்வி, மருத்துவம், உணவு, வேலைவாய்ப்பு, நாட்டின் வருமானம் முறையாகப் பகிர்ந்தளிக்கப்படல் போன்றவற்றில் மக்கள் அனைவருக்கும் சமவாய்ப்பு கொடுக்க வேண்டும். பெண்கள் வளர்ச்சி செயல்முறைகளில் ஈடுபடுவதற்குரிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். சமூக அநீதிகளை அப்புறப்படுத்தத் தேவையான பொருளாதார, சமூக சீர்திருத்தங்கள் செய்யப்பட வேண்டும்.

2. மனித உரிமைகள் அனைத்தையும் பயன்படுத்தும் வகையில் மக்கள் வளர்ச்சி செயல்களில் பங்கு பெற நாடுகள் மக்களை ஊக்குவிக்க வேண்டும்.

பிரிவு 9:

1. இச்சாசனத்தில் அடங்கியுள்ள வளர்ச்சி உரிமையின் எல்லா அம்சங்களும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டவை. பிரிக்க முடியாதவை. எனவே ஒவ்வொரு அம்சத்தையும் ஒட்டுமொத்த உரிமைகளோடு ஒப்பிட்டுப் பார்த்து செயல்படுத்த வேண்டும்.

2. ஐ.நா. அவையின் நோக்கங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் உட்டுபட்டுத்தான் வளர்ச்சி உரிமையின், அம்சங்கள் உள்ளன. எனவே எந்த நாடும் உலக மனித உரிமைச் சாசனத்தையும் ஒப்பந்தங்களையும் மீறி மனித உரிமைகள் மீறலைச் செய்யக் கூடாது.

பிரிவு 10:

1. நாடுகள் அனைத்தும் தேசிய அளவிலும், பன்னாட்டு அளவிலும் வளர்ச்சி உரிமையை முழுஅளவில் உய்க்க மேம்படுத்தத் தேவையான சட்டங்களை நிறைவேற்ற வேண்டும்.

### 7.4 மனித உரிமைகள் ஆணையாளரின் பணி:

1993ம் ஆண்டு ஐ.நா. பொது அவை மனித உரிமைகள் ஆணையாளர் பதவியை ஏற்படுத்தத் தீர்மானம் நிறைவேற்றியது. இவர் வளர்ச்சி உரிமையை மக்கள் உணர வைக்கத் தேவையான நடவடிக்கைகளைச் செய்ய வேண்டும் என வரையறுத்துள்ளது.

மனித வளர்ச்சி உரிமையை உணர வைக்கும் நடவடிக்கைகளில் இறங்கி அதனை வளர்த்து மேம்பாடு செய்ய வேண்டும். இதற்கு ஐ.நா. அவையின் பிற அமைப்புக்களும் தேவையான உதவிகளைச் செய்யும் என்று அவரது பொறுப்பினை விளக்கியுள்ளது. மனித வளர்ச்சி உரிமைக்கு முன்னுரிமை தர வேண்டும் என்றும், அதற்கேற்ற வழிமுறைகள், திட்டங்கள், கொள்கைகள், செயல்பாடு நடவடிக்கைகளை இவர் மேற்கொள்ள வேண்டும். சிவில், கலாச்சாரம், அரசியல், சமூக உரிமைகள் வளர்ச்சி உரிமையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால் வளர்ச்சி உரிமையைப் பாதுகாத்து மேம்படுத்தும் நடவடிக்கைகள் ஒட்டுமொத்த அனைத்து உரிமைகளின் செயல்பாடுகளாகவே இருக்கும். எனவே, அனைத்து உரிமைகளின் ஒரு பகுதியாகவே வளர்ச்சி உரிமை உள்ளது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன் னிறைவு சோதனை வினா.
5. மனித உரிமைகள் ஆணையாளரின் பணிகளை எடுத்துரைக்க

மனித உரிமைகள் ஆணையாளர் ஒவ்வொரு ஆண்டும் ஆண்டறிக்கையை ஐ.நா. சபையிடம் சமர்ப்பிப்பார். அறிக்கையில் கூறப்பட்ட விஷயங்கள் குறித்த நடவடிக்கைகளை ஐ.நா. சபை எடுக்கும். இது தவிர ஒவ்வொரு பிரச்சினையை ஆராய்ந்து முடிவு எடுத்து மனித உரிமை ஆணையாளர் இடைக்கால அறிக்கைகளையும் சமர்ப்பிப்பார். இவற்றின் மீதும் ஐ.நா. சபை தேவையான நடவடிக்கைகளை எடுக்கும். மனித உரிமை மீறல்கள் மனித வளர்ச்சி உரிமை மீறல்களாகவே இருக்கும். எனவேதான் ஐ.நா. சபையும், நாடுகளும் மனித வளர்ச்சி உரிமைக்கு மிகவும் முக்கியத்துவம் அளித்துள்ளனர்.

## 7.5 தொகுப்புரை

இந்தியாவில் பெண்கள் 48 விழுக்காட்டினர் உள்ளனர். காந்தி கூறியதுபோல் பெண்கள் எல்லாத் துறைகளிலும் நுழைந்து பணியாற்றினால், நாடு எளிமையாக, எச்சிரமமும் இன்றி விரைவில் முன்னேறி விடும் என்பதை அறிந்து, பெண்கள் முன்னேற்றத்திற்குப் பாடுபட வேண்டும். பெண் சிசுவதை போன்ற கொடிய செயல் நடைபெறக் கூடாது. அறநெறியளவிலும், மனிதாபிமானத்திற்கும் எதிரானது பெண் சிசுவதை. பெண் சிசுவதையைத் தடுக்க அரசாங்கம் பல்வேறு முயற்சிகளை செய்து வருகின்றது. அவற்றிற்கு நாம் ஒத்துழைப்புத் தர வேண்டும். பெண்கள் மேம்பாட்டுத் திட்டங்கள் முறையாகச் செயல்படுத்தப்பட வேண்டும். பெண்ணில்லாத குடும்பமே கிடையாது. அப்படிப்பட்ட பெண்ணை வெறுப்பது, கொல்வது என்பது நாகரீக சமூகத்திற்கு பொருத்தமானதல்ல. பெண் குழந்தை குடும்பத்தின் முத்து என்ற அரசாங்கக் கொள்கைக்கேற்ப பெண் குழந்தைகளை முறையாகப் பராமரித்து,

குடும்பத்தையும் நாட்டையும் மேம்படுத்த வேண்டும். பேச்சுரிமை, சங்கம் அமைக்கும் உரிமை, கூட்டம் கூடும் உரிமை ஆகியவற்றிற்கு சட்டம் கொண்டு வந்து ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது. இவ்வுரிமைகள் எவ்வளவு முக்கியமோ அந்த அளவிற்கு அவற்றின்மீது கட்டுப்பாடுகளும் அவசியம். சுதந்திர உரிமையின் மூலம் ஏற்படும் பாதிப்பையும், கட்டுப்பாடுகளின் மூலம் சுதந்திர உரிமையின் பாதிப்பையும் கண்ணுற வேண்டும். இவ்வாறு கண்ணுற்று சுதந்திர உரிமைகளின் பாதிப்பிற்கு இலக்காகாதவாறு சுதந்திர உரிமையினால் ஏற்படும் பாதிப்பைக் கட்டுப்படுத்தும் வகையில் வரையறைகள் செய்ய வேண்டும். சுதந்திர உரிமையை மறுத்து மக்களுக்கு எந்தவித உரிமையை வழங்கினாலும் அதனால் பயன் கிட்டாது.

**7.6 முக்கிய வார்த்தைகள் :**

பெண் சிசுவதை,பலாத்காரம்,எரிக்லைச் செடி,பாத்தி இனம்.

**7.7 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான பதில்கள் :**

**வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 7.1 ல் அறிக**

**வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 7.2 ல் அறிக**

**வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 7.3 ல் அறிக**

**வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 7.4 ல் அறிக**

**7.8 மாதிரி வினா:**

1. சுதந்திர உரிமையின் கட்டுப்பாடுகளை வரையறு.
2. பெண் சிசுவதை குறித்து சுருக்கமாக எழுது.
3. வளர்ச்சி உரிமையின் முக்கியத்துவத்தை எழுது.

**7.9 பரிந்துரை நூல்கள் :**

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

## அலகு - 8

# தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் உரிமைகள் மற்றும் பெண் உரிமைகள்

### அறிமுகம்

ஆசிரியர், ஆச்சாரியர், போர்வீரர், வணிகர், தொழிலாளர் ஆகிய அனைவரும் சமூகத்தில் சம அந்தஸ்து, கௌரவம், மரியாதை ஆகியன கொண்டு விளங்க வேண்டுமென்ற மனுவின் சதுர்வர்ணக் கோட்பாட்டின் திசைமாறி பரம்பரையான ஜாதி முறை ஏற்பட்டு நாட்டிற்குத் தாங்கொண்ணாப் பிரச்சினையை தந்துவிட்டது ஜாதி முறைமை என முன்னாள் குடியரசு தலைவர் டாக்டர். இராதாகிருஷ்ணன் கூறியுள்ளார். சமூகப்படி நிலையில் சூத்திரர்கள் கடை நிலையில் இருந்ததால் அவர்கள் எல்லா வகையிலும் பாதிக்கப்பட்டனர். அனைத்து உரிமைகளையும், உடைமைகளையும் இழக்க நேரிட்டனர். இவர்கள்தான் தீண்டத்தகாதவர்கள், தாழ்த்தப்பட்ட மக்கள். இவர்களை முதன்முதலாக இந்திய அரசாங்கச் சட்டம் 1935ம் ஆண்டு தாழ்த்தப்பட்டோர் என முதன் முதலில் வரையறுத்தது. அதற்கான அரசாங்க ஆணையை 1936 ஏப்ரல் 1ம் தேதி வெளியிட்டது. இந்த ஆணையில் சில குறிப்பிட்ட இனம், ஜாதி, பழங்குடியினர் வரிசையில் சேர்க்கப்பட்டனர். அஸ்ஸாம், வங்காளம், பீகார், பம்பாய், மத்திய மாகாணங்கள், சென்னை, ஒரிஸ்ஸா, பஞ்சாப் மற்றும் இணைந்த மாகாணங்கள் ஆகியவற்றில் வசித்து வந்த மக்களை தாழ்த்தப்பட்டோர் என ஆணை வரையறுத்தது. இவர்களின் நிலைகளை கீழ்கண்ட பகுதியில் காண்போம்.

### நோக்கங்கள் :

1. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் நிலை அறிதல்.
2. பெண்கள் நிலை மற்றும் உரிமைகளை கூறுதல்.
3. தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினருக்கு அரசியலைப்பு வழங்கியுள்ள உத்திரவாதங்களை நோக்குதல்.

வடிவ அமைப்பு

உட்கூறுகள்



## 8.1 அரசியலமைப்பும் தாழ்த்தப்பட்டோரும்

அரசியலமைப்பில் 341வது பிரிவின்படி, சில குறிப்பிட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் மற்றும் பிரிவினர் ஆகியோர் தாழ்த்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கப்பட்டனர். இவர்கள் தீண்டாமை, சமூக இயலாமை ஆகிய காரணங்களால் இவர்களை தாழ்த்தப்பட்டடோர் பட்டியலில் சேர்த்தது. இந்தியா சுதந்திரம் பெற்ற பின்னர் தாழ்த்தப்பட்டோர் ஜாதிகளின் பட்டியலை குடியரசுத் தலைவர் 1950ம் ஆண்டு வெளியிட்டார். இதுவரையிலும் 15 குடியரசுத் தலைவர் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இந்த ஆணைகளில் எல்லா மாநிலங்களிலும் யூனியன் பிரதேசங்களிலும் வசிக்கும் அனைத்து தாழ்த்தப்பட்டோர்களின் வரிசை இடம் பெற்றுள்ளது. இப்பட்டியலில் புதிதாக தாழ்த்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்க வேண்டுமாயினும், நீக்க வேண்டுமாயினும், பாராளுமன்றம் சட்டம் இயற்றிச் செய்ய வேண்டும். அரசாங்கம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பழங்குடியினர் என வரையறை செய்யவில்லை. அரசாங்க அறிவிப்பின் மூலமே யார் தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் என்பது தெரிய வருகின்றது. ஒரு மாநிலத்தில் தாழ்த்தப்பட்டோராக இருப்போர், மற்ற மாநிலங்களில் அந்த வரிசையில் இடம் பெறுவதில்லை. கல்வி, கலாச்சாரம், பொருளாதாரம் ஆகியவற்றின் அடிப்படையில் தாழ்த்தப்பட்டோர் என்பது வரையறுக்கப்படுகின்றது. சில சமூகவியலர்களின் பரிந்துரையின் பேரில் சில பிரிவினர் தாழ்த்தப்பட்டோரில் இடம் பெறுகின்றனர். சிலர் போராட்டம் நடத்தி அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்த தாழ்த்தப்பட்டோராக மாறுகின்றனர் என்ற

குற்றச்சாட்டும் உண்டு. இன்று 612 தாழ்த்தப்பட்டோர்கள் இப்பட்டியலில் இடம் பெற்றுள்ளனர்.

**8.2 தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி வகுப்பினர் நிலை :**

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1.இந்தியாவில் தாழ்த்தப்பட்ட மக்களின் விகிதச்சாரத்தை கூறுக.

இந்திய மக்கள் தொகையில் (1981 மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி, 15.47 விழுக்காடு தாழ்த்தப்பட்டோர்களும் 7.85 விழுக்காடு பழங்குடியினரும் உள்ளனர். ஆகவே ஏறத்தாழ மக்கள் தொகையில் நான்கில் ஒரு பங்கு மக்கள் தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடியினர்களாகும். அதிகமாக தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் மாநிலம் உத்திரப் பிரதேசமாகும். இங்கு 22.3 விழுக்காடு மக்கள் தாழ்த்தப்பட்ட பழங்குடியினர் ஆவர். இதற்கு அடுத்தபடியாக மேற்கு வங்காளம் (11.46%) ஆந்திரப் பிரதேசம் (7.6%), மத்தியப் பிரதேசம் (7.02%), இராஜஸ்தான் (5.5%), கர்நாடகா (5.34%), பஞ்சாப் (4.31%), மஹாராஷ்டிரா (4.28%), கேரளா (2.43%), ஹரியானா (2.35%), குஜராத் (2.32%), ஹிமாசலப் பிரதேசம் (1.0%), ஜம்மு மற்றும் காஷ்மீர் (0.47%), திரிபுரா (0.30%) சிக்கிம் (0.02%), மணிப்பூர் (0.02%), நாகலாந்து, அந்தமான், நிக்கோபர், இலட்சத்தீவு ஆகிய இடங்களில் தாழ்த்தப்பட்டோர் மக்கள் தொகை இல்லை. மேகாலயா, அருணாச்சலப் பிரதேசம், தத்ராநாகர் ஹாவேலி மற்றும் மிசோரம் ஆகிய மாநிலங்களில் மிகவும் குறைவான அளவு எண்ணிக்கையில் உள்ளனர். தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர், தாழ்த்தப்பட்ட மக்கள் பெரும்பாலும் 88 விழுக்காடு கிராமப்புறங்களில் வசிக்கின்றனர். தொழிற்சாலைகள் அதிகரித்து வருவதாலும், கிராமங்களில் பசுமைப்புரட்சி மூலம் விவசாய வளர்ச்சி மேம்படுவதாலும் கிராமப்புறங்களிலிருந்து தாழ்த்தப்பட்ட மக்கள் நகரங்களுக்குச் செல்லும் (Migration) நிலையும் சில இடங்களில் நடைபெறுகின்றது. கைவினைப் பொருட்கள் செய்வதில் ஈடுபட்டோர் நகரங்களை நோக்கி புறப்பட்டுள்ளனர். மொத்தத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் ஓரிடம் விட்டு ஓரிடம் நகரக்கூடிய மக்களாக உள்ளனர். 52 விழுக்காடு தாழ்த்தப்பட்ட கிராமப்புற விவசாயக் கூலிகள், 28 விழுக்காட்டினர் சிறிய, நடுத்தர விவசாயிகள் ஆவார்.. இந்தியாவில் மேற்குப் பகுதியில் உள்ள நெசவாளர்கள் அனைவரும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களாகும். இந்தியாவில் கீழ்ப்பகுதியில் உள்ள அனைத்து மீனவர்களும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களே ஆகும். துப்புரவுத் தொழில், மற்றும் தோல் பதனிடல் ஆகிய தொழில்களில் முற்றிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினரே செய்து வருகின்றனர். நகரப் புறங்களில்

ரிக்ஷா ஓட்டுபவர்கள், கைவண்டி இழுப்போர், கட்டிடத் தொழில் செய்வோர், பீடி சுற்றுபவர்கள் மற்றும் பிற விவசாயமற்ற அமைப்பு சாரா வேலைகளில் கூலிகளாகப் பணிபுரிபவர்கள் தாழ்த்தப்பட்டோர்கள். மொத்தத்தில் ஏழைகளாக, வறுமைக் கோட்டிற்குக் கீழாக இருக்கக் கூடியவர்களாக தாழ்த்தப்பட்டோர்களாக உள்ளனர்.

இந்திய மக்கள் தொகையில் ஏழைகளாக, தாழ்த்தப்பட்டோர்களாக வறுமையில் வாடிக் கொண்டிருக்கிறார்கள். அறியாமை, மூடநம்பிக்கை ஆகியன கொண்டவர்களாக உள்ளனர். பல்லாண்டு காலமாக நடைமுறையில் அடிமைகளாக மரியாதையின்றி எந்தவித ஆதரவும் பெறாத அளவில் தன்னந்தனியாக வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் தாழ்த்தப்பட்டோர்கள்.

தாழ்த்தப்பட்டோர்கள் மீதான தாக்குதல், கொடுங்கோண்மைகள் அதிகரித்து வருகின்றன. தாழ்த்தப்பட்டோர் தாக்குதலுக்கு இலக்காகி மிகவும் பாதிக்கப்படாலும் அவர்களுக்கு நஷ்டஈடு கொடுப்பதுவும் கிடையாது. சமூகத்தின் மேல்மட்டத்திலுள்ளோர் தாழ்த்தப்பட்டோரை வெறுத்து ஒதுக்குவதோடு மட்டுமின்றி வேண்டுமென்றே கொடுங்கோன்மைக்கு உள்ளாக்கி வருகின்றனர். இவ்வாறு தீங்கிழைக்கும் உயர்மட்டத்தினருக்கு தண்டனையும் கிடையாது. தண்டனை கிடைக்கும் என்று இருந்தால் தவறுகள் செய்ய அஞ்சுவார்கள். எனவே வரலாற்று பூர்வமாகவே தாழ்த்தப்பட்டோரை உயர்மட்டத்தினர் வெறுத்து ஒதுக்குவதோடு தொடர்ந்து தொல்லைகளும் கொடுத்து வருகின்றனர். வெறுப்பு என்பது விருப்பில்லாதால் ஏற்படக் கூடியதாகும். இதனால் இருபேர்களுக்கிடையே தொடர்பு மோசமாக அமைகின்றது. வெறுப்பு என்பது ஆழமான, நிலையான ஆழ்ந்த உணர்வு, தனது எதிர்ப்பை, கோபத்தை, வித்தியாசத்தை தனது எதிராளிக்காகவோ அல்லது குழுவிற்கோ அல்லது நோக்கத்திற்கோ வெளிப்படுத்தக் கூடியது வெறுப்பு என பென்குவின் உளவியல் அகராதி வரையறுத்துள்ளது. இது மாதிரியான உணர்வு தாழ்த்தப்பட்டோர் மீது உயர்மட்டத்தினர் கொண்டுள்ளனர். இதனால் தாழ்த்தப்பட்டோர் மீது எவ்வகையில் கெடுதல்கள் செய்யலாம், பிரச்சனைகள் கொடுக்கலாம், கஷ்டப்படுத்தலாம் என்று அவர்கள் முயற்சி செய்கின்றனர். எனவே சமூகத்தில் சேர்ந்து செயல்படக்கூடிய ஒற்றுமையுணர்வு இன்றி அதற்கு எதிரான நிலை சமூகத்தில் தொடர்ந்து நிலவுகின்றது.

தாழ்த்தப்பட்டோர்கள் உயர்மட்டத்தினருக்கு எதிரானவர்கள் என்ற நிலை உருவாகிவிட்டதெனலாம். எனவே தாழ்த்தப்பட்டோர் சமூகத்தில் தாங்கள் சமத்துவமின்மையாக இருப்பதாலும் மனிதாபிமானமாக நடத்தப்பட்டாதாலும், அவற்றையும் மீறி சமத்துவம் பெற முயற்சி மேற்கொள்ள ஆரம்பித்துவிட்டனர். சமுதாயத்தை எதிர்த்துப் போராட ஆரம்பித்தனர். வறுமை, பணமிண்மை, அதிகாரதமின்மை, வளமின்மை என பல்வேறு அதிகாரமில்லாததால் அவற்றால் மிகவும் பாதித்ததால் எதிர்ப்பு தீவிரமானது. சமூகத்தின் வளர்ச்சிக்கும் பொருளாதார மேம்பாட்டிற்கும், உண்மையிலேயே பொறுப்பானவர்கள் தாழ்த்தப்பட்டோர் என உணர்ந்தனர். அந்த மேம்பாடுகளில் தங்களுக்கு எதுவும் கிடைக்கவில்லை என்பதை அறிந்தனர். எனவே சமூக, மரபார்ந்த, மத, தேசியம் என அனைத்து விதிமுறைகளையும் எதிர்க்கலாயினர். இதனால் உயர்மட்டத்தில் மட்டும் அனைத்து அதிகாரங்களும் கொண்டிருக்க வேண்டுமா? இது என்ன நியாயம்? என்று சட்டப்பூர்வமாக கேள்வி எழுப்பினர். இதனால் தாழ்த்தப்பட்டோர் மீது வன்முறை ஏவப்பட்டு தொல்லைகள் அதிகமாகி விட்டன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. தாழ்த்தப்பட்டோர் மீது நடக்கும் கொடுமைகளை விளக்குக.

தாழ்த்தப்பட்டோர்கள் மீது கட்டவிழ்த்து விடப்பட்ட வன்முறைகள், கொலை போன்ற பல செயல்கள் அரசியலமைப்பின் மூலம் பல பாதுகாப்புகளைப் பெற்றிருந்தும் நடைபெறுகின்றன. சீராக ஆராய்வோமாயின் அரசியலமைப்பின் பாதுகாப்புக்களில் சிலவற்றை மட்டுமே செயல்படுத்தினாலே தாழ்த்தப்பட்டோர் இவ்வளவு தூரம் பாதிக்கப்பட்டிருக்க மாட்டார்கள். ஆனாலும் அரசியலமைப்பு பாதுகாப்புக்கள்ளக் கூட உயர்மட்டத்தினர் துஷ்பிரயோகம் செய்து தாழ்த்தப்பட்டோர்களை ஒடுக்கி விடுகின்றனர். எனவே அரசியலமைப்புப் பாதுகாப்புக்களை முறையாக செயல்படுத்தி தாழ்த்தப்பட்டோர்கள் பாதுகாக்கப்பட வேண்டும்.

### 8:3 அரசியல் அமைப்பில் தாழ்த்தப்பட்டோருக்கு வழங்கப்பட்டுள்ள உத்திரவாதங்கள்:

அரசியலமைப்பின் மூலம் தாழ்த்தப்பட்டோர்களுக்கு வழங்கப்பட்டுள்ள பாதுகாப்புகள் பற்றிக் காண்போம். இந்திய அரசியலமைப்பின் 15(2) பிரிவின்படி, மதம், இனம், ஜாதி, பிறந்த இடம் மற்றும் பிற காரணங்களால் எவர் மீதும் தடையோ, கட்டுப்பாடோ செய்யக்கூடாது. கடைகள், பொது உணவு விடுதிகள், கேளிக்கை மையங்கள் ஆகியவற்றிற்கு செல்ல தடை விதிக்கக் கூடாது. கிணறுகள், குளங்கள், குளியல் இடங்கள், சாலைகள், பொது இடங்கள் ஆகியவற்றிற்கு செல்ல எதிர்ப்பு தெரிவிக்கக் கூடாது. இது மாதிரியாக

சமத்துவமாக வாழ வழிவகை செய்துள்ளது. தவிர, இச்சட்டம் மேற்படி வசதிகள் செய்து தர அரசாங்கம் தனிக் கவனம் செலுத்த வேண்டும் எனவும் கூறியுள்ளது. அரசியலமைப்பின் முதல் சட்டத் திருத்தம் 1951ஆம் ஆண்டு செய்யப்பட்டது. இது அரசாங்கம் தாழ்த்தப்பட்ட பழங்குடியினர்களின் மேம்பாட்டிற்கு தனிக் கவனம் செலுத்த அரசாங்கத்திற்கு வழிகாட்டியுள்ளது. பின்னர் 1955ம் ஆண்டு சிவில் உரிமை பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. இதன்படி தீண்டாமை ஒரு தண்டனைக்குரிய குற்றம் என்றும், கடுமையான தண்டனைகள் வழங்கப்பட வேண்டுமென்றும் இச்சட்டம் கூறியுள்ளது. எனவே இச்சட்டத்தின் மூலம் தாழ்த்தப்பட்டோர்களுக்கு மறுக்கப்பட்ட சிவில் உரிமைகள் அனைத்தும் கிடைக்கும்.

1955ம் ஆண்டு சிவில் உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்பட்டு தாழ்த்தப்பட்டோர்களுக்கு பாதுகாப்பு வழங்கியிருந்தாலும் தாழ்த்தப்பட்டோர் மீதான தாக்குதல்கள் தொடர்ந்து வந்ததால் 1989ம் ஆண்டு தாழ்த்தப்பட்டோர் பழங்குடியினர் மீது கொடுமைகளைத் தடுக்கும் சட்டம் கொண்டு வரப்பட்டது. இதன்மூலம் அதிகமான பாதுகாப்பு தாழ்த்தப்பட்டோர்களுக்கு கிடைத்தது. தாழ்த்தப்பட்டோர் மீதான கொடுமைகள் என்னென்ன என்று 18 செயல்களை இச்சட்டம் வரையறுத்துள்ளது. இச்செயல்கள் செய்வோர் மீது கடுமையான தண்டனை வழங்க வழிவகை செய்துள்ளது. இந்தியக் குற்ற தண்டனை உட் தொகுப்பில் உள்ள பிரிவுகளுடன் அதிகபட்சமாக சில பிரிவுகள் சேர்க்கப்பட்டன. தனி நீதிமன்றங்கள், தனி வழக்கறிஞர்கள் ஆகிய வசதிகள் தாழ்த்தப்பட்டோர் மீதான வழக்குகளை விசாரிக்க நியமனம் செய்யப்பட்டுள்ளன. இதனால் வழக்குகள் விரைவாகத் தீர்க்கப்பட்டு, தாழ்த்தப்பட்டோர் உரிமைகள் காக்கபட்டன. அரசியலமைப்பு ரீதியான பாதுகாப்புகள் பல இருந்தாலும், முனைப்போடு செயல்படுத்தவில்லை என்ற குற்றச்சாட்டுக்கள் பல உள்ளன.

அரசியலமைப்பு உத்திரவாதங்கள் சிலவற்றைக் காண்போம்.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 3. தாழ்த்தப்பட்டோருக்கு வழங்கப்பட்டுள்ள உத்தரவாதங்களை கூறுக.

1. தீண்டாமை ஒழிக்கப்பட்டது. தீண்டாமை மாதிரிச் செயல் எந்த வடிவில் வந்தாலும் அது ஒழிக்கப்பட வேண்டும். (பிரிவு 17)
2. கல்வி, பொருளாதார மேம்பாட்டிற்கும், சமூக அநீதி மற்றும் எல்லா வகைச் சுரண்டல்களிலிருந்தும் பாதுகாப்பு (பிரிவு 46)
3. இந்து மத நிறுவனங்களில் அனைத்து இந்து மக்களும் செல்லலாம் (பிரிவு 256)

4.	கடைகள், பொது விடுதிகள், உணவு விடுதிகள், பொது கேளிக்கை மையங்களுக்கு அனைவரும் செல்லலாம். கிணறுகள், குளங்கள், குளிக்கும் இடங்கள், சாலைகள், பொதுப் பூங்காக்கள் ஆகியவற்றிற்கு செல்ல தடை கிடையாது.

5.	சொத்துக்கள்

6.	கல்வி நிறுவனங்களில் சேர்வதற்கு மறுப்பு தெரிவிக்கக்கூடாது. (பிரிவு 29(2))

7.	அரசுப் பணிகளில் போதுமான பணி ஒதுக்கீடு (பிரிவு 16 மற்றும் 335)

8.	மக்களவை, மாநிலச் சட்டமன்றங்களில் சிறப்பு நியமனம் (பிரிவு 330, 332 மற்றும் 334)

9.	தனித்துறைகள் மாநில அரசாங்கங்கள் தாழ்த்தப்பட்டோர்களுக்கௌ ஏற்படுத்த வேண்டும். சிறப்பு அதிகாரி மற்றும் பழங்குடியினர் ஆலோசனை மன்றம் ஏற்படுத்த வேண்டும். (பிரிவு 164, 338 மற்றும் 5வது சேர்க்கை)

10.	தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் பகுதிகளை நிர்வகிக்க கட்டுப்படுத்த தனிப்பிரிவுகள் (பிரிவு 224, 5 மற்றும் 6வது சேர்க்கை).

**8.4 பெண்களின் நிலை:**

பெண்களுக்கு எதிரான வன்முறையும் பாரபட்சமும் உலக அளவில் ஒரு பெரிய சமூகக் தொற்று நோயாக உள்ளது. பெண்களை இழிவாகப் பேசுதல், நடத்துதல் என்பது தொடர்ந்து, அதிக அளவில் நடைபெற்றுக் கொண்டு வருகின்றன. இதனைத் தடுக்காவிட்டால், பெண்கள் நிலை மிகவும் மோசமாகிவிடும். எனவேதான் பெண்களின் முன்னேற்றத்திற்காக பன்னாட்டு அளவில் பெண்கள் உரிமை இயக்கங்கள், ஆரம்பிக்கப்பட்டு, பெண் உரிமையைக் காக்க போராட்டங்கள் நடைபெற்று வருகின்றன.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
4. பெண்களுக்கு அளிக்கப்படும் கொடுமைகளை கூறுக.

பெண்கள் தங்களைக் காக்க முடியாத அளவில் உலகத்தில் வாழ்ந்து வருகின்றனர். அவர்களை அவர்களாக நடத்துவதில்லை. ஏராளமான பெண்கள் தங்களது விருப்பமில்லாமலேயே திருமணம் செய்து கொள்கின்றனர். தங்களுக்கு விருப்பமில்லாமலேயே ஆண்களுடன் சேர்ந்து இருக்க வேண்டியதுள்ளது. எனவே பெண்கள் அரசாங்கத்தை நம்பி, தங்களைப் பாதுகாக்க முடியாதென்பதை உணர்ந்துவிட்டனர். பெண்களுக்கு வீட்டிலேயே வன்முறை ஆரம்பமாகிவிடுகின்றது. இதனால் பலர் உயிரிழக்க நேரிடுகின்றது. இன்றைய நாளில் AIDS என்று சொல்லக்யகூடிய நோய் பெண்களைப் பெரிதும் துன்பத்திற்கு ஆளாக்கியுள்ளது. பெண்கள் சிறையில் அடைக்கப்பட்டால் கூட,

அங்கும் அவர்களுக்கு வன்முறையை அந்த சிறை அதிகாரிகள் செய்கின்றனர். விரும்பி பிள்ளை பெற்றுக்கொள்ளக்கூட அனுமதிக்கப்படாது, குடும்பக் கட்டுப்பாட்டினைக் கட்டாயம் செய்ய ஆளாக்கப்படுகின்றனர். எனவே, பெண் வீட்டில், பணியில் மற்றும் அனைத்து இடங்களிலும் வன்முறைக்கு அதாவது பாலியல் வன்முறைக்கு ஆளாக்கப்படுகின்றனர்.

பெண்களுக்கு எங்கெல்லாம் மனித உரிமை மீறல் நடைபெறுகிறதோ? பெண்களுக்கு சமத்துவம் வழங்காது இரண்டாம் நிலைக்குத் தள்ளப்படுகின்றனரோ, அங்கெல்லாம் பெண்கள் உரிமையை நிலை நாட்ட வேண்டும் என்பது நமது கடமையாகும். சட்ட கலாச்சார, மத சார்பான நடவடிக்கைகளில் பெண்கள் பாரபட்சமாக நடத்தப்படுகின்றனர். அரசியல் நடவடிக்கைகளிலும், பொதுவாழ்க்கையிலும் முற்றிலும் பெண்கள் புறக்கணிக்கப்படுகின்றனர். பாலியல் பலாத்காரம், விரும்பாத திருமணம், வீட்டில் சித்ரவதை மற்றும் விற்பனைப் பொருளாகக்கூட பெண்கள் விற்கப்படுவது போன்ற செயல்கள் பெண்களின் நிலையாக உள்ளது. கலாச்சாரத்தின் அடிப்படையில் உரிமைகள் என்ற கோட்பாட்டினால் பெண்கள் சமமான அந்தஸ்து கொண்டவர்கள் என்பதும், அந்தஸ்து இழப்பு ஆகிய இரண்டும் ஏற்படுகின்றன. எனவே உரிமை என்பதை சமமாக ஆணும் பெண்ணும் பங்குபெற வழிவகை செய்தால்தான், பெண்களுக்கு உரிமை கிடைக்கும்.

மனித உரிமை விழிப்புணர்வு அமைப்பின் பிரிவானது, பெண்களை மனிதாபிமானமில்லாமல், சமூகத்தில் ஒதுக்கிவைக்கக் கூடிய நிலையை வன்மையாகக் கண்டித்துள்ளது. பெண்கள் சம உரிமைக்காகவும், மனித தகுதியுடன் (Dignity) ம் இருக்க இந்த அமைப்பு பாடுபட்டு வருகின்றது. பெண்கள் உரிமைப் போராட்டம் உலகளவில் நடைபெற்று வருகின்றது. சட்டத்தின் ஆட்சி, உலகளாவிய மனித உரிமைகள் ஆகிய இரண்டின் அடிப்படையில் பெண்கள் போராட்டம் நடைபெற்று வருகின்றது. இதற்காக உலக அளவில் அனைத்துப் பெண்களும் ஒன்று திரண்டு, தங்களது உரிமைகளை நிலைநாட்ட வேண்டுமென வேண்டுகோள் விடுத்துப் பணியாற்றி வருகின்றனர். பெண்களுக்குத் தீங்கு விளைவிக்கும், மரபுகள், நடைமுறைகள் மற்றும் சட்டங்கள் ஆகியவற்றை ஒழிக்க வேண்டுமென்கின்றது இந்த அமைப்புக்கள். எனவே பெண்கள் மனிதாபிமான முறையில் சமத்துவமாக வாழ வேண்டுமென்றும், இது உலகில் எல்லாப் பகுதிகளிலும் எல்லா நேரங்களிலும் இருக்க வேண்டும் என்பதற்காகவே இந்த அமைப்புக்கள் பாடுபட்டு வருகின்றன.

## 8.5 பெண் உரிமைகள்

உலக மனித உரிமைகள் என்பதில் பெண்கள் மற்றும் சிறுவர்கள் உரிமைகளும் அடங்கும். இவர்கள் உரிமையானது பிரிக்க முடியாதது. மனித உரிமைகள், சேர்ந்தே இருக்கக்கூடியது. தனித்தனியாகப் பிரிக்க முடியாது. பெண்கள் முழுஅளவிலும், சமமாக அனைத்து அரசியல், சிவில், பொருளாதார, சமூக, கலாச்சார நடவடிக்கைகளில் கலந்து கொள்ள வேண்டும் என்பதுவும், பாலின வேறுபாடின்றி உலகச் சமுதாயத்தில் தேச. வட்டார, பன்னாட்டு அளவில் அனைத்து இடங்களிலும் சமமாக நடத்தப்படவேண்டும் என்பது வியன்னா பெண்கள் மாநாட்டின் குறிக்கோள் என பிரகடனப்படுத்தியுள்ளது.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
5. பெண்களின் உரிமைக்கு ஐ.நா சபையின் பங்கினை கூறுக.

பெண்கள் உரிமை குறித்து ஐ.நா. சபைச் செயலர் குறிப்பிட்டது யாதெனில், வீட்டில் வன்முறை பெண்களுக்கு அதிக அளவில் ஏற்பட்டு வருவதாகக் கூறுகின்றார். பெண்கள் நிலை குறித்து 10 நாடுகளில் ஆய்வு செய்யப்பட்டதில், 17 விழுக்காடு முதல் 38 விழுக்காடு வரை பெண்கள் தங்களது கணவர்களது வன்முறைக்கு ஆளாகியுள்ளனர் என்கிறார். பீஜிங் மாநாட்டுத் தீர்மானத்தில் பெண்களுக்கு எதிராக இழைக்கப்படும் வன்முறை மனித உரிமைக்கு எதிரான வன்முறை என்றும், இது சமத்துவம், வளர்ச்சி, அமைதி ஆகியன ஏற்படுவதற்குரிய தடைக்கல் என்கின்றது. நாடுகள் பலவற்றில் பெண்களுக்கு எதிரான வன்முறை நடைபெறுவதைச் சகித்ததுக் கொண்டு வாழா இருந்த நிலை 1994 ஆம் ஆண்டு முதல் பல நாடுகள் பெண்கள் நிலையை மேம்படுத்த பல குழுக்களை ஏற்படுத்த ஆரம்பித்துள்ளன.

பெண்கள் மீதான வன்முறை என்பது பிறந்தது முதலே ஆரம்பமாகிவிட்டது எனலாம் அல்லது கருவிலேயே அரம்பமாகிவிடுகின்றது. சமூகத்தில் ஆண் குழந்தையைத்தான் எதிர்பாக்கிறார்கள். அப்போது பெண் குழந்தை என்று தெரிந்து விட்டால், அந்தப் பெண் குழந்தை புறக்கணிக்கப்படுகின்றது. சில சமூகங்களில் பெண் குழந்தை இல்லாமல் ஆக்கும் மோசமான நடவடிக்கைகளும் இதில் அடங்கும். மனதளவிலும், உடலளவிலும் உலக அளவில் பக்குவப்படுமுன்னரே பெண் குழந்தைகளை சிறு வயதிலேயே திருமணம் செய்து வைக்ககின்றனர். இதுதவிர பாலியல் பலாத்காரம், வீட்டில் சித்திரவதை, கற்பழிப்பு போன்ற செயல்களாலும் பாதிக்கப்படுபவர்கள் பெண்கள்.

இராதிகா குமாரசாமி என்பார் 1994 ஆம் ஆண்டு தயாரித்த பெண்கள் குறித்த தனி அறிக்கையில், பெண்கள் மூன்று வகைகளில் பாதிக்கப்படுகின்றனர் என்கிறார். முதலாவதாக, குடும்பத்தில் அதாவது மரபார்ந்த நடவடிக்கைகள், பெண் குழந்தைகளை அழித்தல் மற்றும் வீட்டில் சித்திரவதை ஆகியனவாகும். இரண்டாவதாக, சமூகத்தில் பாலியல் பலாத்காரம், பெண்கள் விற்பது, மோசமான செயல்களில் ஈடுபட வைத்தல், பெண்களிடம் அதிக வேலை வாங்குதல், குறைந்த ஊதியம் அதிக வேலை மற்றும் அரசின் காவலில் இருக்கும் பெண்கள் மீதான வன்முறை, போன்றவையாகும் என்கிறார்.

பன்னாட்டளவில் பெண்கள் மீதான வன்முறையைக் களைவது குறித்த முதல் மாநாடு 1994ம் ஆண்டு நடைபெற்ற முதல் மனித உரிமைக் பாதுகாப்பு மாநாடாகும். இந்த மாநாடு பாலியல் அடிப்படை கொடுமை என்பதை வரையறுத்தது. பாலியல் அடிப்படை வன்முறையினால் உடல் அளவிலும், பாலியல், உளவியல் வகையிலும் பெண்கள் மிகவும் பாதிக்கப்படுகின்றனர். வலுக்கட்டாயப்படுத்துதல், அவர்களை விரட்டுதல், புறக்கணித்தல் போன்ற செயல்களால் பெண்கள் பல வகைகளிலும் பாதிப்பிற்குள்ளாகின்றனர். இந்த மாநாட்டில் மூன்று பிரிவுகளில் பெண்கள் பாதிக்கப்படுகின்றனர் என்பதை வரையறுத்துள்ளது. இவை ஏற்கனவே இராதிகா குமாரசாமி வரையறுத்ததுதான் ஆகும்.

உலக மனித உரிமை மாநாடு 1993ஆம் ஆண்டு வியன்னா நகரில் நடைபெற்றது. இந்த மாநாட்டில் பெண்களுக்கு எதிராக நடந்துவரும் வன்மை மற்றும் பிற கொடுமைகளை விரிவாக விவாதித்த பின்னர் ஐ.நா. அவையும் அதன் உறுப்பினர் நாடுகளும் கூட்டாகச் சேர்ந்து பெண்களுக்கு பொது வாழ்விலும் தனிநபர் வாழ்விலும் சந்திக்கும் வன்முறையைக் களைய முயற்சிக்க வேண்டும் எனத் தீர்மானத்தை நிறைவேற்றியது. பாலியல் பலாத்காரம், சுரண்டல், விபச்சாரம் போன்ற செயல்கள், கலாச்சார நடைமுறைகள் போன்றவை பெண்கள் சந்திக்கும் பிரச்சனைகளெனக் கூறியது.

பெண்களுக்கு எதிரான வன்முறை என்பது எல்லா நாடுகளிலும் நடைபெற்று வரக்கூடிய செயல். இது வளர்ந்த நாடுகளிலும் வளர்ந்து வரும் நாடுகளிலும் ஒரே மாதிரியாகத்தான் நடைபெற்றுக் கொண்டு வருகின்றது. ஆரம்பத்தில் இச்செயல்கள் அனைத்தும் தனியார் சம்பந்தப்பட்டதென கருதப்பட்டது. பின்னர் இவையெல்லாம் பொதுமக்கள் கொடுமைகளாக மாறிவிட்டன. அமெரிக்க ஐக்கிய

நாட்டின் ஒவ்வொரு 18 நிமிடங்களுக்கொருமுறை ஒரு பெண் உதை வாங்கிப் பாதிக்கப்படுகிறாள். இந்த மாதிரியான குடும்ப வன்முறை மூலமாக உடல் அளவில் காயங்கள் பெறுவதுடன், குழந்தை பெற சிக்கல்களை உருவாக்குவதாக கூறப்பட்டுள்ளது. 22லிருந்து 35 விழுக்காடு பெண்கள் அவசர சிகிச்சைப் பிரிவில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் இக்காரணத்திற்காகவே சேர்க்கப்படுகின்றனர். பல நாடுகளில் பெண்கள் அந்நாடுகளின் மரபார்ந்த நடவடிக்கைகளால் மிகவும் பாதிக்கப்படுகின்றனர். இவையெல்லாம் மனித உரிமை மீறல் செயல்களாகும்.

சம வேலைக்கு சம ஊதியம் என்பது ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒரு கோட்பாடு. ஆனால் ஆண் - பெண் என பாலினம் மூலம் இக்கோட்பாடு பின்பற்றப்படவில்லை. வேலை சமமாக மட்டும் இல்லை. ஆண்களைவிட அதிக வேலை செய்யக் கூடியவர்களாக பெண்கள் உள்ளனர். ஆனால் அவர்கள் பெறும் ஊதியம் குறைவு. 50 முதல் 80 விழுக்காடு ஊதியம்தான் பெறுகின்றனர் பெண்கள். ஆனால் அதே அளவு வேலை செய்யும் ஆண்கள் முழு ஊதியம் பெறுகின்றனர். இவ்வாறு வேலையின் ஊதியத்தில் பாகுபாடு காணப்படுகின்றது. கொரியா, சிங்கப்பூர், ஜப்பான் மற்றும் இந்தியா போன்ற நாடுகளில் பெண்கள் பெறும் ஊதியம் மிகவும் குறைவாகக் காணப்படுகின்றது. வளர்ந்த நாடுகளிலும் முழு ஊதியம் வழங்கப்படுவதில்லை. அந்த நாடுகளிலும் 10 முதல் 30 விழுக்காடு ஊதிய வேறுபாடு காணப்படுகின்றது. வளர்ந்து வரும் நாடுகளிலும் இலங்கையிலும் ஏறத்தாழ ஆண்களுக்கு இணையாக 96 விழுக்காடு பெண்களும் ஊதியம் பெறுபவர்களாக உள்ளனர்.

உலக தொழிலாளர் அமைப்பு, பெண்கள் தொழிற்சாலைகளில் பணிபுரிவது அதிகரித்துக் கொண்டே வருகின்றதென்றும், ஆனால் அவர்கள் பெறும் ஊதியம் ஆண்களைவிடக் குறைவானதென்றும் கருத்து கூறியுள்ளது. பெண்கள் செய்யும் வேலைக்கு முழு மதிப்புக் கொடுப்பதில்லை என்றும் குறைக்கபட்டுள்ளது. இந்தியாவில் 11.33 விழுக்காடு மொத்தத் தொழிலாளர்களில் பெண்கள் தொழிற்சாலைகளில் வேலை செய்கின்றனர் என ஒரு கணக்கெடுப்பு கூறுகின்றது. பெண்கள் தையல்காரர்களாக காய்கறி

விற்பனையாளர்களாக, நெசவாளர்களாக, தூய்மைப் பணியாளர்களாக மற்றும் கடும் பணிகளிலும் ஈடுபட்டு வருகின்றனர்.

### 8.6 கிராமப்புற பெண் தொழிலாளர்கள் பாதுகாப்பு :

கிராமப்புற பெண் விவசாயத் தொழிலாளர்களின் உரிமைகள் பற்றி பலவிதக் கருத்துக்கள் உள்ளன. ஒருமித்த கருத்து இன்னும் உருவாகவில்லை. கிராமப்புறத்திலுள்ள பணக்காரர்கள் ஏழை பெண் விவசாயத் தொழிலாளர்களின் உரிமைகளுக்கு மதிப்பு அளிக்க மறுக்கின்றனர். அவர்களுக்கு எதிராகக் கூட செயல்படுகின்றனர் எனலாம். எனவே அரசாங்கம் ஏழை பெண் விவசாயத் தொழிலாளர்கள் நலனில் அக்கறை எடுத்து, தனிச் சட்டம் ஒன்று கொண்டு வந்து, அவர்களின் நலனைக் காக்க வேண்டும். விவசாயத் தொழில் பெரும்பாலும் ஆண்களால் செய்யப்படக் கூடியவையாக உள்ளன. பெண் விவசாயத் தொழில் விவசாயத்தின் துணைச் செயலாகத்தான் கருதப்படுகின்றது. ஆனால் அத்துணைச் செயல்களில் ஈடுபடும் பெண்கள் ஆண்களைவிட அதிகம். இந்தியா விவசாய நாடாக இருப்பதால், எல்லா மாநிலங்களிலும் அதிக அளவில் பெண்கள் விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் பெரும்பாலும் தாழ்த்தப்பட்ட, பழங்குடியினர் வகுப்பைச் சார்ந்தவர்களாக உள்ளனர். பொதுவாக 50 விழுக்காட்டிற்கு மேலாக பெண் விவசாயத் தொழிலாளர்கள் தாழ்த்தப்பட்ட, பழங்குடியினர் வகுப்பைச் சார்ந்தவர்களென 1991ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட மதிப்பாய்வு கூறுகின்றது. இந்நிலை இன்னும் மேம்பட்டதாகத் தெரியவில்லை.

**முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.**
**5. கிராமப்புற பெண்களின் நிலையை கூறுக.**

கிராமப்புறங்களில் பெண்கள் குடிதண்ணீர் எடுத்துவர பல மைல்கள் நடந்து சென்று எடுக்கக் கூடிய நிலை நிலவுகின்றது. கிராமப்புற இனப் பாகுபாட்டால், உயர் வகுப்பினர் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு பல வகைகளில் பிரச்சனைகளைக் கொடுத்து வருகின்றனர். உயர் வகுப்பினர் வைத்திருக்கும் கிணறுகளில் தண்ணீர் எடுக்க வேண்டுமாயின், இலவசமாக சில வேலைகள் செய்தால்தான் தண்ணீர் பெறமுடியும் என்ற நிலை உள்ளது. அரசாங்கம் தாழ்த்தப்பட்டோருக்கு மேல்நிலைத் தொட்டி மூலம் தண்ணீர் வழங்க வசதி செய்துள்ளது. ஆனால் அங்கு பெரும்பாலும் நீர் இறைப்பு இயந்திரம் பழுதாகியே இருக்கும். எனவே தண்ணீர் பெற இலவச வேலை செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. தவிர கிராமப்புற நிலக்கிழார்கள் வரைமுறையின்றி, அதர்ம நடவடிக்கைகளிலும் இறங்கிவிடுகின்றனர். பாலியல் பலாத்காரம், கற்பளிப்பு போன்ற பொல்லாத செயல்களிலும், ஈடுபடுகின்றனர். இவ்வாறு பாதிக்கப்பட்ட பெண்கள் காவல் நிலையங்களில் முறையீடு செய்தாலும்,

தவறு செய்தவர்கள் தண்டிக்கப்படுவதில்லை. மாறாக இப்பெண்கள் மறுபடியும் பாலியல் பலாத்காரத்திற்கும் இலக்காகி விடுக்கின்றனர் என்ற குற்றச்சாட்டு உள்ளது. இந்தியச் சட்டத்தில் கற்பளிப்புக்கெதிரான சட்டங்கள் சீராக இல்லை. எனவே கிராமப்புற பெண் விவசாயத் தொழிலாளர்களக்கு அல்லல்கள் அதிகம். இவற்றை அரசாங்கம் கவனத்தில் கொண்டு வந்து, ஆவன நடவடிக்கைகளை விரைவில் கொண்டு வந்து, அவர்களின் அல்லல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும்.

பெண்கள் சமத்துவ உரிமைக்காக, பெண்கள் வேலை வாய்ப்பு மற்றும் சம வேலைக்கு சம ஊதிய மாநாடு 1951 ல் நடைபெற்றது. பின்னர் 1958 ஆம் ஆண்டு பணிப் பாகுபாடு மற்றும் தொழில் மாநாடு, 1960 ஆம் ஆண்டு மெக்சிகோ மாநாடு ஆகியன பெண்கள் உரிமைக்காக போராட்டம் நடத்திய மாநாடுகள் என்று கூட கூறலாம். இவற்றில் பெண் உரிமை பற்றி விரிவாக விவாதம் செய்யப்பட்டன.

இந்தியாவைப் பொறுத்தவரை பெண் உரிமை பற்றிய பிரச்சனை தாமதமாக வந்தது என்று கூடக் கூறலாம். ஏனெனில் 1975 ஆம் ஆண்டிலிருந்துதான் பெண்கள் பிரச்சனைகள் மக்கள் மத்தியில் எழ ஆரம்பித்தது. பின்னர் அவற்றில் மத்திய அரசாங்கம் தனது கவனத்தைத் திருப்பியது. 1975 ஆம் ஆண்டு பெண்களுக்காகவே ஒரு அமைச்சகம் உருவாயிற்று. இந்த அமைச்சகம் கீழ்க்கண்ட விஷயங்களில் கவனம் செலுத்த ஆரம்பித்தது. அவை,

1. குழந்தை திருமண எதிர்ப்புச் சட்டம் 1929.
2. உடன்கட்டடை தடைச் சட்டம் 1829, உடன்கட்டை தடுப்புச் சட்டம் 1987.
3. இந்துத் திருமணச் சட்டம் 1955.
4. இந்து தத்தெடுப்பு மற்றும் பராமரிப்புச் சட்டம் 1958.
5. பெண்கள் மோசமாக நடத்துதலைத் தடுக்கும் சட்டம் 195. (Immoral Traffic Prevention)
6. இந்து பிரிவினைச்சட்டம் 1961.
7. வரதட்சணை ஒழிப்புச் சட்டம் 1961.
8. பிரசவ நன்மைச் சட்டம் 1961.
9. முஸ்லீம் பெண்கள் வரதட்சணை தடுப்புச் சட்டம் 1986.

இந்திய அரசியலமைப்பு பிரிவு 14ல் சட்டத்தின் முன் அனைவரும் சமம் என்பதையும் பாலியல் அடிப்படையில் பாகுபாடு காட்டக்கூடாது. (பிரிவு 15) என்பதையும், சம வாய்ப்பு அனைவருக்கும் வழங்கப்படவேண்டும் (பிரிவு 16) என்பதையும் பிரிவு(34) சம நீதி என்பதுவும், ஆண், பெண் இருபாலருக்கும் சம ஊதியம் (D பிரிவு) என்பதுவும் சொத்துரிமை பெண்களுக்கு (பிரிவு 300A) வழங்கப்பட வேண்டுமென்றும் அரசியலமைப்பின் மூலம் பெண் உரிமைக்கு உத்திரவாதம் அளிக்கப்பட்டுள்ளன.

## 8.7 தொகுப்புரை:

பெண் உரிமை மீறல் என்பது இங்கல்ல, உலகம் முழுவதும் நடைபெற்று வரக்கூடிய செயலாகும். எல்லா நாடுகளிலும் இது நடைபெற்று வருகின்றது. எனவே ஒவ்வொரு அமைப்பும் அரசாங்கமும் பொது மக்களும் சேர்ந்து இப்பிரச்சனைக்கு முடிவு கட்ட வேண்டும். பொருளாதார வித்தியாசங்கள் பற்றிய புகார்கள் வந்தால், அவற்றைக் கவனித்து, பொருளாதார சமத்துவம் இருபாலருக்கும் வரும் வகையில் செய்ய வேண்டும். எந்தவித பாகுபாடும் இன்றி, பற்றுதலின்றி, ஒருதலைபட்சமின்றி பொதுவாக சமத்துவம் பெற பெண்களுக்கு உதவ வேண்டும். இந்தியாவில் பெண்கள் நிலை இன்று அதிக அளவில் மேம்பட்டு இருந்தாலும், சமத்துவ நிலை அடையவில்லை. எனவே மக்களாட்சியில் சமத்துவக் கோட்பாட்டை ஆண் பெண் இருபாலரும் பெற்று, மக்களாட்சியைத் திறம்பட நடத்த வேண்டும்.

தாழ்த்தப்பட்டோர் மீது இழைக்கப்படும் கொடுமைகள் இன்னும் முடிந்தபாடில்லை தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே வருகின்றன. தாழ்த்தப்பட்டோர் மீதான கொள்கைகள் எனக் கருதாது மனித உரிமைகள் மீறல் என இவற்றைக் கருத வேண்டும். அரசியலமைப்பின் மூலம் கொடுமைகளுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்ட பின்னரும் தொடர்ந்து நடைபெறுவதால், இதன் நிலையை என்னவென்று கூறுவது? சட்டங்கள் செயல்படுத்தப்படுவதில் சட்டத்தின் ஆட்சியா? என்ற நிலையும் ஏற்படுகின்றது. எனவே மனித உரிமை மீறல் வராதவாறு பார்த்துக் கொள்ள அரசாங்கமும், சிவில் சமூகமும் இதில் கவனமாக இருக்க வேண்டும். ஒட்டு மொத்தத்தில், ஒப்பீடு செய்தால் முன்னர் காலத்தைவிட அளவும், எண்ணிக்கையும் குறைந்து கொண்டே வருகின்றது. ஆயினும், நீக்கப்பட்டதாகத் தெரியவில்லை. மனிதாபிமான சமூகத்தில், வேற்றுமை, சமத்துவமின்மை, கொடுமை இழைத்தல் ஆகியன இருக்கக்கூடாது. எனவே தாழ்த்தப்பட்டோர் மேம்பாட்டிற்கு ஆவன நடவடிக்கைகளை அரசாங்கம்

மட்டுமின்றி, பிற அறக்கட்டளைகள் போன்றவையும் உதவி செய்ய முன்வர வேண்டும்.

**8.8 முக்கிய வார்த்தைகள் :**

செல்வாக்கு,பாதுகாப்பு அடிமைகள்,சுரண்டல்,சட்டம்,மனப்பான்மை, பழங்குடியினர்கள்,

**8.9 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான பதில்கள் :**

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 8.2ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 8.3 ல் அறிக

வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 8.4 ல் அறிக

வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 8.5 ல் அறிக

வினா எண்.5 இந்த வினா விடையை பகுதி எண் 8.6 ல் அறிக

**8.10 மாதிரி வினா :**

1. இந்தியாவில் தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினர் நிலையினை விவரி.
2. தாழ்த்தப்பட்டோர், பழங்குடியினார் உரிமைகளை விவரி.
3. பெண் உரிமைகள் பற்றிய ஒரு கட்டுரை எழுது.

**8.11 பரிந்துரை நூல்கள் :**


1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.
2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.
3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.
4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.
5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.
6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

# அலகு - 9

# சிறுவர்கள் அகதிகள் மற்றும் இடம்பெயர்ந்தோர் உரிமைகள்

## அறிமுகம்

சிறுவர்களுக்கு பன்னாட்டு அளவில் பாதுகாப்பு அளிக்கவல்லதாக உலக மனித உரிமைகள் மகாசாசனப் பிரகடனம் 1948 அமைந்துள்ளது. தாய்மார்களும் குழந்தைகளுக்கு சிறப்புக் கவனமும், உதவுதலும் அவசியமெனக் கூறுகின்றது. குழந்தை திருமணமாகிப் பிறந்தாலும் சரி, திருமணம் ஆகாமல் பிறந்தாலும் சரி, குழந்தை குழந்தைதான். எனவே குழந்தைக்கு ஒரே மாதிரியான சமூகப் பாதுகாப்பு வழங்க வேண்டுமெனக் கூறுகின்றது.

## நோக்கங்கள்

1. குழந்தை தொழிலாளர்களின் நிலையை கூர்நோக்குதல்.
2. குழந்தை தொழிலாளர்களை ஒழிப்பதற்கு அரசாங்கம் மற்றும் ஐ.நா சபை மேற்கொண்ட நடவடிக்கைகளை கற்றல்.
3. அகதிகள் மற்றும் இடம்பெயர்ந்தோர் நிலை மற்றும் உரிமைகளை அறிதல்

வடிவ அமைப்பு

உட்கூறுகள்

9.1 சிறுவர்களும் மனித உரிமைகளும் ஒப்பந்தம் 1976

9.2 ஐ.நா பன்னாட்டுத் குழந்தைகள் அவசர நிதி

9.3 இந்திய அரசியலமைப்பில் சிறுவர்கள் உரிமை

9.4 குழந்தைகள் அடகு வைக்கும் சட்டம் 1933

9.5 1948 ம் ஆண்டின் தொழிற்சாலைகள் சட்டம்

9.6 கொத்தடிமை நீக்கச் சட்டம் 1976

9.7 அகதிகள் மற்றும் இடம் பெயர்ந்தோர் உரிமைகள்

9.8 பன்னாட்டு அகதிகள் சட்டத் தோற்றமும் வளர்ச்சியும்

9.9 இனப்படுகொலை

9.10 தொகுப்புரை

9.11 முக்கிய வார்த்தைகள்ஸ

9.12 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறை சோதனைகளுக்கான வினா பதில்கள்.

9.13 மாதிரி வினாக்கள்

9.14 பரிந்துரை நூல்களை

## 9.1 சிறுவர்களும் மனித உரிமைகளும் ஒப்பந்தம் 1976:

சிறுவர்களும் குழந்தைகளும் பொருளாதார, சமூகச் சுரண்டல்களிலிருந்து பாதுகாப்பு பெற வேண்டும். சிறுவர்கள் பணியாற்றும் பணியிடம் கெடுதல் விளைவிப்பதாக இருந்தால் அவர்களது உடல்நலம், மனநிலை, ஆகியன பாதிக்கப்படுவதால், அவர்கள் வளர்ச்சியும் பாதிக்கப்படும். எனவே பணியானது கெடுதல் விளைவிப்பதாயின் அது தண்டிக்கப்பட வேண்டும். அரசாங்கங்கம் சிறுவர்கள் பணியில் சேர்வதற்கு குறைந்தபட்ச வய்து வரம்பும் நிர்ணயிக்க வேண்டும். அவ்வாறு குறைந்த வயது குழந்தைகள் பணியில் இருந்தால், பணியில் சேர்ந்தவர்களைத் தண்டிக்க வேண்டும். அதற்குரிய சட்டங்களை அரசாங்கம் நிறைவேற்ற வேண்டும். குழந்தைகள் தங்களது உரிமைகளை உணர வேண்டுமாயின் அரசாங்கங்கள் கீழ்க்கண்ட வசதிகளைச் செய்து தர வேண்டும். அவை.

1. ஆரம்பக் கல்வி அனைவருக்கும் கட்டாயமாக்கப்பட வேண்டும். இலவசமாக அக்கல்வி பெற வழிவகை செய்ய வேண்டும்.
2. இரண்டாம் நிலைக் கல்வி பல்வேறு முறைகளில் இருப்பதால் இது குழந்தைகளுக்கு எளிதில் கிடைக்க வேண்டும். தொழில் நுட்ப வேலைகள், வேலைவாய்ப்பு வழிக் கல்வி ஆகியன குழந்தைகள் பெற வழிவகை செய்யப்பட வேண்டும். இக்கல்வி படிப்படியாக அனைவருக்கும் இலவசமாக கிடைக்க வழிவகை செய்யப்பட வேண்டும்.
3. திறமையின் அடிப்படையில் சமமாக குழந்தைகள் அனைவருக்கும் உயர்கல்வி கிடைக்க வேண்டும்.
4. அடிப்படைக் கல்வி அனைவரும் பெற ஏற்பாடு செய்யப்பட வேண்டும். அடிப்படை கல்வி பெற முழுமையாகப் படிக்காத அனைவரும் அதனைப் பெற துரிது நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்.

## 9.2 ஐ.நா. பன்னாட்டுக் குழந்தைகள் அவசர நிதி (UNICEF) :

ஐக்கிய நாடுகள் சபை குழந்தைகள் நல மேம்பாட்டிற்கென 1948ஆம் ஆண்டு டிசம்பர் 11ம் தேதி குழந்தைகள் அவசர நிதி என்ற நிதியை ஏற்படுத்தி உள்ளது. இந்தியாவின் நோக்கம் குழந்தைகளும் சிறுவர்களும் கல்விபெற உதவும் நோக்கில் ஏற்படுத்தப்பட்டது. பல நாடுகளில் சிறுவர்களின் கல்வி மிகவும் குறைவாக

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
1. ஐ.நா பன்னாட்டுத் குழந்தைகள் அவசர நிதி பற்றி குறிப்பு வரைக.

இருப்பதால் கல்வி மேம்பாடு அடைய இந்நிதி உருவாக்கப்பட்டது. இந்நிதி எல்லாக் குழந்தைகளுக்கும் கிடைக்கக் கூடியது. ஜாதி, பால், தேசம், அரசியல், இனம் ஆகிய அனைத்தையும் கடந்து, அனைத்துக் குழந்தைகளுக்குமாக உருவாக்கப்பட்டது. 1953ம் ஆண்டு முதல் வளர்ந்து வரும் நாடுகளிலும் குழந்தைகளின் வளர்ச்சிக்கு செலவிடுகின்றது. 1953ம் ஆண்டிற்குப் பின்னர் இந்த நிதியின் பெயர் ஐ.நா. குழந்தைகள் நிதி என்று மாற்றப்பட்டது. ஆயினும் UNICEF என்ற பெயரை அப்படியே தக்க வைத்துக்கொண்டது. ஐ.நா. அவையின் பொருளாதார சமூக அமைப்பு இதன் செயல்களைக் கண்காணித்து புனராய்வு செய்து வருகின்றது. 1979ம் ஆண்டு உலக குழந்தைகள் தினமாகக் கொண்டாடப்பட்டது. இதன் மூலம் அரசாங்கங்களும் பொதுமக்களும் சிறுவர்கள் மீது அதிக அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டுமென்ற விழிப்புணர்வை ஏற்படுத்தியது. சமூக, பொருளாதார வளர்ச்சித் திட்டங்களில் சிறுவர்கள் நன்மைக்காக நிரந்தர வளர்ச்சிக்காக இருக்க வேண்டுமென்பதுவும் வலியுறுத்தப்பட்டது. தேசிய அளவிலும் பன்னாட்டு அளவிலும் சிறுவர்களின் வளர்ச்சி அத்தியாவசியம். அதற்குத் தனிக்கவனம் செலுத்தப்படவேண்டுமென்று உலகக் குழந்தைகள் தினம் வலியுறுத்தியது. 1959ம் ஆண்டு குழந்தைகள் உரிமை ஆண்டாகத் தொடங்கி 1979ஆம் ஆண்டு உலகக் குழந்தைகள் ஆண்டாக கொண்டாப்பட்டது. தொடர்ந்து 20 ஆண்டுகள் உலகக் குழந்தைகள் ஆண்டாக கொண்டாடப்பட்டது. தேசிய அளவிலும், பகுதி வாரியாகவும், பன்னாட்டு அளவிலும் இந்த உலக சிறுவர் ஆண்டு கொண்டாடப்பட்டது. இதற்கான நிதி உதவியை ஐ.நா. குழந்தைகள் நிதி வழங்கியது. இவ்வாறாக குழந்தைகள் நலனில் அக்கறை எடுத்து ஆர்வமாகவும் அனைத்துத் தரப்பினரும் நடவடிக்கைகளை எல்லா நாடுகளும் எடுக்க ஆரம்பித்தன.

பன்னாட்டு அளவில் குழந்தைகள் மேம்பாட்டிற்காக முதன்முதலில் சர்வதேச சங்கம் நடவடிக்கைகளைத் தொடங்கியது. 1934ம் ஆண்டு ஜெனிவாவில் குழந்தைகள் மாநாடு நடைபெற்றது. குழந்தைகள் உரிமைப் பிரகடனம் ஒன்று பிறப்பிக்கப்பட்டது. இதன் பின்னர் 1948ம் ஆண்டு ஐ.நா. உலக மனித உரிமை மகாசாசனப் பிரகடனம் உருவாயிற்று. சிறுவர்கள் பொருளாதார ரீதியாக வளர்வதற்குரிய உரிமைகளை இந்தப் பிரகடனம் வரையறுத்தது. குழந்தைகள் உரிமைப் பிரகடனம் ஒன்று மறுபடியும் 1959ம் ஆண்டு நவம்பர் மாதம் 20 ஆம் நாள் ஐ.நா. சபை பிறப்பித்தது. இதனைத்

தொடர்ந்து 1979ம் ஆண்டு சிறுவர்கள் ஆண்டாக அறிவித்துக் கொண்டாடியது. இம்மாநாடுகளின் சமூக, பொருளாதார, கலாச்சார மற்றும் சிவில் அரசியல் உரிமைகள் சிறுவர்களுக்கு வழங்க வேண்டுமென்ற அவசியத்தையும் வலியுறுத்தின.

### 9.3 இந்திய அரசியலமைப்பில் சிறுவர்கள் உரிமை :

இந்திய அரசியலமைப்பின் 24வது பிரிவின்படி, சிறுவர்கள் 14 வயதிற்குக் குறைவாக உள்ளவர்கள் அபாயம் விளைவிக்கும் தொழில்களில் பணிபுரியத் தடை விதித்துள்ளது. குழந்தைகள் அவர்களது வயதிற்கொப்பதில்லா பணிகளில் பொருளாதாரத் தேவைக்காக கட்டாயமாகப் பணியில் அமர்த்தாதவாறு அரசாங்கத்திற்கு வழிகாட்டு நெறிக்கொள்கைகளில் 392வது அரசியலமைப்பின் பிரிவு கூறுகின்றது. சிறுவர்கள் ஆரோக்கியமாகவும், சுதந்திரமாகவும் அந்தஸ்தோடு இருக்க வாய்ப்புகள் வழங்கப்பட்டு அவர்கள் அறநெறி மற்றும் பொருட்கள் ஆகிய சுரண்டல்களிலிருந்து விடுபடவேண்டும்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. இந்திய அரசியலமைப்பு யில் சிறுவர் -களுக்கு அளிக்கப்பட்டுள்ள உரிமைகளை கூறுக.

குழந்தைகளுக்கு இலவசக் கட்டாயக்கல்வி 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு வழங்க வேண்டும் என அரசியலமைப்பின் பிரிவு 45 கூறுகின்றது. இது அரசியலமைப்பு செயல்படுத்தப்படும் முதல் 10 ஆண்டுகளில் நிறைவேற்றப்பட வேண்டும் என்றும் கூறுகின்றது. ஆகவே குழந்தைகள் மேம்பாட்டிற்கு கல்வி வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவத்தை வழிகாட்டு நெறிக் கொள்கைகள் கூறியிருக்கின்றது. இதனை அரசாங்கம் செயல்படுத்தியிருந்தால் அனைவரும் கல்வி கற்றிருப்பர். 100 விழுக்காடு கல்வியைப் பெற்றிருக்கலாம்.

இந்திய அரசியலமைப்பு உருவாக்கப்படுவதற்கு முன்னரே குழந்தைகள் வளர்ச்சிக்குப் பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. குறிப்பாக இச்சட்டங்கள் பெரும்பாலும் சிறுவர்கள் பாதுகாப்பு சட்டங்களாகவே அமைந்துள்ளன. 1938ம் ஆண்டு சிறுவர்கள் வேலைவாய்ப்புச் சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி சிறுவர்கள் 12 வயதிற்குக் குறைவாக உள்ளவர்கள் பீடி, மரவேலை போன்ற தயாரிப்பு செயல்களில் ஈடுபட தடை விதித்தது. இதே போல் 14 வயதிற்குட்பட்ட சிறுவர்கள் போக்குவரத்து கம்பெனிகளில் அதாவது இரயில்வே போன்றவற்றில் சுமை தூக்குதல், பயணிகளைத் தூக்கிச் செல்லுதல் ஆகியன தடை விதிக்கப்பட்டது. துறைமுகங்களில் பொருட்களை ஏற்றி, இறக்கும் செயல்களில் ஈடுபட தடை விதித்தது. இந்தச் சட்டம் இன்று 1986ம் ஆண்டு குழந்தை தொழிலாளர் சட்டமாக உள்ளது. இந்தச் சட்டத்தின்படி 14 வயதிற்கும் குறைவான குழந்தைத்

தொழிலாளர்கள் கீழ்க்கண்ட தொழில்களில் ஈடுபட தடை விதித்துள்ளது. பீடி தயாரித்தல், ஜமுக்காள நெசவு, சிமெண்ட் தொழிற்சாலை, சிமெண்ட்டை சாக்கில் அடைத்தல் உள்ளிட்ட பணிகள், வெடிமருந்து தொழிற்சாலைகள், தீப்பெட்டித் தொழில்கள், மைக்காத் தொழில், சோப்புத் தயாரித்தல், கட்டிட வேலைகள் ஆகியனவாகும்.

### 9.4 குழந்தைகள் அடகு வைக்கும் சட்டம் 1933:

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா. 3. குழந்தைகள் அடகு வைக்கும் சட்டம் 1933 ஒரு சிறுகுறிப்பு தருக.

தொழிலாளர் நல அரசுரிமை ஆணையம் தனது விசாரணையில் சென்னை, அகமதாபாத், அமிர்தசரஸ் ஆகிய நகரங்களில் குழந்தை தொழிலாளர்களை அடகு வைத்து முன்பணம் பெறும் நடைமுறையைக் கண்டு திடுக்கிட்டது. ஏனெனில், எழுத்துப்பூர்வமாகவும், எடுத்துப்பூர்வமாகயில்லாமலும் ஒப்பந்தங்கள் செய்து கொண்டு குழந்தைகளை அடகு வைத்தனர். இதனை இந்த ஆணையம் கடுமையாகக் கண்டித்தது. பணிபுரிந்த குழந்தை தொழிலாளர்களின் நிலையும் மோசமாக இருந்தது. வேலையிடங்கள், பணிக்கட்டுப்பாடுகள் ஆகியன மோசமானதாக இருந்தன. எனவே, அரசாங்கம் இந்தக் கொடுமையை முதலில் ஒழிக்க வேண்டும் எனவும், இந்த மாதிரியான செயல்களில் ஈடுபடும் பெற்றோர்களுக்குக் கடுமையான தண்டனையும் விதிக்க வேண்டும் என்று வலியுறுத்தியது. ஏனெனில் குழந்தைகளைப் பொருட்கள் மாதிரி பாவிக்கும் நிலை கொடுமையான ஒன்றல்லவா?

### 9.5ஒ 1948ம் ஆண்டின் தொழிற்சாலைகள் சட்டம்:

தொழிற்சாலைகள் சட்டம் 1948ன்படி முதலில் இளைஞர் என்பதற்கு சிறுவர் அல்லது வயது வராதவர் என்று முதலில் வரையறை செய்கின்றது. பின்னர் குழந்தைகள் எந்தெந்த வேலைகளெல்லாம் அதாவது எந்த மாதிரியான தொழிற்சாலைகளில் வேலை செய்யக் கூடாது என்கின்றது. பிரிவு 22(2)ன் கீழ் இயந்திரங்களை சுத்தப்படுத்தவோ, எண்ணெயிடவோ அல்லது இயந்திரப் பாகங்களை பிரித்து சேர்க்கும் தொழில்களில் ஈடுபடவோ கூடாது என்கிறது. அபாயம் தரும் இயந்திரங்களில் வேலை செய்வதை பிரிவு 23 தடுக்கின்றது. பெண்களும், சிறுவர்களும் பருத்தித் தொழிற்சாலைகளில் பணிபுரிவதைத் தடை

செய்கின்றது. பிரிவு 27, பின்னர் சிறுவர்கள் பணி செய்யும் நேரம் வரையறுக்கப்பட்ட மணி நேரத்திற்கு மேல் இருக்கக் கூடாது என்றும், இரவில் வேலை செய்ய அனுமதிக்கக் கூடாது என்றும், தொழிற்சாலைகளில் இரண்டு தடவை (Shift)களில் தான் இருக்க வேண்டும் என்றும் வரையறை செய்துள்ளது. சிறுவர்கள் பணிபுரியும் தொழிற்சாலைகளில் சிறுவர் தொழிலாளர்களைப் பற்றிய விபரங்கள் அடங்கிய குறிப்பேடு (Register) வைத்திருக்க வேண்டும். இக்குறிப்பேட்டை தொழிற்சாலை ஆய்வாளர்கள் எந்த நேரத்திலும் சரிபார்க்க அதிகாரம் கொண்டவர்கள். தவறான விபரங்கள் இருந்தால் தண்டனைக்குள்ளாவார்கள். தொழிற்சாலை நடத்தும் தொழில் அதிபர்கள். அக்குறிப்பேட்டில் அடங்கும் விபரங்களாவன.

1. தொழிற்சாலையில் பணிபுரியும் ஒவ்வொரு குழந்தை தொழிலாளரின் பெயர்
2. வேலையின் தன்மை
3. குழுவாக வேலை இருந்தால், அதைத் தெரிவிக்க வேண்டும்.
4. ஷிப்ட் முறையில் பணிபுரிந்தால் அதன் விபரம்
5. வேலைக்குரிய தகுதி சான்றிதழ்கள் ஆகியன பராமரிக்கப்பட்ட வேண்டும்.

### 1952ம் ஆண்டின் சுரங்கச் சட்டம் :

சுரங்கத்தில் குழந்தைத் தொழிலாளர்கள் பணிபுரிவதை இச்சட்டம் தடை செய்துள்ளது. இதுமாதிரி 1952ம் ஆண்டு வணிகக் கப்பல் சட்டம் கப்பல்களில் குழந்தைத் தொழிலாளர்கள் பணிபுரிவதை தடை செய்துள்ளது.

### 9.6 கொத்தடிமை நீக்கச் சட்டம் 1976 :

கட்டாயமாகப் பணிபுரிய வைப்பதைத் தடுக்க இச்சட்டம் குழந்தை தொழிலாளர்கள்பால் கொண்டுவரப்பட்டது. குழந்தைகளைச் சித்திரவதை செய்து பிச்சை எடுக்கும் தொழிலில் ஈடுபட வைத்தல், மோசமான அறநெறிக்கு மீறிய செயல்களில் குழந்தைத் தொழிலாளர்களைக் கட்டாயப்படுத்தி வேலை செய்ய வைத்தல் போன்றவற்றை இச்சட்டம் தடுத்துள்ளது. கொத்தடிமை என்று சொல்லும்போதே அது மனிதாபிமானமற்ற செயலாக உள்ளது. இந்திய சுதந்திரத்திற்குப் பின்னரும், கொத்தடிமை இருப்பது இந்திய நாட்டின் பெருமைக்கு சீர்குலைவு, இந்த மனிதாபிமானமற்ற இச்செயல் கண்டிக்கப்பட வேண்டும். இச்சட்டம் நலிவுற்ற மக்களைக் காப்பாற்றக் கொண்டு வந்த சட்டமாகும். மொத்தத்தில்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா. 4.1976 ம் ஆண்டு கொத்தடிமைச் சட்டத்தின் சாரத்தை எழுதுக.

கொத்தடிமை குழந்தைத் தொழிலாளர் இல்லாத நாடு பெருமையான நாடாகவும் வளர்ச்சி அடைந்த நாடாகக் கருதப்படும்.

## 9.7 அகதிகள் மற்றும் இடம்பெயர்ந்தோர் உரிமைகள்

அகதிகள் என்பார் ஒரு நாட்டிலிருந்து பிறிதொரு நாட்டிற்கு அச்சுறுத்தல் காரணமாகவோ அல்லது தவிர்க்க இயலாத பிற காரணங்களாலோ சென்று, மீண்டும் அவர்களது நாட்டிற்குச் செல்ல இயலாமல் இருக்கக் கூடிய நபர்கள் அகதிகள் என வரையறுக்கலாம். தங்களது தாய் நாட்டிலிருந்து, சொந்த இடத்திலிருந்து, குடியிருந்த இடத்திலிருந்து, பிற நாட்டிற்குச் சென்றவர்கள் அகதிகள், தவிர்க்க முடியாத காரணங்கள் முறையே போர், உள்நாட்டுக் குழப்பம், அரசியல் பேதங்கள், மனித உரிமை மீறல்கள் போன்றவற்றால் வலுக்கட்டாயமாக உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகப் பிற நாடுகளுக்குச் செல்ல வேண்டியுள்ளது. மேலும் இனம், மதம், தேசியம் மற்றும் சமூக அமைப்புக்களின் உறுப்பினர், அரசியல் கருத்து ஆகியவற்றின் அடிப்படைகளில் மக்கள் பாதிக்கப்படுவதால் அவர்கள் அந்நாடுகளை விட்டுப் பிறநாடுகளுக்குச் செல்ல வேண்டியுள்ளது. இந்த அடிப்படைகள் எளிதில் மாறக் கூடிய தன்மைகள் அல்லாததால், திரும்பவும் அவர்கள் தங்களது நாடுகளுக்குச் செல்ல முடிவதில்லை. சில நபர்கள் அவர்களது நாடுகளுக்குச் செல்வும் விரும்பாமல், பிற நாடுகளிலேயே தங்கி விடுகின்றனர். 2001ம் ஆண்டில் 14.9 மில்லியன் அகதிகளும் 22 மில்லியன் இடம் பெயர்ந்தோர்கள், தங்களது உயிர்களைக் காக்க பன்னாட்டு எல்லையைக் கடந்து, பிற நாடுகளில் வசித்து வருகின்றனர்.

பன்னாட்டு மனித உரிமை மகாசாசனப் பிரகடனத்தில் பிரிவு 14ல் குடிமக்கள் தங்களது தண்டனைகளிலிருந்து தப்பித்துக் கொள்ள பிற நாடுகளில் அடைக்கலம் கேட்கலாம் எனக் கூறுகின்றது. மனித உரிமை மீறல்களால் பாதிக்கப்பட்ட மக்கள், தங்களது நாட்டை விட்டு வெளியே சென்று சுதந்திரமாக பிற நாடுகளில் தஞ்சம் பெறுவதற்கு இக்கோட்பாடு அனுமதிக்கின்றது. அகதிகள் அனைவரும் மனித உரிமை மறுக்கப்பட்ட காரணங்களாலே பிற நாடுகளுக்கு அகதிகளாகச் செல்கின்றனர். உலக அளவில் அகதிகள் பிரச்சினை எல்லா நாடுகளையும், எல்லாக் கண்டங்களையும் பாதித்தது. மொத்தத்தில் 2001ம் ஆண்டு 78 விழுக்காடு அகதிகள் 10 நாடுகளிலிருந்து வந்தவர்களாகக் கணக்கிடப்பட்டுள்ளது.

அவை ஆப்கானிஸ்தான், அங்கோலா, பர்மா, பிருண்டி, காங்கோ, எரிப்டோரியா, ஈராக், பாலஸ்தீனம், சோமாலியா, சூடான் ஆகிய நாடுகளிடம் உலக அளவில் அகதிகள் பிரச்சினை நீண்ட நெடிய காலமாக இருப்பதுவும், அதிகமான அகதிகளைக் கொண்டதுவும் பாலஸ்தீனமாகும். ஏறத்தாழ 25 விழுக்காட்டினர் இவர்களாகும். ஆசியாக் கண்டத்தில் 45 விழுக்காடும், ஆப்பிரிக்காவில் 30 விழுக்காடும், ஐரோப்பாவில் 19 விழுக்காடும், வட அமெரிக்காவில் 5 விழுக்காடும் அகதிகள் எண்ணிக்கையாக இருந்து வந்துள்ளது. எனவே அகதிகள் பிரச்சினை எல்லாக் கண்டங்களிலும் உள்ள பிரச்சினை என்பதை அறிந்து கொள்ளலாம்.

உலக வரலாற்றைப் படிக்கும்பொழுது ஒரு நாட்டில் பாதிக்கப்பட்டோர் அல்லது தண்டிக்கப்பட்டோர் பிற நாடுகளுக்கு தப்பித்துக் கொண்டு சென்று, தஞ்சம் அடைந்து அகதிகளாக வாழ்ந்து வருவதை அறிந்து கொள்ளலாம். இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் தஞ்சம் பெறுவது உரிமையாக 1948ம் ஆண்டு உலக மனித உரிமை மகாசாசனம் பிரகடனத்தில் சேர்க்கப்பட்டது. பின்னர் அகதிகளுக்கு உதவி செய்யும் வகையில் தனியாக ஐ.நா. அகதிகள் ஆணையாளர் என்ற உயர்மட்ட அலுவலகம் ஒன்று உருவாக்கப்பட்டது. அகதிகளுக்கு சட்டபூர்வமான உரிமை வழங்க 1951ல் ஐ.நா. பொது அவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. இத்தீர்மானத்திற்கு இதுவரை 140 நாடுகள் ஆதரவு தெரிவித்துள்ளன.

அகதிகளுக்கு ஆதரவு, தஞ்சம் ஆகியவற்றை நாடுகள் பல காலமாகவே வழங்கி வருகின்றன. வளமிக்க தொழில்மயமான நாடுகள் இவ்வுதவிகளை வழங்கி வந்துள்ளன. ஐரோப்பா, தென் அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகள் முதன்முதலாக பன்னாட்டு அகதிகள் பாதுகாப்பு முறைமையை ஏற்படுத்தின. இவை வரையறுக்கப்பட்ட குறிப்பிட்ட கொள்கை மற்றும் வேறுபாடு ஆகிய காரணங்களுக்காக மட்டும் வழங்கப்பட்டன. நாடுகள் அகதிகளை முறையாக நடத்தவில்லை. அவர்களுக்கு சமூக, பொருளாதார உரிமைகள் ஆகியன மறுக்கப்பட்டன. அத்துமீறி அகதிகள் கைது செய்யப்பட்டனர். சில நாடுகள் மறுபடியும் அந்தந்த நாடுகளுக்கு கட்டாயமாக திரும்பவும் அனுப்பி வைத்தன. பயங்கரவாதத் தடுப்புச் சட்டம் என்ற பெயரில் பல நாடுகள் சட்டமியற்றி, அகதிகளின் மனித உரிமைகளை மறுத்தன.

மனித உரிமைகளின் காவலன் என்ற அமைப்பு உலக நாடுகளின் மனித உரிமைகளுக்காகப் பாடுபடக் கூடிய அமைப்பாகும். இது தஞ்சம் பெறும் உரிமை அகதிகளின் உயிர்களைக் காக்க, மரணத்திலிருந்து தப்பிக்க வைக்கும் உரிமையாக இருப்பதால் இவ்வுரிமையை யாரும் மறுக்கக் கூடாது. உலக நாடுகள் அனைத்திலும்

மனித உரிமை மீறல்கள் ஏற்படாதவாறு ஒவ்வொரு நாடும் அகதிகளுக்கு பாதுகாப்பு வழங்க வேண்டும். எனவே ஐக்கிய நாடுகள் சபையும், நாடுகளும் அகதிகளைப் பாதுகாக்க உரித்தான நடவடிக்கைகளை நேரத்திற்கு நேரம் எடுக்க வேண்டும். அகதிகளும் மனிதர்கள்தான் என்ற அளவில் முறையாக மரியாதையுடன் நடத்தப்பட வேண்டும். இது மாதிரியாக, இடம் பெயர்ந்தோர்களின் நலன் மற்றும் உரிமைகளையும் நாடுகள் காக்க வேண்டும்.

### 9.8 பன்னாட்டு அகதிகள் சட்டத் தோற்றமும் வளர்ச்சியும் :

முதன்முதலாக பன்னாட்டு அளவில் அகதிகள் பிரச்சினையைத் தீர்ப்பதற்காக சர்வதேச சங்கம் முதல் முயற்சியை 1921ம் ஆண்டு எடுத்தது. உயர்மட்ட ஆணையாளர் என்ற பதவியை 1921ம் ஆண்டு ஜூன் 27ம் தேதி நியமித்தது. இந்த உயர்மட்ட ஆணையம் உலக நாடுகளில் உள்ள அகதிகளின் பிரச்சினையைத் தீர்த்து வைக்க முயற்சித்தது. அனைத்து நாடுகளையும் ஒருங்கிணைத்து, அகதிகள் பிரச்சினையைத் தீர்க்கும் பணியில் இது இறங்கியது.

இந்த உயர்மட்ட ஆணையாளரின் பணிகளாவன,

1. அகதிகளின் சட்டபூர்வ நிலையைத் தீர்மானித்தல்.
2. அகதிகளின் மறுவாழ்வு நடவடிக்கைகளை வரையறுத்தல், பலநாடுகளில் உள்ள அகதிகளுக்குத் தேவையான உதவி செய்தல்
3. மனிதாபிமானமாக நன்கொடையளிக்கும் மக்களிடமிருந்து, நாடுகளிலிருந்து பெற்று மறுவாழ்வுப் பணிகள் செய்தல்

1924ம் ஆண்டு அர்மேனிய அகதிகள், மற்றும் 1928ம் ஆண்டு துருக்கி அகதிகள் ஆகியோர்களுக்குத் தேவையான அனைத்து வசதிகளையும் செய்து மறுவாழ்வு நடவடிக்கைகளை எடுத்தது இந்த ஆணையம்.

சர்வதேச சங்கத்துடன் பிற பன்னாட்டு ஒப்பந்தங்கள் அகதிகள் மறுவாழ்விற்கு உதவியுள்ளன. 1993 அக்டோபர் மாதம் 28ல் நடைபெற்ற அகதிகள் பற்றிய மாநாடு 1983 ம் ஆண்டில் ஜெர்மானிய அகதிகளின் பிரச்சனை பற்றிய மாநாடு ஆகியன அகதிகள் பிரச்சினையை ஆழமாக ஆராய்ந்தன. ஜெர்மானிய அகதி மாநாட்டை பெல்ஜியம், பிரான்சு, இங்கிலாந்து ஆகிய நாடுகள்

முழுமையாக ஆதரிக்கவில்லை. ஆயினும் இந்த மாநாட்டை 9 நாடுகள் ஒப்புக் கொண்டு கையெழுத்திட்டன. மேலும் 8 நாடுகள் இம்மாநாட்டை அங்கீகரித்தனவாயினும் கையெழுத்திடவில்லை. அந்நாடுகள் வருமாறு. பெல்ஜியம், பல்கேரியா, செக்கோஸ்லோவோகியா, டென்மார்க், பிரான்சு, இத்தாலி, நார்வே மற்றும் இங்கிலாந்து ஆகியனவாகும். சர்வதேசச் சங்கம் அகதிகள் பிரச்சினையைத் தீர்த்து வைக்கப் பெரும்பாடுபட்டாலும், அதனால் முழுமையாக வெற்றி பெறவில்லை. ஏனெனில், அகதிகள் பற்றிய பன்னாட்டுச் சட்டம் தொடக்க நிலையில்தான் உள்ளதே தவிர, வளர்ந்ததாகத் தெரியவில்லை. ஐக்கிய நாடுகள் சபை தோன்றியதிலிருந்தே அகதிகள் பிரச்சினை பெரும் பிரச்சினையாக அமைந்ததால் தொடர்ந்து அப்பிரச்சினையைத் தீர்ப்பதில் கவனம் செலுத்தியது. இரண்டாம் உலகப்போர்தான் அதிகமான அளவில் அகதிகளை உருவாக்கியதென்போரும் உண்டு. மனிதாபிமானமற்ற வகையில் ஆயிரக்கணக்கான மனிதர்கள் மற்றும் தோல்வியுள்ள நாடுகளின் தலைவர்கள் ஆகியோர்களைப் பிடித்து சித்திரவதை செய்ததுவும் மறக்க முடியாத ஒன்று.

### 9.9 இனப்படுகொலை (Genodice):

இனப்படுகொலை என்பது அதிக அளவில் மனிதாபிமானமற்ற வகையில் செய்யப்படுகின்ற கொடுமையான செயலாகும். இதனை நாகரீகமிக்க எவரும் ஏற்றுக் கொள்வதில்லை. 1946ம் ஆண்டு ஐ.நா. பொது அவை இனப்படுகொலை என்பது ஒரு குற்றச் செயல் எனத் தீர்மானம் நிறைவேற்றியது. இச்செயலில் ஈடுபடக்கூடிய தனிநபர்களாயினும் அரசு அதிகாரிகளாயினும் தண்டிக்கப்பட வேண்டியவர்கள் என வரையறுத்துள்ளது. எனவே இனப்படுகொலை செயலில் ஈடுபடக் கூடியவர்கள் பன்னாட்டு நீதிமன்றத்தின் மூலம் தண்டிக்கப்பட வேண்டும். உலகில் எங்காவது இனப்படுகொலை நடைபெற்றால் அச்செயலில் ஈடுபட்டோர்களை உலக நீதிமன்றமான பன்னாட்டு நீதிமன்றம் மூலம் தண்டனை வழங்க வேண்டும். ஒரு நாட்டையோ, இன வழியினரையோ, மரபு வழியினரையோ, மதச் சார்புடையோரையோ கொல்ல நினைத்து செய்யப்படும் செயல்கள் இனப்படுகொலைச் செயல்கள் என வரையறுக்கப்பட்டுள்ளது. இச்செயல்களின் மூலம் வேண்டுமென்றே துணிந்து பிற மக்களின் உயிர், உடைமை ஆகியவற்றை முழுமையாகவோ, பகுதியாகவோ, அழிக்க முற்படுவர். திட்டமிட்டே பிறர்களுக்கு துன்பம் தரும் நெறியில்லா மக்கள்தான் மக்கள்தான் இவ்வகைச் செயல்களில் ஈடுபடுகின்றனர். எனவே இனப்படுகொலை என்பது பன்னாட்டுச்

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
5. இனப்படுக் கொலை பற்றி சிறு குறிப்பு தருக.

சட்டத்தின்மூலம் ஒரு குற்றச் செயலாக வரையறுக்கப்பட்டுள்ளது. மேலும் இனப்படுகொலை செய்பவர்கள் மட்டுமின்றி, இனப்படுகொலையைத் தூண்டுபவர்களையும் தூண்டிச் செயல்பட உதவுபவர்களையும் தண்டிக்க வேண்டுமென்பதுவும் பின்னாளில் சேர்க்கப்பட்டது. இதுபற்றி 1951ம் ஆண்டு ஜனவரி மாதம் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு செயல்பட்டு வருகின்றது.

1965ம் ஆண்டிலிருந்து ஐந்து முறைகள் இனப்படுகொலை உலகளவில் நடைபெற்றுள்ளது. இவற்றால் அதிக அளவில் மனித உயிர்கள் மாய்க்கப்பட்டுள்ளன. 1965ம் ஆண்டு இந்தோனேசியா, சீனாவுக்கு எதிரான இனப்படுகொலை, நைஜீரியக் கலகம் 1968ம் ஆண்டு, 1971ம் ஆண்டு வங்காள மக்கள் மீதான பாகிஸ்தான் இனப்படுகொலை. 1972ல் ஹிட்டன்கள் மீதான பிருண்டியின் இனப்படுகொலை மற்றும் இந்தியர்கள் மீதாக ஈராக் செய்த இனப்படுகொலை ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும். இவற்றில் பாகிஸ்தான், ஈராக் ஆகிய நாடுகள் நடத்திய இனப்படுகொலை ஒப்பந்த நாடுகளைக் கோபத்திற்கு உள்ளாக்கின.

ஐ.நா. உயர்மட்ட அகதிகள் ஆணையாளர் என்ற பதவி உருவாக்கப்பட்டதென்பதை அறிவோம். ஐ.நா. பொதுச் சபையின் வழிகாட்டலுக்கேற்ப இவர் பணியாற்ற வேண்டும். அகதிகள் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு காண்பதுவும், அகதிகளை விடுவித்து, அவர்களுக்கு நலவாழ்வு அளிப்பதே இவரின் கடமையாகும். ஐ.நா. பொது அவை ஐ.நா. அங்கமான பொருளாதார, சமூக மன்றம் ஆகியவற்றின் முடிவுகளைச் செயல்படுத்தும் பொறுப்பு இவருக்கு உண்டு. இவை தவிர கீழ்க்கண்ட பணிகள் இவருடையதாகும். அவை.

1. பன்னாட்டு ஒப்பந்தங்கள் அகதிகள் மறுவாழ்வு பெறும் வகையில் அவ்வொப்பந்தங்களை ஆய்வு செய்து, மாற்றங்கள் ஏதேனும் தேவைப்பட்டால் அம்மாற்றங்கள் குறித்து தனது கருத்தைக் கூறுவது,
2. நாடுகளோடு அகதிகள் வாழ்வை மேம்படுத்தவும், சீர்திருத்தம் செய்யும் நோக்கில் சிறப்பு ஒப்பந்தங்களை ஏற்படுத்துதல்.
3. அகதிகளை மீண்டும் அவர்களது நாட்டிற்குச் செல்ல நாடுகளுடன் ஒத்துழைத்தல்.
4. நாடுகளில் அகதிகள் வாழ்வைக் காத்தல்.

5. அகதிகளின் சொத்துக்களை அந்தந்த நாட்டின் அனுமதியோடு அச்சொத்துக்களை அகதிகளுக்குக் கிடைக்க வழி செய்தல்

6. நாடுகளில் உள்ள அகதிகளின் எண்ணிக்கை குறித்த செய்திகளைத் திரட்டல், அகதிகள் தொடர்பான சட்டங்கள், ஒழுங்கு முறைகள் ஆகியன பற்றிய செய்திகளை அறிந்து, கண்காணித்தல்.

7. தனியார் நிறுவனங்களோடு நெருங்கிய தொடர்பினை ஏற்படுத்தி அகதிகளின் மறுவாழிவிற்குரிய நடவடிக்கைகளை சேர்ந்து செய்தல்.

8. அகதிகளின் மறுவாழ்வு நடவடிக்கைகளை மேற்கொள்ள தனியார் அமைப்புக்களோடு நெருங்கிய தொடர்பை வளர்த்தல்.

9. அகதிகள் அவர்களது சொந்த நாட்டிற்கு திரும்பவும் சென்று வாழ வழிவகை செய்யும் எல்லா வகையான நடவடிக்கைகளையும் செய்ய இவர் பொறுப்பு கொண்டுள்ளார். இதற்கு நிதி தேவைப்படும் என்பதால், இந்நிதி நாடுகளிடமிருந்தும் தன்னார்வ அமைப்புகளிடமிருந்தும், தனியார்களிடமிருந்தும் பெற்று அகதிகள் மறுவாழ்விற்கு செலவழிக்கப்படுகின்றது. அரசாங்கங்களுக்கு கோரிக்கை விடுத்து நிதியைப் பெறுகின்றார் இவர்.

ஐ. நா. அவையின் தலைவர் ஐ.நா. அகதிகள் உயர்மட்ட ஆணையாளர் பதவிக்குத் தகுதியான பெயரை முன்மொழிவார். இதனை ஏற்பது ஐ.நா. வின் பொது அவையாகும். ஐ.நா. பொது அவையின் ஒப்புதலுக்குப் பின்னர்தான் இவர் பதவியில் அங்கம் வகிக்க முடியும். இவருடைய பதவிக்காலம் ஐந்து ஆண்டுகள். இந்த அலுவலகம் சுவிட்சர்லாந்தின் தலைநகரான ஜெனிவாவில் உள்ளது. இவருக்கு உதவி செய்வதற்காக ஆட்சிக் குழு ஒன்று உள்ளது. இதுதான் இவருடைய செயல்திட்டங்களை வகுக்கக் கூடியது. ஜனவரி 1 முதல் டிசம்பர் 31 வரை என்னென்ன செய்ய வேண்டுமெனக் கூறும். இக்குழுதான் இந்த அலுவலக தணிக்கையையும் மேற்கொள்ளும். ஒவ்வொரு ஆண்டும் அக்டோபர் மாதம் ஜெனிவாவில் அகதிகள் மாநாட்டைக் கூட்டிப் பிரச்சினைகளை விவாதிக்கும்.

இவருக்கு உதவி செய்வதற்கென நிலைக்குழு ஒன்று உள்ளது. இது ஒவ்வொரு ஆண்டும் 4 முறை கூடி, தனது செயல்திட்டங்களைப் பரிசீலித்து ஆலோசனை செய்யும் அகதிகள் மறுவாழ்விற்கு என்னென்ன அவசியமானதென்பதை முடிவு செய்து அவற்றை நிறைவேற்றும். இந்த உயர்மட்ட ஆணையாளரின் ஒரே ஒரு முக்கிய நோக்கம் அகதிகள் பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வு கண்டு அகதிகள் என்ற பேச்சே வராத அளவிற்கு கொண்டு வருவதாகும். எனவே இப்பிரச்சினைக்குரிய அனைத்துத் தேவையான நடவடிக்கைகளையும் இவர் செய்வார்.

## 9.10 தொகுப்புரை:

இந்தியாவில் மத்திய,மாநில அரசாங்க நடவடிக்கைகளின் மூலம் இப்பிரச்சனைகளுக்கு தீர்வு காணலாம். உலக அளவில் ஐ.நா சபையின் உரிய நடவடிக்கைகளின் மூலம் தீர்வு ஏற்படுத்தலாம் என்பது பொதுவான கருத்தாகும்

## 9.11 முக்கிய வார்த்தைகள் :

பன்னாட்டு பொது உரிமை கழக, ஐரோப்பிய மனித உரிமை ஆணையம், நிதித் துறை, காவல்துறை, ஈராக், அமெரிக்க பெண்கள் உரிமை, இடம் பெயர்ந்தோர்

## 9.12 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான பதில்கள் :

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 9.2 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 9.3 ல் அறிக

வினா எண்.3 இந்த வினா விடையை பகுதி எண் 9.4 ல் அறிக

வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 9.6 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 9.9 ல் அறிக

## 9.13 மாதிரி வினாக்கள்:

1. குழந்தை தொழிலாளர் பிரச்சனைகளை எழுதுக.
2. அகதிகள் மறுவாழ்வில் அவசியம் பற்றி எழுதுக.
3. பன்னாட்டு நிறுவனங்கள் சிறுவர்கள் உரிமைகளுக்கு எடுக்கப்பட்ட நடவடிக்கைகளை ஆராய்க.

## 8.11 பரிந்துரை நூல்கள் :

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

# அலகு - 10

## தேசிய மனித உரிமை ஆணையம் மற்றும் மாநில மனித உரிமை ஆணையம்

### அறிமுகம்

### தேசிய மனித உரிமை ஆணையம்

மனித உரிமைகளைப் பாதுகாக்கும் வகையில் மத்திய அரசாங்கம் 1993ம் ஆண்டு மனித உரிமை பாதுகாப்புச் சட்டம் என்பதை இயற்றியது. இச்சட்டம் 12-10-1993ஆம் ஆண்டிலிருந்து நடைமுறைக்கு வந்துள்ளது. இந்தச் சட்டத்தின் அடிப்படையில் அமைக்கப்பட்ட தேசிய மனித உரிமை ஆணையம் மற்றும் மாநில மனித உரிமை ஆணையத்தின் அமைப்பு மற்றும் அதன் செயல்பாடுகளை இப்பகுதியில் காண்போம்.

### நோக்கங்கள்

1.இந்திய தேசிய மனித உரிமை ஆணையத்தின் அமைப்பு, பணிகள் மற்றும் அதிகாரங்களை கூர்நோக்கல்

2. மாநில மனித உரிமை ஆணையத்தின் செயல்பாடுகளை அறிதல்

### வடிவ அமைப்பு

#### உட்கூறுகள்

10.1 தேசிய மனித உரிமை ஆணையத்தின் அமைப்பு

10.2 பணிகளும் அதிகாரங்களும்

10.3 விசாரணை அதிகாரம்

10.4 விசாரணை செயல்முறை

10.5 விசாரணைக்குப் பின் செய்யும் செயல்கள்

10.6 இராணுவம் குறித்து இதன் செயல்முறை

10.7 ஆண்டறிக்கையும் பிற அறிக்கைகளும்

10.8 மாநில மனித உரிமை ஆணையம்

10.9 அமைப்பு

10.10 அறிக்கை தாக்கல்

10.11 தொகுப்புரை

## 10.1 தேசிய மனித உரிமை ஆணையத்தின் அமைப்பு:

தேசிய மனித உரிமை ஆணையத்தில் ஒரு தலைவரும், 7 உறுப்பினர்களும் இடம் பெற்றுள்ளனர். தேசிய மனித உரிமை ஆணையத் தலைவர் தலைமை நீதிமன்றத் தலைமை நீதிபதிக்கு இணையானவர். உறுப்பினர்களில் ஒருவர் தலைமை நீதிமன்ற நீதிபதி மற்றொருவர் உயர்நீதிமன்ற தலைமை நீதிபதிக்கு ஒப்பானவர்களாக இருக்க வேண்டும். மனித உரிமை தொடர்பான விஷயங்களில் அனுபவமும் அறிவும் நிறைந்தவர்களிலிருந்து இருவர் உறுப்பினர்களாக நியமிக்கப்படுவர். தேசிய சிறுபான்மை ஆணையத் தலைவர் தாழ்த்தப்பட்ட பழங்குடியினர், தேசிய ஆணையத் தலைவர் மற்றும் தேசிய பெண்கள் மேம்பாட்டாணையத் தலைவர் ஆகியோர்கள் உறுப்பினர்களாவர். இவ்வாணைய நிர்வாக அதிகாரியாக தலைமைச் செயலாளர் அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார். இதன் தலைமையகம் புதுடில்லியில் உள்ளது. தவிர, ஆணையம் மத்திய அரசாங்கத்தின் பிற இடங்களில் அலுவலகங்களை அமைக்க அதிகாரம் கொண்டுள்ளது.

தேசிய மனித உரிமை ஆணையத் தலைவர் மற்றும் உறுப்பினர்களை குடியரசுத் தலைவர் நியமனம் செய்கின்றார். இவர்கள் பிரதமர் தலைமையில் உள்ள குழுவின் பரிந்துரையின் பேரில்தான் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கின்றார். இக்குழுவில் பிரதமர் தவிர, மக்களவைத் தலைவர், உள்துறை விவகாரங்கள் அமைச்சர், மக்களவை எதிர்க்கட்சித் தலைவர், மாநிலங்களவைத் தலைவர் ஆகியோர் உறுப்பினர்களாக உள்ளனர். இவ்வாணையத்தில் நீதிபதிகள் உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் நீதிமன்ற தலைமை நீதிபதிகளின் ஒப்புதலுக்குப் பின்னரே நியமிக்கப்பட வேண்டும்.

தேசிய மனித உரிமை ஆணையத் தலைவர் மற்றும் உறுப்பினர்களை குடியரசுத் தலைவர் அவர்களது நடத்தை மற்றும் இயலாமை ஆகிய காரணங்கள்

நிரூபிக்கப்பட்ட பின்னர் தான் நீக்கலாம். தவிர ஊதியம் பெறும் அரசாங்கப் பதவியிலுள்ளோர், மனநிலை பாதிக்கப்பட்டோர், உடல்நிலைக் கோளாறு மற்றும் நீதிமன்றத்தால் தண்டனை பெற்றோர் ஆகியோர்களைக் குடியரசுத்தலைவர் பணியிலிருந்து நீக்கலாம்.

தேசிய மனித உரிமை ஆணயைத் தலைவரின் பதவிக்காலம் ஐந்தாண்டுகள் அல்லது 70 வயது வரையிலும் பதவி வகிக்கலாம். உறுப்பினர்களின் பதவிக் காலம் ஐந்தாண்டுகள், மறுபடியும் ஒருமுறை மறுநியமனம் செய்யப்படலாம். ஆனால் பதவியில் 70 வயது வரையில் மட்டும்தான் இருக்க முடியும். இவர்களது பதவிக்குப் பின்னர் மாநில மற்றும் அரசாங்கப் பணியில் சேரத் தகுதியற்றவர்களாவர். தலைவர் செயல்படலாம் காலியாக இருக்கும் சமயங்களில் உறுப்பினர்களின் ஒருவர் தலைவராக செயல்படலாம். இதற்க்குத் குடியரசுத் தலைவர் ஒப்புதல் தேவை. பதவியில் உள்ள தலைவர் விடுப்பு மற்றும் பிற நேரங்களில் எவ்வளவு காலம் உறுப்பினர் தலைவராகச் செய்யப்படலாம் என்பதையும் குடியரசு தலைவர் நிர்ணயித்து வெளியிடுவார்.

தேசிய மனித உரிமை ஆணையம் அதன் தலைவர் நிர்ணயித்த இடத்தில் குறித்த நேரத்தில் செயல்படும். இந்த ஆணையம் செயல்படும் செயல்முறையை ஆணையமே வரையறை செய்து கொள்ளும். ஆணையத்தின் ஆணைகள் மற்றும் முடிவுகளை தலைமைச் செயலரோ அல்லது தலைவர் அங்கீகரித்துள்ள ஆணையத்தின் பிற அதிகாரிகளோ தணிக்கை செய்வர்.

மத்திய அரசாங்கம் தேசிய மனித உரிமை ஆணையம் செயல்படுத்துவதற்குரிய அதிகாரிகள் மற்றும் பிற வசதிகளை மத்திய அரசாங்கம் செய்து தரும். மத்திய அரசாங்கத்தின் செயலர் அந்தஸ்திற்குரிய ஒருவர், தலைமை இயக்குநர் (Director General of Police) அந்தஸ்துடையவர் விசாரணை அதிகாரியாக இருப்பார். தேசிய மனித உரிமை ஆணயைம் சீராகச் செயல்படுவதற்கு அனைத்து உதவிகளையும் மத்திய அரசாங்கம் செய்து தரும். நிர்வாகத் தொழில் நுட்பமுள்ள அறிவியலர்களை மத்திய அரசாங்கம் ஆணையத்திற்கு நியமனம் செய்து தரும்.

## 10.2 பணிகளும் அதிகாரங்களும் :

மனித உரிமை பாதிக்கப்பட்ட நபரோ அல்லது அரசுசார்பில் கொடுக்கும் அனைத்து மனித உரிமை மீறல்கள் மற்றும் மனித உரிமை மீறல்களைத் தடுக்காத செயல்கள் அனைத்தையும் தேசிய மனித உரிமை ஆணையம் விசாரிக்கும் அதிகாரம் கொண்டுள்ளது. இந்த ஆணையம் மனித உரிமை மீறல் குற்றச் சாட்டுக்கள் நீதிமன்றத்தில் தேங்கியிருந்தால், தாமதமாகிக் கொண்டிருந்தால் அந்நீதிமன்ற அனுமதியுடன் அந்த வழக்கு விசாரணைகளில் ஈடுபடும். அரசாங்க அனுமதியுடன் இந்த ஆணையம் சிறைச்சாலைகளைப் பார்வையிட்டு காவலில் இருப்போர்களின் நிலை மற்றும் சூழ்நிலை ஆகியவற்றை அறிந்து அவர்களின் குறைகள் களையப் பரிந்துரை செய்யும். அரசியலமைப்பால் வழங்கப்பட்டுள்ள மனித உரிமைகள் பாதுகாப்பு வழிகளை ஆராய்ந்து அவற்றைச் சீராக செயல்படுத்த பரிந்துரை செய்யும். மனித உரிமைகள் தொடர்புடைய ஒப்பந்தங்கள், உடன்பாடுகள், பன்னாட்டு உடன்பாடுகள் ஆகியவற்றை அறிந்து அவை இந்தியாவில் நடைமுறைப் படுத்த சீரான பரிந்துரைகளைச் செய்யும். மனித உரிமைகள் மேம்பாட்டிற்கான ஆய்வுகளை இந்த ஆணையம் மேற்கொள்ளும். மனித உரிமைகள் கல்வியை சமூகத்தின் பல பிரிவுகளுக்கும் எடுத்துச் சொல்லி, மனித உரிமைகள் விழிப்புணர்வை ஏற்படுத்தும். இதன் மூலம் மனித உரிமைகள் காக்கப்படும். மனித உரிமைகள் கல்வியை நூல்களாகவும், கூட்டங்கள், மாநாடுகள் மற்றும் பொதுமக்கள் சாதனங்கள் ஆகியவற்றின் வாயிலாகப் பரப்பும். இதனால் மக்கள் மனித உரிமைகளைத் தெரிந்து விழிப்புடன் தங்களது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். அரசு சார்பற்ற நிறுவனங்கள் மற்றும் மனித உரிமை விழிப்புணர்வை நிறுவனங்கள் ஆகியவற்றை ஊக்கப்படுத்தி மனித உரிமைக் கல்வியை வளர்க்கும். இவை தவிர, எவையெவை மனித உரிமைக்குத் தேவையோ அந்த மாதிரியான நடவடிக்கைகள் அனைத்தையும் செய்ய அதிகாரம் கொண்டுள்ளது.

> முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
> 1. தேசிய மனித உரிமை ஆணையத்தின் அதிகாரத்தை கூறுக..

## 10.3 விசாரணை அதிகாரம் :

தேசிய மனித உரிமை ஆணையம் மனித உரிமை புகார்கள் மீதான விசாரணை செய்ய அதிகாரம் கொண்டது. சிவில் நீதிமன்றத்திற்குரிய அதிகாரம் இந்த ஆணையத்திற்கு உண்டு. 1908ம் ஆண்டு சிவில் செயல்முறை தொகுப்பின்படி கீழ்க்கண்ட அதிகாரங்கள் உள்ளன. அவை

1. சாட்சிகளை அழைத்து உறுதிமொழிகளின் கீழ் விசாரிக்க அதிகாரம் உள்ளது.

2. கோப்புகளை அறிந்து தாக்கல் செய்தல்

3. சாட்சியங்களைப் (Evidence) பெறுதல்

4. நீதிமன்ற அலுவலகங்களில் எந்தவொரு பொது ஆணையத்தையும் கேட்டு பெறுதல்,

5. கமிஷன் நிறுவி சாட்சிகளை விசாரித்தல் போன்றவையாகும்.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
2. இந்திய மனித உரிமை ஆணையத்தின் விசாரனை முறையை கூறுக.

### 10.4 விசாரணைச் செயல்முறை :

1. விசாரணை தொடர்பாக எந்தவொரு நடவடிக்கைக்கும் விசாரணை செய்வதற்கு மத்திய அரசாங்கத்தின் புலனாய்வுப் பிரிவை உபயோகப்படுத்திக் கொள்ளலாம்.

2. விசாரணை தொடர்பாக எந்தவொரு அதிகாரியையும் அல்லது செயலாண்மையையும் இந்த ஆணையம் பயன்படுத்திக் கொள்ளலாம். அதாவது,

3. 1. சாட்சிகளை அழைத்து விசாரணை செய்வது

1. எந்தவொரு கோப்புகளையும் கேட்பது

2. எந்தவொரு அரசாங்க கோப்புகளையும் கோரிப் பெறுதல்,

3. எந்தவொரு ஆணையத்தையும் அறிந்து அதனை சமர்ப்பிக்கச் செய்வது ஆகியனவாகும்.

விசாரணையினால் பாதிக்கப்படும் நபர் என்றால் அவருடைய கருத்தை அறிந்து கொள்ள வாய்ப்பு வழங்கப்படும். எந்த நிலையிலும் சாட்சிக்கு வருபவர்கள் குற்றச்சாட்டுக்கு இலக்காகமாட்டார்கள் என்பது உறுதி.

மனித உரிமை மீறல் பற்றிய குற்றச் சாட்டுக்கள் அல்லது புகார்கள் வந்தால் அவற்றை விசாரிக்க முழு அதிகாரம் கொண்டது இந்த ஆணையம். விசாரணை செய்வதற்கு மத்திய, மாநில மற்றும் பிற செயலாண்மைகளிடமிருந்து, உரிய அதிகாரிகளிடமிருந்து புகார்கள் முழுமையான செய்திகளைத் திரட்டுவர். இந்த மாதிரியான உண்மைகள் இவருக்குக் கிடைக்கவில்லையேல் அல்லது புகார்கள் மீதான முடிவுகள் வராத பட்சத்தில் முழு விசாரணையை மனித உரிமை ஆணையமே செய்யும், விசாரித்து உண்மைகளைத் திரட்டும்.

மனித உரிமை ஆணைத்திற்கு வரும் புகார்கள் விசாரிக்க தகுதியுடையனவா என்று ஆராயும். இப்புகார்கள் குறித்து அரசாங்கமே நடவடிக்கை மேற்கொள்ளும் பட்சத்தில் புகார் செய்தவர்களுக்கு ஆணையம் இதனைத் தெரிவிக்கும்.

## 10.5 விசாரணைக்குப் பின் செய்யும் செயல்கள் :

தேசிய மனித உரிமை ஆணையம் தீவிர விசாரணை மேற்கொண்ட பின்னர் எடுக்கும் நடவடிக்கைகளாவன,

1. மனித உரிமைகள் மீறலோ அல்லது மனித உரிமைகள் மீறலைத் தடுக்கக் கவனமாக இருந்தாலும் அரசாங்க அதிகாரிமீது விசாரணை முடிவுகள் இருந்தால் அவர்மீது நடவடிக்கை மேற்கொள்ள சம்பந்தப்பட்ட அரசாங்கத்திற்கோ அல்லது அமைப்பிற்கோ பரிந்துரை செய்யும்.
2. தலைமை நீதிமன்றத்தையோ அல்லது உயர்நீதிமன்றத்தையோ அணுகி மேற்படி விசாரணை முடிவிற்கேற்ப வழிகாட்டியோரை ஆணைகளையோ அல்லது நீதிப்பேராணையையோ பெற முயற்சிக்கும்.
3. மனித உரிமைகள் மீறலில் பாதிக்கப்பட்ட நபருக்கோ அல்லது குடும்பத்திற்கோ இடைக்கால நஷ்டஈடு வழங்க சம்பந்தப்பட்ட அரசாங்கத்திற்குப் பரிந்துரை செய்யும்.
4. புகார் அளித்த மனுதாரருக்கோ அல்லது அவரது பிரதிநிதிக்கோ விசாரணை அறிக்கையை வழங்கும்.
5. விசாரணை அறிக்கையைத் தனது பரிந்துரைகளுடன் அரசாங்கத்திற்கு நடவடிக்கை எடுக்க அனுப்பி வைக்கும். இதன் பரிந்துரைகளை ஒரு மாதத்திற்குள்ளோ அல்லது குறித்த காலக்கட்டத்திற்க்குனோ நடவடிக்கையை அரசாங்கம் எடுக்க வேண்டும். அரசாங்கம் என்னென்ன நடவடிக்கைகள் இந்த அறிக்கையின் பரிந்துரையில் எடுக்கப்பட்டனவென்றும், என்னென்ன நடவடிக்கை எடுக்க உத்தேசிக்கப்பட்டுள்ளதென்றும், நடவடிக்கைகள் குறித்து விபரம் ஆணையத்திற்குத் தெரிவிக்க வேண்டும்.
6. ஆணையம் தனது அறிக்கையை அரசாங்கத்தின் குறிப்புரைகளோடு (Comments) பிரசுரிக்கும். இதில் அரசாங்கம் நடவடிக்கைகள் மற்றும் உத்தேசித்துள்ள நடவடிக்கைகள் ஆகிய தெளிவாக இடம் பெறும்.

## 10.6 இராணுவம் குறித்து இதன் செயல்முறை :

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
3. இராணுவ வீரர்கள் குறித்த புகாரை தேசிய மனித உரிமை ஆணையம் எவ்வாறு விசாரிக்கிறது.

இராணுவ வீரர்கள் குறித்து புகார்கள் ஏதேனும் தேசிய மனித உரிமைகள் ஆணையத்திற்கு வந்தால் அதன் செயல்முறைகளாவன.

1. புகார்கள் பெற்றதும் ஆணையம் அப்புகார்களை மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பு, அதனின் விளக்கத்தைக் கேட்கும். மத்திய அரசாங்கம் அனுப்பியுள்ள விளக்கத்திற்குப் பின்னர் நடவடிக்கை தேவையா? இல்லையா? என்பதை ஆணையம் முடிவு செய்யும் நடவடிக்கை தேவையாயின் அதனை மத்திய அரசாங்கத்திற்குப் பரிந்துரை செய்யும்.
2. மத்திய அரசாங்ம் ஆணையத்தின் பரிந்துரைகள் மூன்று மாத காலத்திற்குள் நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்குமேல் காலம் ஆணையம் வழங்கியிருந்தால் அந்த வரையறுத்த காலக் கட்டத்திற்குள் நடவடிக்கை எடுக்க வேண்டும்.
3. ஆணையம் தனது அறிக்கையை அரசாங்கத்திற்கு செய்த பரிந்துரைகளுடன் பரிசிலிக்கும்.
4. புகார் தெரிவித்தவருக்கோ அவரது பிரதிநிதிக்கோ அறிக்கையின் ஒரு பிரதி வழங்கப்படும்.

## 10.7 ஆண்டறிக்கையும் பிற அறிக்கைகளும் :

1. தேசிய மனித உரிமைகள் ஆணையம் தனது விசாரணைக்குப் பின்னர் நடவடிக்கைகள், பரிந்துரைகள் ஆகியன குறித்து ஆண்டறிக்கையை மத்திய அரசாங்கத்திற்கும், சம்பந்தப்பட்ட மாநில அரசாங்கத்திற்கும் சமர்ப்பிக்கும். சில முக்கியமான விசாரணை குறித்த அறிக்கைகள், ஆண்டறிக்கை சமர்ப்பிப்பது தாமதமாகுமாயின் சிறப்பு அறிக்கைகளை அரசாங்கங்களிடம் சமர்ப்பிக்கும். இவை அத்தியாவசியத்த தேவை என உணரும் சமயங்களில் சிறப்பு அறிக்கைகள் தாக்கல் செய்யப்படும்.
2. மத்திய மாநில அரசாங்கங்கள் அறிக்கைகளை பாராளுமன்றத்தின் ஒவ்வொரு அவையிலும் மாநில அரசாங்கங்கள் சட்ட மன்றங்களிலும் சமர்ப்பிக்க வேண்டும். அறிக்கைகளில் அரசாங்கம் ஆணையப் பரிந்துரைகள் எவையெவை ஏற்கப்பட்டனவென்றும், என்னென்ன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன என்பதையும், ஏன் சில பரிந்துரைகள்

ஏற்கப்படவில்லையென்பதையும், அதற்குரிய காரணங்களையும் தெரிவிக்க வேண்டும். பாராளுமன்ற, சட்டமன்ற அவைகளில் அறிக்கைகளில் விவாதத்திற்கு உட்பட்டு நடவடிக்கைகள் எடுக்கும்படியும் அரசாங்கத்தைக் கூறலாம். மனித உரிமைகளைக் காப்பது இந்த அறிக்கைகள். எனவே இவை முக்கியமானதாக அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும்.

### 10.8 மாநில மனித உரிமை ஆணையம்

மனித உரிமைகளைக் காக்கும் வகையில் மாநில அரசாங்கம் மாநில உரிமை ஆணையத்தை ஏற்படுத்தி வருகின்றது. 1994ம் ஆண்டிலிருந்து பல மாநிலங்களில் இந்த ஆணையம் செயல்பட்டு வருகின்றது.

### 10.9 அமைப்பு :

மாநில மனித உரிமை ஆணையத்திற்கு தலைவர் ஒருவர் தலைமை தாங்கி நடத்தி வருகின்றார். இவர் உயர்நீதி மன்ற தலைமை நீதிபதிக்கு இணையானவர். இவர் தவிர, நான்கு உறுப்பினர்கள் இடம் பெறுகின்றனர். இவர்களில் ஒருவர் உயர்நீதிமன்ற நீதிபதியாகவும், மற்றொருவர் மாவட்ட நீதிபதியாகவும் இருக்க வேண்டும். மற்ற இரு உறுப்பினர்கள் மனித உரிமைகள் தொடர்பான நடைமுறை அறிவும், அனுபவமும் கொண்டவராக இருத்தல் வேண்டும். இந்த ஆணையத்திற்கு தலைமை நிர்வாக அதிகாரியாகச் செயலர் ஒருவர் இடம் பெறுவார். மாநில அரசாங்கம் அனுமதித்துள்ள அத்துணை அதிகாரங்கள் பெற்று மாநில மனித உரிமை ஆணையத்தை இயக்குவார். மாநில மனித உரிமை ஆணையத்தின் தலைமையிடம் மாநில அரசாங்கம் நிர்ணயித்துள்ள இடத்தில் அமைந்து செயல்படும் தமிழகத்தில் சென்னையில் இந்த அலுவலகம் அமைந்துள்ளது. அரசியலமைப்பின் ஏழாவது அட்டவணையில் அமைந்துள்ள வரிசை III மற்றும் III-ல் இடம்பெற்றுள்ள விஷயங்களில் மனித உரிமை மீறல் குறித்து விசாரித்து, ஆராய்ந்து, அறிக்கை சமர்ப்பிக்கும்.

மனித உரிமை ஆணையத் தலைவர் மற்றும் உறுப்பினர்களை மாநில ஆளுநர் நியமனம் செய்வார். இவர்கள் நியமனம் முதலமைச்சர் தலைமையில் அமைக்கப்பட்டுள்ள குழுவின் பரிந்துரையின் பேரிலேயே நியமனம் செய்யப்படுவர். இக்குழுவின் முதலமைச்சர் தலைவராகவும், சட்டமன்ற அவைத் தலைவர், மாநில

அரசின் உள்துறை அமைச்சர், சட்டமன்ற எதிர்க்கட்சித் தலைவர் ஆகியோர் உறுப்பினர்களாக இருப்பார்கள். மாநிலங்களில் சட்டமன்ற மேலவை இருந்தால், சட்டமன்ற மேலவை எதிர்க்கட்சித் தலைவரும் உறுப்பினராக இருப்பார். நீதிபதிகள் உறுப்பினர்களாக நியமனம் செய்யப்படும்போது உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியின் ஒப்புதலைப் பெற வேண்டும். ஒப்புதல் பெற்ற பின்னர்தான் பணியிலுள்ள நீதிபதிகள் மனித உரிமை ஆணைய உறுப்பினர்களாக நியமனம் செய்யப்பட வேண்டும்.

மனித உரிமை ஆணையத் தலைவர் மற்றும் உறுப்பினர்களை குடியரசுத்தலைவர் தவறான நடத்தையோ அல்லது இயலாண்மையின் காரணமாகவோ நீக்கலாம். இது முறைப்படியாக தலைமை நீதிமன்ற விசாரணைக்குப் பின்னர்தான் செய்யப்பட வேண்டும். தவிர, திவாலானவர்களோ, ஊதியம் தரும் பணியில் இருந்தாலோ, மனநிலை பாதிக்கப்பட்டவரோ, உடல் நிலை பாதிக்கப்பட்டவரோ, அறநெறிக்கு மீறிய செயல்களில் ஈடுபட்டு குற்றத் தண்டனை பெற்றவர்களோ உறுப்பினர்களாக இருக்க முடியாது.

மாநில மனித உரிமை ஆணையத்தின் உறுப்பினர்களின் பதவிக் காலம் ஐந்தாண்டுகள் ஆகும் அல்லது 70 வயது வரையில் உறுப்பினர்கள் பதவியில் இருக்கலாம். இவற்றில் எது முன்னர் உள்ளதோ அது செயல்படுத்தப்படும். பணிபுரிந்த உறுப்பினர்கள் மறுபடியும் நியமனம் செய்யப்படலாம். ஒரே ஒரு முறைதான் மறுநியமத்திற்குத் தகுதியானவர்கள். பணியில் இருந்து ஓய்வு பெற்ற மனித உரிமை ஆணையத் தலைவர் மற்றும் உறுப்பினர்கள் அரசாங்கத்தின் ஊதியம் பெறும் பதவிகளில் சேரத் தகுதியானவர்கள் அல்ல. தலைவர், உறுப்பினர்கள் ஆகியோர்களின் ஊதியம், பணிக் கட்டுப்பாடுகள் போன்றவற்றை மாநில அரசாங்கம் நிர்ணயம் செய்யும்.

மாநில அரசாங்கத்தின் செயலர் அந்தஸ்திற்கு குறைவில்லாத செயலர் ஒருவர் மாநில மனித உரிமை செயலராக இருப்பார். விசாரணை செய்வதற்கு காவல் துறையில் தலைமை காவல் ஆய்வாளருக்குக் (IG) குறைவில்லாத ஒருவர் இதற்கு விசாரணை அதிகாரியாக நியமனம் செய்யப்படுவார். மனித உரிமை ஆணையம் பணிகளைத் திறம்படச் செய்வதற்குப் போதுமான காவல்துறை மற்றும் பிற அதிகாரிகள் நியமிக்கப்படுவர். மாநில அரசாங்கம் இவ்வாணையத்திற்குத் தேவையான நிர்வாக, தொழில் நுட்ப மற்றும் அறிவியலர்கள் ஆகியோர்களை

நியமனம் செய்யும். தேசிய மனித உரிமை ஆணையம் மாதிரியாக மாநில அளவில் இதன் செயல்பாடுகள் இருக்கும்.

## 10.10 அறிக்கை தாக்கல்:

மாநில உரிமை ஆணையம் மனித உரிமை மீறல் வழக்குகளை முறைப்படி விசாரித்து அறிக்கையை மாநில அரசாங்கத்திற்கு தாக்கல் செய்யும். ஒவ்வொரு ஆண்டும் ஆண்டறிக்கையைத் தாக்கல் செய்யும். சில சிறப்பு வழங்குகளையும் மனித உரிமை ஆணையம் விசாரிக்கும். அந்த வழக்குகளின் அறிக்கைகளையும் மாநில அரசாங்கத்திடம் தாக்கல் செய்யும். ஆண்டறிக்கையோடுதான் இதனையும் தாக்கல் செய்ய வேண்டுமென்று காத்திருக்க வேண்டியதில்லை.

முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவு சோதனை வினா.
5. மாநில மனித உரிமை ஆணையத்தின் அறிக்கை தாக்கல் முறையை கூறுக.

மாநில உரிமை ஆணையம் அறிக்கையில் மாநில சட்ட மன்றங்களின் பார்வைக்கு வைக்கப்படும். மாநில சட்டமன்ற ஓரவையகா இருந்தாலும், ஈரவையாக இருந்தாலும், அறிக்கை முழுமையாக விவாதத்திற்கு எடுக்கப்படும். அறிக்கைகளை முழுமையாக விவாதித்து, தேவையான ஆவன நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். மாநில மனித உரிமை ஆணையப் பரிந்துரைகளில் எத்தனை பரிந்துரைகள் ஏற்கப்பட்டுள்ளன. எத்தனை பரிந்துரைகள் நிராகரிக்கப்பட்டுள்ளன. அதற்குரிய காரணங்கள் ஆகியனவற்றைச் சட்டமன்றம் தெளிவு படுத்தும்.

மனித உரிமை ஆணைய அறிக்கைக்குப் பின்னர் மாநில அரசாங்கம் சில குறிப்பிட்ட வழக்குகளை மறுபடியும் விசாரிக்கப்படுவதற்கு ஏதுவாக சிறப்பு புலனாய்வக்குழுவையோ அல்லது குழுக்களையோ மாநில அரசாங்கம் நியமனம் செய்யலாம். அவ்விசாரணை அறிக்கைகளைப் பெற்றுத் தேவையான நடவடிக்கைகளை அரசாங்கம் எடுக்கும்.

## 10.11 தொகுப்புரை:

மனித உரிமைகளைக் காப்பதற்காகவே முழுவதும் இந்த ஆணையம் செயல்படுவதால் அதில் பணிபுரியும் தலைவர், உறுப்பினர்கள், அதிகாரிகள் ஆகியோர்கள்மீது சட்டபூர்வமான இவ்விசாரணை தொடர்பான வழக்குகள் போட முடியாத அளவில் அவர்களுக்கு பாதுகாப்பு வழங்கப்பட்டுள்ளது. இவர்கள்

அனைவரும் அரசாங்கப் பணியாளர்கள் போல் வரையறுக்கப்பட்ட பணிகளைச் செய்யக் கூடியவர்களாவர்.

**10.12 முக்கிய வார்த்தைகள் :**

மனித உரிமை ஆணையம், பாதுகாப்புச்சட்டம்,புது டெல்லி, நீதிபதி, நீதிமன்றம்,தலைமை இயக்குநர், சாட்சியங்கள்

**10.13 முன்னேற்றத்தை அறிவதற்கான தன்னிறைவுச் சோதனைகளுக்கான பதில்கள் :**

வினா எண்.1 இந்த வினா விடையை பகுதி எண் 10.3 ல் அறிக

வினா எண்.2 இந்த வினா விடையை பகுதி எண் 10.4 ல் அறிக

வினா எண்.4 இந்த வினா விடையை பகுதி எண் 10.6 ல் அறிக

வினா எண்.5 இந்த வினா விடையை பகுதி எண் 10.10 ல் அறிக

**10.14 பரிந்துரை நூல்கள் :**

1. Sinha, Petal, Global Source Book on Human Right in 3 Volumes, Kanishka Publisher and Distributors – 2002.

2. G.S. Bajwa, Human Right in India, New Delhi, Anmol Publications (P) Ltd., 1995.

3. V.V. Devasia and Devasia, Leelamma, Human Rigths and Victimology Nagpur, Dattsons, 1998.

4. R. Thilagaraj, ed, Human Rights and Criminal Justice Administration, New Delhi Publishing Corporation – 2002.

5. Paul, R.C Situations of Human Rights in India, Efficient Offset Printers – 2000.

6. Mishra Pramod, Human Rights Global issues – Kalpur Publications – 2000.

## Model Questions

Answer any five of the following

**Time : 3 hrs** **Marks : 100**

1.Describe the nature and scope of Human Rights
மனித உரிமைகள் இயல்பு மற்றும் நோக்கை விவரி.

2. Trace the Origin of Human Rights.
மனித உரிமைகள் தோற்றத்தை வரையறு.

3. Analyse the rationale of Human Rights.
மனித உரிமைகள் தேவையைப் பகுப்பாய்க.

4. Pointout the main theories of Human Rights.
மனித உரிமைகள் பற்றிய முக்கியமான கோட்டுபாடுகளைக் குறிப்பிடுக.

5. Discuss the problems of Child Labour.
குழந்தை தொழிலாளர் பிரச்சனைகளை விவரி.

6. Bringout the problem of women with regard to their rights.

பெண்கள் உரிமை குறித்து பிரச்சனைகளை வரையறு.

7. Write briefly on European Commission on Human Rights.
ஐரோப்பிய மனித உரிமை ஆணையம் பற்றி சுருக்கமாக எழுது.

8.Describe the Fundamental Rights of the citizens in India.
இந்தியாவின் குடிமக்களின் அடிப்படை உரிமைகளை விவரி.

9. How does Human Rights safeguarded by Directive Principles of State Policy.
வழிப்பாட்டு நெறிக் கொள்கைகளால் மனித உரிமை எவ்வாறு பாதுகாக்ப்படுகின்றது.

10. Write an essay on Human Rights Commission in India.
இந்திய மனித உரிமைகள் ஆணையம் பற்றி ஒரு கட்டுரை எழுது.